# கல்கி

ஸ்ரீடா...ஸ்டைடா...ஸ்மார்டா...


துப்பாக்கி தங்கம்

KALKI ● 24.08.2008 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்




இந்த இதழுடன்
36 பக்க
மெடிக்கல் கையேடு

விஜய்
வின்னர்ஸ்
பம்பர்
பரிசுப் போட்டி
அறிவிப்பு

கலக்கம்
தரும்
காம்ரேடுகள்!



# பைபாஸ் சர்ஜரிக்கு பை-பை

## சொன்னவர்களின் உண்மைக்கதை



**R. Karunanithi, Age:53, Mobile: 94427 04042**
**Tamilnadu State Transport Corporation, Madurai.**

முதற்கண் என் மகிழ்ச்சி கலந்த நன்றியை நியோமெட் மருத்துவர் டாக்டர் சிவபாலன் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். நான் வேகமாக நடக்கும் போதும், கடினமாக வேலைகள் செய்யும் போதும் மார்பு பகுதியில் ஓர் அசாதாரமான ஒரு உணர்வு ஏற்படுவதை உணர்ந்தேன். என் இருதயத்தில் அடைப்பு இருப்பது கண்டறியப்பட்டு பைபாஸ் சர்ஜரி பரிந்துரைக்கப்பட்டது. நியோமெட் மருத்துவமனையில் 3 மாதங்கள் சிகிச்சைக்கு பிறகு எனக்கு அடைப்புகள் நீங்கி ஒரு புதிய சக்தி கிடைத்தது போல் உணர்ந்தேன். சிகிச்சை முடிந்து 3 வருடங்கள் ஆன பிறகும் இன்னும் நான் என் வேலைகளை நன்றாக செய்ய முடிகிறது.



**S.Tamil Maran, Age: 57, Dharmapuri. Mobile: 94428 52687**

எனக்கு ஜூலை 2006-ல் எதிர்பாராத விதமாக **Heart Attack** என்ற இதய அடைப்பு ஏற்பட்டது. மருத்துவர்கள் பைபாஸ் சிகிச்சை செய்தால்தான் உடல்நலம் பெறும் என்று கூறினார்கள். 90% இரண்டு அடைப்பு உள்ளது என்றும் எட்டு நாட்களில் பைபாஸ் சர்ஜரி செய்யவேண்டும் இல்லையெனில் ஆபத்து நிலையை எதிர்கொள்ள வேண்டியதிருக்கும் என்று கூறினார்கள். இந்த சூழ்நிலையில் அறுவையில்லா பைபாஸ் சிகிச்சை செய்துவரும் நியோமெட் மருத்துவமனையை பற்றி நண்பர்கள் மூலம் அறிந்து டாக்டர் சிவபாலன் அவர்களை சந்தித்தேன். அவரது சிறப்பான சிகிச்சையால் சிதிலமடைந்த என் இதயத்தை சீராக்கி இரண்டரை மாதங்கள் சிறப்பான சிகிச்சை அளித்தார்கள். **Insulin** ஊசி பயன்படுத்திய எனக்கு ஊசியை அகற்றி மாத்திரைகள் மூலம் நீரழிவு நோயை கட்டுப்படுத்தி சிகிச்சை அளித்தார்கள். தற்போது எந்த குறைபாடும் எந்தவித வலியும் இல்லாமல் நன்றாக உள்ளேன். டாக்டரின் ஆலோசனைப்படி உணவு கட்டுப்பாடு உடற்பயிற்சி, யோகா மூலம் சிறப்பாக செயல்படுவதால் இதய நோய்க்கு பைபை சொல்லிவிட்டேன். டாக்டரின் அன்பான உபசரிப்பு, என் தன்னம்பிக்கை கிடைத்த வெற்றியாக கருதுகிறேன்.



**S.N. Krishnamoorthy, Businessman, Age: 64, Chennai. Mobile: 97104 50182**

எனக்கு பிப்ரவரி - 17, 2005-ல் மாரடைப்பு ஏற்பட்டது. ஆஞ்சியோகிராமில் மூன்று இடங்களில் 80% - 90% அடைப்புகள் தெரிய வந்து அறுவை சிகிச்சை பரிந்துரைக்கப்பட்டது. எனக்கு பைபாஸ் சர்ஜரி விருப்பமில்லாததால் அறுவையில்லாமல் பைபாஸ் சிகிச்சை செய்து வரும் நியோமெட் மருத்துவமனையில் இரண்டரை மாதம் **E.E.C.P** மற்றும் **Artery Clearance Therapy** எடுத்துக் கொண்டேன். அதன் பிறகு செய்த **TMT - Negative** என்று வந்தது. கார்டியோகிராம் பரிசோதனையிலும் இருதயத்திற்கு குறைபாடு இல்லாமல் இரத்தம் செல்வதும் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த அற்புதமான சிகிச்சை முறையில் எனக்கு புதுவாழ்க்கைத் தந்த நியோமெட் மருத்துவமனையின் தலைமை டாக்டருக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த எளிமையான சிகிச்சை முறையைப் பயன்படுத்தி என் போன்ற பல இதய நோயாளிகள் பயன்பெறட்டும் என்று வாழ்த்துகிறேன்.



**NEOMED HOSPITAL**
CARE FOR BETTER LIVING

**CHENNAI :** 2181, L-Block, 12th Main Road, Anna Nagar, Chennai - 600 040. Ph: 044-26201147, 26200882

**MADURAI :** 11, Lakeview Road, Opp.Sundaram Theatre, K.K.Nagar, Madurai - 625 020. Ph: 0452-2581414, 2581515

**SALEM :** 127/1, 'Varalakshmi Towers', Gandhi Road, Salem - 636 007. Ph: 0427-2311818, 2311819

www.neomedhospitals.com

*Timing: Weekdays 9 am to 6 pm. Sunday holiday.*


மிகச்சிறப்பான
ஷாப்பிங் அனுபவத்தை
நாங்கள் தருகிறோம்!
BIS 916 ஹால்மார்க் தரம், உலகப்புகழ் பெற்ற டிசைன்கள்,
முதல் தரமான சேவை, நேர்மையான விலைக்கொள்கை என
சிறப்பம்சங்கள் பொருந்திய ஷாப்பிங் அனுபவத்திற்கு
உங்களை வரவேற்கிறோம்.








● சுந்தர், பெங்களூரு

**என்ன கிரேஸி... ஒலிம்பிக்ஸில் இந்தியாவுக்குத் தங்கம் கிடைக்குமா?**

'சுட்ட' பசும் பொன்னே கிடைத்து விட்டதே!

● தேவகி, சென்னை

**கிரேஸி... எங்கே ஒரு புதுக் கவிதை எடுத்து விடுங்க பார்க்கலாம்?**

தர்மம் என்ற இலக்கணத்தைக் காப்பதற்காக, மரபுகளை மீறிய கண்ணன் ஒரு புதுக் கவிதை. கேட்டதோ தேவகி. கவிதைக்கு இதைவிட வேறு அழகு என்ன வேண்டும்.

'பையன் மண்ணைத்
தின்றால்
வையாதே, வாய்க்குள் பார்
வையம் தெரியாவிட்டால்
ஐயமே இல்லை,
நீ... யசோதை அல்ல...'



# கிரேஸியைக் கேளுங்கள்

● மஹேஸ்வரி, கிருஷ்ணகிரி

**ஒரு பெண்ணின் இடுப்புக்கு அழகு சேர்ப்பது ஒட்டியாணமா, மேகலையா...?**

குந்தியிருக்கும் குழந்தை!

● கலைமான், குடியாத்தம்

**எது அதிர்ஷ்டம்? எது துரதிர்ஷ்டம்...?**

அளவுக்கு மீறினால் அதிர்ஷ்டமும் துரதிர்ஷ்டமாகும். வாயில் சிங்கப் பல் முளைத்தால் அதிர்ஷ்டம்... சிங்கமே முளைத்தால்...!

● ராகவன், சென்னை

**'விடுதலை' அடைய என்ன வழி?**

'விடு தளைகளை'!

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

**கண்ணிலே நீர் எதற்கு?**

கவிஞர் கண்ணதாசனின் பாடல்



களைக் கேட்டு, காலமெல்லாம் ஆனந்தக் கண்ணீர் வடிப்பதற்கு!

● **ராதா சத்ய நாராயணன், ஸ்ரீரங்கம்**

*நீங்கள் குழந்தையாக இருந்தபோது 'எல்.கே.ஜி - யு.கே.ஜி' படித்தீர்களா?*

kg kgயாக புத்தகங்களை முதுகில் சுமக்கும் L.Kg, U.Kg பிடிப்பு ஸாரி, படிப்பு நான் படிக்க வில்லை. ஆழாக்கு படிப்பு படித்தாலும் அது, ஆளாக்கும் படிப்பாக இருந்தது அந்நாளில்.

● **மு.அழகர், தேனி**

*தங்களைக் கவர்ந்த இலக்கியவாதி யார்? கவர்ந்த சிறந்த இலக்கியம் எது?*

இலக்கியவாதி கண்ணன். வாழ்க்கையின் இலக்கை நோக்கி இயக்கும் இலக்கியம் கீதை!

● **என்.கோமதி, நெல்லை**

*காலம் பின்னோக்கிச் செல்ல ஆரம்பித்து, வயது குறைந்து கொண்டே போனால் என்ன ஆகும்?*

கட்டெறும்பு வளர்ந்து கழுதையாகும்!

நீ எங்க இருந்தாலும் அழகுதான்டா செல்லம்!

● **ஸ்ரீநிதி, கே.கே.நகர்**

*எது மூலதனம்?*

புத்தகங்கள்... படிக்காமல் ஜம்பத்துக்குப் பெட்டியில் பூட்டி வைத்தால் 'மூலை-தனம்; புத்தியில் போட்டு வைத்தால் 'மூளை - தனம்.'

● **பகவன் தாஸ், பெரம்பலூர்**

*தேடல் தேடல் என்கிறார்களே... அது ரொம்ப கஷ்டமான காரியம் போலத் தோணுதே கிரேஸி?*

தேடல் கஷ்டமெனில், தொலைந்து விடுங்கள். வேறு வழியில்லாமல் தேடியது நம்மைத் தேடி வரும். தேடல் ஆராய்ச்சி. தொலைதல் அனுபவம். பம்மல் கே. சம்பந்தம் சொல்வது போல 'ஆரா யாதே அனுபவி...'

● **தாணுமாலயன், திருவண்ணாமலை**

*அய்யா பின்பற்றுவது எந்த வேதாந்தம்?*

அமரர் தேவனின் 'மிஸ்டர் வேதாந்தம்'.




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**
உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**
வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி:
**044 - 4343 8888 (30 lines)**
தொலைநகல்: **044 - 4343 8899**
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்:
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு:
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

தமது புத்தக வெளியீட்டு விழாவில் பேசிய கருணாநிதி, "இந்தத் தோழமை தீபம் நாம் அரும்பாடுபட்டு வளர்த்தது. இதை அணையாமல் காப்போம்" என்று காம்ரேடுகளுக்கு உருக்கமாக வேண்டுகோள் வைத்துள்ளார். அன்று அதே மேடையில் இருந்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் ராஜ்ய சபா உறுப்பினர் டி.கே.ரங்கராஜனிடம் முதல்வரின் வேண்டுகோளைப் பற்றிக் கேட்டோம்.

"அன்றைய கூட்டத்தில், முதல்வர் கடைசியாகப் பேசியதால், எங்கள் கருத்தைச் சொல்ல வாய்ப்பில்லை. முதல்வர் கருத்தில் எங்களுக்கு உடன்பாடில்லை. மதவாத சக்திகளை தமிழகத்தில் வளர விடாமல் தடுப்பதற்கு, இணைந்து பணியாற்றுவோம் என்கிறார் கலைஞர். காங்கிரஸ் கட்சி, மதவாத பா.ஜ.க.வை எதிர்ப்பதற்கான பலத்தை இழந்து கொண்டே வருகிறது என்பது எங்கள் கருத்து. பா.ஜ.க.விடம் நாடு முழுவதும் தோற்றுக்கொண்டே வரும் காங்கிரஸ், ஒரு நொண்டிக்குதிரை. அந்த நொண்டிக் குதிரையை உடன் வைத்துக்கொண்டு மதவாத சக்திகளை எதிர்க்கச் சொல்கிறாரா கலைஞர்?

**"காங்கிரஸ் ஒரு நொண்டிக் குதிரை. அதோடு கூட்டணி வைத்துக்கொண்டு மதவாத சக்திகளை எதிர்க்கச் சொல்கிறாரா கலைஞர்?"**

# கலகம் செய்யும்

அடுத்து காங்கிரஸ் கட்சியை வடக்கு தெற்கு என்று பிரித்துப் பேசுகிறார். தமிழகத்தில் தனிக்கட்சியாக காங்கிரஸ் செயல்பட்டுக் கொண்டிருக்கிறதா என்ன? தமிழகத்தில் இடதுசாரி மற்றும், ம.தி.மு.க. இரண்டு எம்.பி.க்கள் தவிர, மீதி 33 பேரும், நம்பிக்கை தீர்மானத்தில் அரசுக்கு ஆதரவாக வோட்டுப்போட்டு, அணு ஒப்பந்தத்தை ஆதரித்தவர்கள்தானே! இதே கலைஞர், தொலைக்காட்சிப் பேட்டி ஒன்றில், 'கம்யூனிஸ்டுகளுக்கு முன்னரே நான் யோசித்தேன். நாட்டு நலன்களுக்கு ஏற்றதல்ல அணு ஒப்பந்தம்' என்று பேசிவிட்டு, பின்னர் மௌனம் சாதித்து ஒப்பந்



டி.கே.ரங்கராஜன்

தத்தை ஆதரித்தது ஏன்?

'பாபர் மசூதி பிரச்னையால், பா.ஜ.க. கொடூரத்தைப் புரிந்துகொண்டோம்' என்கிறார் கலைஞர். 1992ல் மசூதி இடிக்கப்பட்டது. ஆனால், 1999ல் அதே பா.ஜ.க.வுடன் இணைந்து மத்தியில் ஆட்சி நடத்திய கலைஞர், இதைச் சொல்வது வியப்பாக அல்லவா இருக்கிறது. எனவே இந்தச் சூழலில் இந்தியாவின் சுய கௌரவத்தையும், சுதந்திரத்தையும் அமெரிக்காவுக்கு அடிமை சாசனம் எழுதிக் கொடுத்த காங்கிரஸை தீவிரமாக எதிர்க்க வேண்டும் என்பதே எங்கள் நிலைப்பாடு. காங்கிரஸை எதிர்ப்போம்; பா.ஜ.க.வைத் தனிமைப்படுத்துவோம். இந்த இரு கட்சிகளுடன் கூட்டணி உறவு வைத்துக்கொண்டுள்ள எந்த கட்சியுடனும், இடதுசாரிகள் தேர்தல் உறவு கொள்வதற்கான வாய்ப்பே இல்லை. இது பற்றி முதல்வர் தான் முடிவெடுத்துக்கொள்ள வேண்டும். எங்களைப் பொறுத்தவரை தேர்தல் பற்றி சிந்திக்கவில்லை. மத்திய அரசின் தவறான பொருளாதாரக் கொள்கை, முதலாளித்துவ ஆதரவு, தாராள மயமாக்கல், விலைவாசி உயர்வு, அணு ஒப்பந்தம் ஆகியவை குறித்து தீவிரப் பிரச்னை கூட்டங்கள் நடத்தி வருகிறோம்'' என்கிறார் ரங்கராஜன்.


★ தா.பாண்டியன்

# காம்ரேடுகள்!

ஆனால், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தா. பாண்டியன், ''எங்கள் நிலைப்பாட்டைத் தெளிவாகச் சொல்லி விட்டோம். கலைஞர் ஓர் அனுபவம் வாய்ந்த தலைவர். வேண்டுகோள் வைத்திருக்கிறார். அவரது வேண்டுகோளை, உரிய நேரத்தில், உரிய வகையில், எங்கள் நிலைபாட்டுக்கு எந்தச் சேதாரமும் இல்லாமல் பரிசீலிப்போம்'' என்கிறார்.



**கம்யூனிஸ்டுகளுக்கு முன்னரே நான் யோசித்தேன். நாட்டு நலன்களுக்கு ஏற்றதல்ல அணு ஒப்பந்தம்.**

**- ப்ரியன்**

# அம்மா திட்டுவா...

"எங்கம்மா எப்பவும் திட்டிக்கிட்டே இருப்பா. சாப்பிடும்போதுகூட திட்டுதான். அதனாலயே சொல்றேன். என் குழந்தைய எதுக்காகவும் திட்டவே மாட்டேன். எப்படி வளர்க்கப் போறேன் பாரு.''

மைதிலி சொன்னவையெல்லாம் மனத்தில் ஓடின.

சொன்னாளே தவிர, அவளால் அப்படி இருக்க முடியவில்லை. குழந்தை மிகவும் படுத்துகிறது. பிடிவாதம், ரோஷம் என்று முரட்டுக் குணங்கள் வந்துவிட்டன. அதனாலேயே மைதிலியிடம் சிடுசிடுப்பு வந்துவிட்டது.

'கத்திரிக்கோலை நீ ஏன் எடுக்கறே? ஸ்டேப்லர் உனக்கு எதுக்கு? சைக்கிள் ஓட்டிட்டு கிச்சனுக்குள்ள வராதே...!'

எல்லாமே முறைப்படுத்த வேண்டிய விஷயங்கள்தான். ஆனாலும், அவள் குரலில் வெளிப்படும் சிடுசிடுப்பு, அதற்கான காரணத்தைப் புரிய வைக்காமல் போய்விடுகிறது.

பாவம்: காலை 5.30 மணிக்கு எழுந்தால் இரவு பதினொரு மணி வரை வீட்டு வேலை நெட்டி முறிக்கிறது. மாமனார், மாமியாருக்குக் காலை டிஃபன் தருவதில் பொழுது விடிந்தால், அடுப்படியைத் துடைத்து, பாத்திரங்கள் கழுவி படுக்கப் போவதற்குள் ஆயாசம்!

குழந்தையை என்ன சொல்வது? ஐந்து வயதுக்கு அவளுடைய சேட்டை அதிகம்தான். அந்த ஃப்ளாட்டில் வேறு குழந்தைகள் இல்லை. நாலு குழந்தைகளுடன் ஆடி, பொழுது போக்க வழியில்லை.

கம்ப்யூட்டரின் யு.பி.எஸ்ஸுக்குள் காசைப் போடுவாள்; பிரின்டரின் நாடாவை உருவிப் போட்டு விட்டாள். கிரெடிட் கார்டுகளை எடுத்து பீரோ தட்டுக்குள் செருகிவிட்டாள். தேடிக் கண்டுபிடிக்க மூன்று நாளாயிற்று.

என்னாலும் அவளோடு நேரத்தைச் செலவிட முடியவில்லை. எப்போதும் வேலை... வேலை.... என்று ஓடிக் கொண்டே இருந்தவன், திடீரென்று முடிவு செய்தேன்.

''செல்லம், நாளைக்கு நாம ஊருக்குப் போறோம்.''

கேட்டவுடனே, ''ஹை ஜாலி!'' என்று துள்ளிக் குதித்தவள், சொன்னாள்:

''ம்... அப்பா, அம்மா வேண்டாம்பா...''

''ஏன்டா செல்லம்?'' கேள்வியாய் பார்த்தேன்.

''அம்மா திட்டுவா.''

குழந்தை சொல்கிறாள். மைதிலிக்குப் பேச்சே வரவில்லை. ○

ஸ்ரீநிவாசன்

# நியூ(ஸ்) ஃபாஷன்!

● சில மாதங்களுக்கு முன் தில்லியில் ஓர் இளம்பெண் கொலை செய்யப்பட்டார். மின்னணு செய்தி ஊடகங்கள் நடத்திய 'முன் விசாரணை' காரணமாக, அந்த இளம்பெண்ணின் தந்தையே குற்றவாளியாகச் சித்திரிக்கப்பட்டு ஜெயிலில் அடைக்கப்பட்டார். பின்னர் நீதிமன்ற விசாரணையின்போது அவர் விடுவிக்கப்பட்டார். இந்த நிலையில் பாதிக்கப்பட்டவரின் மனநிலை எப்படி இருந்திருக்கும்? இந்த நிகழ்வுகளை குறும்படமாகத் தயாரிக்கிறார் தி.மு.க. ராஜ்யசபா உறுப்பினர் வசந்தி ஸ்டான்லி. தன்னார்வத் தொண்டு நிறுவனங்களின் கூட்டமைப்பு இப்படத்தைத் தயாரிக்கிறது. ''சமூக, மீடியா போக்குகளைப் பிரதிபலிக்கும் பல குறும்படங்களை எடுக்கும் திட்டம் இருக்கிறது'' என்கிறார் இந்தக் கூட்டமைப்பின் உந்துசக்தியாகத் திகழும் வசந்தி ஸ்டான்லி.

● ''எங்கள் தலைவர் கட்சிப் பணிக்காக அதிக நேரம் செலவழிக்க வேண்டும் என்று கருதுகிறோம். ஆனால், அவர் நேரத்தை 'சினிமா' அதிகம் எடுத்துக்கொள்கிறது'' என்று வருத்தப்படுகிறார்கள் சமத்துவ மக்கள் கட்சியின் பிரமுகர்கள். அதை சரத்தும் உணர்ந்திருக்கிறாராம். அதனால், அவர் அக்டோபர் இரண்டாம் தேதி குமரி முனையிலிருந்து தமிழக மக்களைச் சந்திக்க, நெடும் பயணம் துவங்குகிறார். தமிழகத்தின் 90 சதவிகித கிராமங்களை டச் செய்யும் வகையில் பயணத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது.


✱ மாஃபா

● ஆயிரக்கணக்கான இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பைப் பெற்றுத் தரும் 'மாஃபா' பாண்டியராஜன் பல எதிர்பார்ப்புகளுடன் பா.ஜ.க.வில் சேர்ந்தார். ஆனால், அங்கு நிலவிய உட்கட்சி அழுத்தம் காரணமாக, நீண்ட காலம் தாக்குப்பிடிக்க முடியவில்லை. விஜயகாந்த் தரப்பிலிருந்து அழைப்புவர, தே.மு.தி.க.வில் சேர்ந்துவிட்டார். இப்போது விஜயகாந்துக்கு சமூக வர்த்தக, பொருளாதார விஷயங்களை 'அப்டேட்' செய்பவர் அவர்தான் என்கிறார்கள். வரும் பாராளுமன்றத் தேர்தலில் மத்திய சென்னை தொகுதியில் பாண்டியராஜனை நிறுத்தும் யோசனையில் விஜயகாந்த் இருப்பதாகச் சொல்கிறார்கள். தமது பிஸியான வேலைகளுக்கிடையே, மாலை நேரங்களில், தே.மு.தி.க. கூட்டங்களிலும் வெளுத்துக் கட்டுகிறார் பாண்டியராஜன்.

– ப்ரியன்

# என் துணிகள் இப்ப என் குழந்தையோட சருமம் போல மென்மையா இருக்கு.

- திருமதி ஷில்பா சிவகுமார்

நான் எப்பவும் பிரீமியம் டிடெர்ஜென்ட் உபயோகிப்பேன். அம்மாவா இருக்கறவங்களப்பத்தி தெரியாதா? குழந்தைக்காக நாம செய்யறது போதுமாங்கற கவலை எப்போதும். ஒரு நாள் என் அம்மாதான் கம்ஃபர்ட் உபயோகிக்கச் சொன்னாங்க. என் குழந்தையோட துணிய அதுல துவைச்சேன். தொட்டுப் பாத்தா ரொம்ப மென்மையா இருந்திச்சி. அத நான் எங்க துணிகள்ளயும் உபயோகிச்சேன். அதோட விளைவுகள் அசர வச்சிது. துணிகளுக்கு ஒரு மாயிஸ்சரைசரப் போல மென்மை தருது. துணிகள மறுபடியும் மறுபடியும் தொட்டுப் பாக்க தோணுது என் குழந்தையோட மிருதுவான சருமம் போல. உபயோகிச்சிப் பாருங்க. உங்களுக்கே புரியும்.



அழையுங்கள்
1800-22-8080.
வாருங்கள், கம்ஃபர்ட்
மென்மையை பகிர்ந்து
கொள்ளுங்கள்.

**கம்ஃபர்டை உபயோகிக்கும் முறை:** 1 துணிகளை வழக்கம்போல் டிடெர்ஜென்ட்டால் துவையுங்கள் 2 இப்போது அரை பக்கெட் தண்ணீரில் அரை மூடி கம்ஃபர்ட்டை சேருங்கள் 3 துவைத்த துணிகளை ஐந்து நிமிடம் வரை பக்கெட்டில் ஊற வையுங்கள் 4 துணிகளை எடுத்து மறுபடியும் அலசாமலேயே காயப்போடுங்கள்

# ஒலிம்பிக்

(நடிகர் சங்கத்தில் அனைத்து நடிக - நடிகைகளும் அவசரமாகக் கூடுகின்றனர்.)

**சரத்குமார்:** இங்க நாம எதுக்காகக் கூடியிருக்கோம்னா... சீனாவுல நடக்கிற பீஜிங் ஒலிம்பிக் போட்டியில நம்ம நடிகர் சங்கம் சார்பா யாராச்சும் தங்கம் வாங்கணும். அதுக்காக யார், யார் எந்தெந்தப் போட்டியில கலந்துக்கப் போறீங்க? உடனே சொல்லுங்க...

**ராமராஜன்:** சார், நான் பால் கறக்கற போட்டியில கலந்துக்கறேன். 'முத்துப் பேச்சி நீ அருமையுள்ள பேச்சி'ன்னு பாடியே பாலைக் கறந்துடுவேன்.

**ரஜினி:** அப்படி ஒரு போட்டி இல்லவே இல்லை.:. வேற...வேற ஏதாச்சும்...

**சிம்பு:** வில் வித்தை மாதிரி விரல் வித்தை காட்டட்டுமா... சினிமாவுலயே விரலை வெச்சிதான் வியாபாரம் பண்ணிட்டு இருக்கேன்.

(அப்போது விஜயகாந்த் உள்ளே வருகிறார்.)

**சரத்:** இதோ நம்ம கேப்டன் வந்துட்டாரு. பம்பரம் விடுற போட்டியில கலந்துக்க வெச்சோம்னா நமக்குத்தான் தங்கம்.

**விஜயகாந்த்:** இங்க... பாருங்க... உலகம் முழுக்க, யாரு கூப்புடறாங்களோ இல்லியோ. ஆனா நான் 2,100 மன்றத்துல கொடியேத்தணும். எழுபது எடத்துல பொதுக்கூட்டம் பேசணும், இருபத்திரண்டு தலைவருங்களுக்குப் பதில் அறிக்கை படிக்கணும். நாலு கட்சியோட கூட்டணி பேசணும்.

**ரஜினி:** எனக்கும் நிறைய வேலையிருக்கு... பத்து மன்னிப்பு கடிதம் எழுதணும். நாலு படத்துக்கு டிஸ்கஷன் போகணும். பேரனோட கொஞ்சணும்.

**சரத்:** சார்... பேசாம நீங்க 'பல்டி' அடிக்கிற போட்டியில கலந்துக்கங்க. இப்பதான் அடிக்கடி அடிக்கிறீங்களே... ஈஸியா தங்கம் வாங்கிடலாம்.

(அப்போது பணக்கட்டுடன் அஜித் உள்ளே வருகிறார்.)

**அஜித்:** இந்தாங்க... தங்கம்தானே வாங்கணும். ஏதாச்சும் ஜுவல்லரிக்குப் போய் தங்கம் வாங்கிக்கங்க. என்னாலான பங்கு என்னவோ அதை நான் கொடுத்துட்டேன்.



**ஜாலி ஸ்டோர்ஸ்**

# ஒழிக!



**உத்தமபுத்திரன்**

**கார்த்திக்:** ஹலோ...மேன்... பணம் கொடுத்துட்டுப் போனா என்ன அர்த்தம்? தங்கம், விலைக்கு வாங்கறது இல்ல... போட்டியில ஜெயிக்கணும். காசுக்கு வாங் கறதா இருந்தா என் கட்சியை வித்தா வது பணம் கொடுக்க மாட்டேனா... என்ன...?

**ரஜினி:** கபடி போட்டிக்கு என் மரு மகன் தனுஷை அனுப்புவோம். யாராலயும் கைல புடிக்க முடியாது. அப்படிப் புடிச் சாலும்... விளக்குமாத்துக் குச்சிய உருவிப் போடற மாதிரி, கை, காலை உருவிப் போட்டுட்டு ஓடி வந்துடுவாரு.

**சரத்:** ஏம்பா... நடிகரைப் பத்தியே யோசனை பண்ணிட்டு இருக்கமே நடிகைகளையும் போட்டிக்கு அனுப்ப லாமே...

**விஜயகாந்த்:** அனுப்பணும்... தாய்க் குலங்களோட ஆதரவு எப்பவும் நமக்குத் தேவை. 'பாக்ஸிங்' போட்டிக்கு நம்ம நமீ தாவை அனுப்பலாம். மேடையில ஏறி நின்னதும்... நடுவர்கள் எல்லாமே நாக்-அவுட் ஆயிடுவாங்க... மார்க்கை அள்ளி வீசிடுவாங்க.

**குஷ்பு:** ஏன் நாங்க மட்டும் நடிகைங்க இல்லையா... என்னையும், ராதிகா அக்கா வையும் அனுப்புங்க...

**ரஜினி:** அதெல்லாம் முதியோர் ஒலிம் பிக்ல கலந்துக்கலாம்... இதுல வேணாம்.

**ராதிகா:** அப்போ... நாங்க வயசான வங்களா...? வா குஷ்பு... நாங்க வெளி நடப்புச் செய்யறோம். *(இருவரும் கோப மாக வெளியே வருகின்றனர்)*

*(அப்போது ராமராஜன் கெட்டப்பில் அமர்ந்திருந்த கமல், தன் வேஷத்தைக் கலைக்கிறார்.)*

**கமல்:** 'தசாவதாரம்' படத்துக்கு அப்புறம் எந்த விழாவுக்கும், கூட்டத்துக் கும் என்னை மாதிரி போகப் பிடிக்க மாட்டேங்குது அதான்.

**விஜயகாந்த்:** ஆங்... எனக்கு ஒரு ஐடியா. நம்ம கமலை மாறுவேடப் போட் டிக்கு அனுப்பினா... தயங்காம தங்கம் நமக்குத்தான். என்ன சொல்றீங்க?

**ரஜினி:** மாறுவேடப் போட்டின்னா நானே போறேனே. இப்பதான் 'குசே லன்'ல பல கெட்டப்ல வந்து அசத் தினேனே.

# இது அமெரிக்கா செஞ்ச சதிவேலையாத்தான் இருக்கும்.



**சரத்:** வேணாம் ரஜினி சார்... கமல் மாறு வேஷத்துக்குன்னே பொறந்தவர், அவர்தான் கரெக்ட்.

*(அப்போது விஜய் உள்ளே வருகிறார்.)*

**ரஜினி:** வாங்க... விஜய் உங்களைத் தான் எதிர்பார்த்துட்டு இருந்தேன். பீஜிங் ஒலிம்பிக்ல நம்ம நடிகர்கள் சார்பா நீங்கதான் தங்கம் வாங்கிக் கொடுக்கணும். 'கில்லி' அடிக்கிறதுல நீங்கதானே கிங்கு.

**விஜய்:** அது வந்துங்கண்ணா... படத் துல பல கட் ஷாட் கட்டிங்ல எடுப்பாங் கண்ணா... ஆனா... போட்டியில முடி யாதுங்கண்ணா.

*(சங்கத்துக்குள் 'தலைவர் வாழ்க... அடுத்த முதல்வர் வாழ்க' என்ற கோஷம் கேட்க, அனைவரும் அதிர்ச்சியுடன் திரும்ப... ஒரு படையுடன் ஜே.கே.ரித்திஸ் உள்ளே வருகிறார்.)*

**ரித்திஸ்:** தங்கம் வேணும்ன்னு ஒரு வார்த்தை சொல்லியிருந்தா நான் ஏற்பாடு செஞ்சிருக்க மாட்டேன்? என்னை ஏன் இன்னும் நடிகராவே ஏத்துக்கமாட்டேங் கறீங்க? *(அப்போது ஒருவன் சூட்கேஸ் நிறைய தங்கப்பதக்கங்களை டேபிளில் கொட்டுகிறான்.)* யார்... யாருக்கு எத்தனை வேணுமோ... எடுத்து மாட்டிக்கோங்க...

**சரத்:** போச்சு... நம்மள அவமானப் படுத்திட்டாரு. தம்பி.. நாங்க... இந்தத் தங் கத்தைச் சொல்லல. ஒலிம்பிக் தங்கத்தை வாங்கறதைப் பத்திப் பேசறோம்.

*(அப்போது வைகைப் புயல் வடிவேலு கையில் ஒரு லிஸ்ட்டுடன் அரக்கப் பரக்க... அண்டர்வேர் தெரிய ஓடி வருகிறார்.)*

**வடிவேலு:** ஐய்யயோ... மோசம் போயிட்டோம். சீனாக்காரன் நம்மள ஏமாத் திட்டான்யா.

**ரஜினி:** டேய்...மாப்பு... விஷயத்தைச் சொல்லுடா...

**வடிவேலு:** ஒலிம்பிக்குல... யாரு அசராம அடிவாங்கறாங்களோ அவங்களுக் குத் தங்கம்னு சொன்னான்னுட்டு, உடம் பைத் தேத்தி வெச்சிருந்தேன். இப்ப அந்தப் போட்டியே இல்லியாமே. அது மட்டு மில்ல... இந்த லிஸ்ட்டைப் பாருங்க... பம்பரம், கில்லி, கோலி, ஜல்லிக்கட்டு, அஞ்சாங்கல்லு, பாண்டி எதுவுமே இல்லி யாமே... நான் என்ன பண்ணுவேன்...?

**ரஜினி:**(அதிர்ச்சியோடு) இது அமெரிக்கா செஞ்ச சதிவேலையாத்தான் இருக்கும்.

**ரித்திஸ்:** இதை இப்படியே விடக் கூடாது.

**விஜயகாந்த்:** இப்படியே கூட்டமா போயி... சீன அரசுக்குக் கண்டனம் தெரி விப்போம். நம்ம பாரம்பரிய விளையாட் டைச் சேர்க்காத இந்த ஒலிம்பிக்கைப் புறக் கணிப்போம்.

***(அனைவரும் ஒலிம்பிக் ஒழிக... கில்லி, கோலி, பாண்டி விளையாட்டைச் சேர்க்காத ஒலிம்பிக் ஒழிக... போராடு வோம்... போராடுவோம், பம்பரத்தைச் சேர்க்கும்வரை போராடுவோம்... என கோஷமிட்டபடி செல்கின்றனர்.)*** ○



உ

சிவமயம்

திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டம்

ஸற்குணேஸ்வரபுரம் என்கிற

# கருவேலி

## ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரி ஸமேத

## ஸ்ரீ ஸற்குணேஸ்வர ஸ்வாமி திருக்கோயில்

# மண்டலாபிஷேகப் பத்திரிகை

தஞ்சைத் தரணியின் குடவாசல் வட்டத்தில், காவிரியின் தென்கரையில் உள்ளதுதான் அப்பர் ஸ்வாமிகளால் பாடப் பெற்ற, கருவேலி என்னும் கருவிலி திருத்தலம். சற்குண ராஜனால் திருப்பணி செய்யப் பெற்றதால், சற்குணேஸ்வரபுரம் என்றும் பெயர் பெற்ற கோயிலில், அருள்மிகு ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி, ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரி அம்பாளுடன் சேர்ந்து அருள்பாலிக்கிறார். சிதிலமுற்றிருந்த இவ்வாலயத்தில்,1997ம் ஆண்டு கருவேலி குழந்தை ஐயர் சந்ததியினரால், கிராமவாசிகள், மற்றும் நண்பர்களின் ஒத்துழைப்புடன் திருப்பணிகள் செய்யப் பெற்று, 27.3.1997ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இப்பொழுது ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி சன்னிதிகள், ஸ்வாமி, அம்பாளுக்கு ராஜகோபுரங்கள் புதிதாகக் கட்டப்பட்டும், பிராகாரம், நந்தவனம், திருக்குளம் ஆகியவை புதுப்பிக்கப் பட்டும், 14.7.2008 திங்கட் கிழமையன்று சீறும் சிறப்புமாக மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

அதன் பூர்த்தி விழாவான **மண்டலாபிஷேகம்** வரும் ஆவணி மாதம், 14ம் தேதி **(30.8.2008), சனிக்கிழமை** காலை 8 மணி அளவில், விக்னேஸ்வர பூஜை, ஸ்நபனத்துடன் தொடங்கி அபிஷேகம், தீபாராதனைகளுடன் முடிவடைகின்றது.

விழாவில் கலைமாமணி **காசிம் & பாபுவின்** நாதஸ்வர இன்னிசை இடம்பெறுகிறது.

அன்பர்கள் அனைவரும் மண்டலாபிஷேகத்தில் கலந்து கொண்டு இறைவனை தரிசித்து, இகபர பேறு அடைய பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்

அவ்வண்ணமே கோரும்
Dr.V. கிருஷ்ணமூர்த்தி,
*பரம்பரை தர்மகர்த்தா*

திரு.பொன் சிவசங்கரன், M.A
*நிர்வாக அதிகாரி, கூடுதல் பொறுப்பு*

தெய்வத் திருப்பணியில்,
கிராமவாசிகள் மற்றும்
ஸ்ரீ ஸற்குணேஸ்வரர்
கைங்கர்ய சபா
Ph : 0435 - 2420047

ஸ்ரீ ஸற்குணேஸ்வரர் திருக்கோயில், கருவேலி - 609 501. போன் : **04366 273900.**

*சென்னை அலுவலகம் :*

**Sri Sarguneswara Swami Temple Management Committee,**
6A, Warren Road, Mylapore, Chennai - 600 004. Phone : 044-2499 4535

***கருவேலி:*** கும்பகோணம் - பூந்தோட்டம் சாலையில் கூந்தலூருக்கு வடக்கே ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கருவேலிக்குப் பேருந்து வசதி உண்டு.



# கல்கி



2008 ஆகஸ்ட் 24
ஸர்வதாரி ஆவணி 8
மலர் : 67
இதழ் : 4

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## சொந்த சகோதரர் மீது போர்!

"அமர்நாத் நிலப் பிரச்னைக்கு அமைதித் தீர்வு காண மத்திய அரசு முயன்றுவருகிறது. அனைத்து தரப்பினருக்கும் ஏற்ற தீர்வாக அது அமையும்" என்று இப்போது சொல்கிறார் மத்திய உள்துறை அமைச்சர் சிவராஜ் பாடீல். இந்தச் சுறுசுறுப்பு அமர்நாத் பிரச்னை முளைவிட்டபோதே தோன்றியிருக்க வேண்டும் அல்லவா! இப்போது பிரச்னை சிக்கலாகியிருப்பதுடன் எந்தப் பிரிவினருக்கும் நன்மை தராத வன்முறை, துப்பாக்கிச் சூடு வரையில் கொண்டு விட்டிருக்கிறது! இந்தக் கொடுமைக்கு மத்திய அரசு மட்டுமின்றி, எதிர்க்கட்சிகளும் பொறுப்பேற்றுத்தான் ஆக வேண்டும்.

யாத்திரிகர்கள் பிரச்னை என்பது, ஹிந்து - முஸ்லிம் பிரச்னையாக உருக்கொண்டதை மேலும் வளரவிடாமல் தடுப்பதற்குப் பதில், பா.ஜ.க. போன்ற ஹிந்துமதச் சார்புக் கட்சிகள் தங்கள் அரசியல் ஆதாயத்துக்குப் பயன்படுத்திக் கொண்டன. ஜம்மு-காஷ்மீர் சட்டமன்றத் தேர்தல் நெருங்குகிறதே! சிக்கலான ஒரு கட்டத்தில், ஜம்மு-காஷ்மீர் அரசும் தொலைநோக்குடன் செயல்படத் தவறிவிட்டது.

கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் போல், உணர்வுகள் கொந்தளிக்க ஆரம்பித்த பிறகே மத்திய அரசு அனைத்துத் தரப்புக் கூட்டத்தை அழைத்தது. ஆலயத்துக்கு நிலம் வழங்குவதை எதிர்த்தவர்கள்தான் இந்தப் பேச்சு வார்த்தைகளுக்கு வர




மறுத்தார்கள் எனில், ஸ்ரீ அமர்நாத் சங்கர்ஷ் சமிதியும் அப்பேச்சு வார்த்தைகளைப் புறக்கணித்தது. கவர்னர் ஆட்சியின் கீழ் உள்ள மாநிலத்தில், இந்த சமிதியே சட்டத்தைக் கையில் எடுத்துக் கொண்டது. தான் எதிர்ப்பாளர்களாகக் கருதிய ஃபாரூக் அப்துல்லாவையும் மக்கள் ஜனநாயக கட்சித் தலைவர் மெஹபூபாவையும் விமான நிலையத்திலேயே வழி மறிக்கும் உரிமையை இந்த சமிதிக்கு யார் தந்தது? இதே சமிதி காஷ்மீர் பகுதிக்கு எதிராகப் பொருளாதாரத் தடைகளை விதிக்கும் அதிகாரத்தை யாரிடமிருந்து, எவ்வாறு பெற்றது?

இந்த அக்கிரமங்களை யாராலும் தட்டிக் கேட்க முடியாத நிலையில், காஷ்மீர் மக்கள் தங்கள் விவசாய விளைச்சலையும் பழப் பயிர்களையும் பாக். ஆக்கிரமித்த காஷ்மீரில் உள்ள முஸாஃபராபாதுக்கு எடுத்துச் சென்று விற்க முற்பட்டது நமக்குத்தானே தலைகுனிவு!

காஷ்மீர மக்களை உணர்வுபூர்வமாக இணைத்து, இந்தியாவின் பிற மாநிலத்தவருடன் அரவணைப்பதற்குப் பதிலாக, அந்நியமாக்கிக் கொண்டுவிட்டோம். அது மட்டுமல்ல, முஸாஃபராபாத் நோக்கிச் சென்ற பேரணி மீது துப்பாக்கிச் சூடும் நடத்தி, அவர்களுடைய விரோதத்தையும் பெற்றுவிட்டோம்! நம் நாட்டவர் மீது நாமே பொருளாதாரத் தடை விதித்து, போர் தொடுத்து, பல உயிர்களை பலியும் கொண்டாயிற்று.

பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு காஷ்மீரை நோக்கிய அவர்களது பயணத்தை நியாயப் படுத்திவிட்டோம்! பாகிஸ்தானின் கரங்களையும் ஸங்கர்ஷ் சமிதியின் நடவடிக்கைகள் பலப்படுத்திவிட்டன.

சிக்கலான சூழல்களில் தாமதமாக எடுக்கப்படும் நல்ல முயற்சிகள், எவ்வளவு உயர்நோக்குடையனவாக இருந்தாலும் எடுபடமாட்டா! அத்தகைய சிக்கலில்தான் இன்று இருக்கிறது மத்திய அரசு - ஒரு பிரச்னையை எவ்வாறு வளரவிடக்கூடாது என்பதற்குச் சாட்சியமாக!

அமர்நாத் ஆலயத்துக்கு நிலத்தை ஒதுக்கும் முன்பாகவே பின் விளைவுகள் பற்றிச் சிந்தித்து, அனைத்து தரப்பினரையும் அழைத்துப் பேச முற்பட்டிருந்தால், பிரச்னை தீராமல்கூட போயிருக்கலாம். ஆனால், நிச்சயமாக இவ்வளவு முற்றிப் போய் துக்ககரமாக முடிந்திருக்காது!




# வலிக்காமல் ஒரு குட்டு!

**தி**ருநங்கை திவ்யா கிருஷ்ணனின் விடாமுயற்சி எங்களை மெய்சிலிர்க்க வைத்தது. கூடவே நெஞ்சையும் தொட்டது.

**- ஜி.குப்புசுவாமி, சங்கராபுரம்**

'**அ**வரவருக்குப் பிடித்த ஏதோ ஒன்றை அனுபவித்துப் பண்ணுவார்கள். அது கலையாக இருந்தாலும் சரி, கொலையாக இருந்தாலும் சரி' என்று மதுரை மக்களைப் பற்றி, இயக்குநர் சிம்புதேவன் சிலாகித்தது, 'ஜோக்கிங்'அல்ல 'ஷாக்கிங்'!

**- வே.ந.கதிர்வேல், வேலூர்**

'**வ**லிப்புப் பிரச்னை உள்ளவர்கள் முறையான சிகிச்சை எடுத்துக்கொண்டால் இயல்பாக வாழலாம்' என்ற மருத்துவ ஆலோசனை பயனுள்ளது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**சா**ணக்கியம் என்ற சாக்கில் கலைஞர் சாமர்த்திய முலாம் பூசுகிற முரண்பாடுகளை கல்கி போன்ற இதழ்களே கண்டிக்கின்றன. உதாரணம் தலையங்கம்.

**- அ.மல்லிகா, சென்னை - 78**

**சி**றுகதை போட்டியில் பரிசு பெற்ற 'விசிறி வீடு' படித்து, கண்கள் பனித்தன.

**- கலாவதி தலையூர், சென்னை - 64**

**இ**ந்திராபார்த்தசாரதி பேட்டி, இராமானுஜர் தொடரைப் பார்க்க ஆவலைத் தூண்டியது.

**- என்.காளிதாஸ், சிதம்பரம்**

17.8.08 கல்கி தராசு பதில்கள் பகுதியில், "நூலக ஊழியர்கள் டாஸ்மாக் கடைக்குப் போக நேரமில்லாமல் போய்விடப் போகிறதே என்ற அக்கறையோ என்னவோ!" என பதிலளித்துள்ளீர்கள். இது நகைச்சுவையாகக் கூறப்பட்டிருந்தாலும் நூலகப் பணியாளர்களுக்கு வருத்தமளிப்பதாக உள்ளது.

**- மிக்க வருத்தத்துடன் மாவட்ட மைய நூலகப் பணியாளர்கள், திருவண்ணாமலை**

முற்றிலும் நையாண்டியாக, அரசுடைய அக்கறையின்மை மீதான விமர்சனமாகவே இந்தப் பதில் வழங்கப்பட்டது. நூலக ஊழியர்கள் மனம் புண்படச் செய்ததற்கு வருந்துகிறோம்.

- ஆர்

## வட்டமேஜை

**ச**ரக்குக் கப்பலில் பணி புரியும் ஸ்ரீலட்சுமிப் பிரியா சரக்குள்ள பெண்மணி தான். ரிஸ்க் எடுத்து வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கும் இவர் 'Brisk'கான கடல் கன்னி.

**- எஸ்.உஷா சுதர்சன்**

# சிவராம அறக்கட்டளை

மேற்கண்ட அறக்கட்டளை 1998 முதல் ஸ்ரீபெரும்புதூரில் நடத்திவரும் சிவபீட சிவராம வேத பாடசாலையில் கடந்த பத்து வருடங்களாக நடந்து வரும் கிருஷ்ண, யஜுர், ரிக், ஸாம வேதங்களுடன் புதிதாக ''சுக்ல யஜுர் வேதமும்'' தொடங்கப்பட்டிருக்கிறது. முற்றிலும் இலவசமாக தங்கும் வசதி, உண்ண உணவு, உடுக்க உடை யாவும் வழங்கப்பட்டு வருடம் ஒரு முறை கோடை விடுமுறையின் போது சொந்த ஊருக்கு சென்று வர போக்குவரத்து செலவையும் வழங்குகிறோம். முறையாக பயின்று செல்லும் மாணவனுக்கு தேர்ச்சி பெற்ற தகுதிக்கேற்ப சன்மானமும் வழங்கப்படும். மேலும் வித்தியார்த்திகளுக்கு ஆங்கிலம், கணிதம், சமஸ்கிருதம் முதலிய பாடங்களும் கற்பிக்கப்படுகின்றன.

7 முதல் 12 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு **சுக்ல யஜுர் வேத** அத்யயனம் செய்விக்க விரும்பும் பெற்றோர்கள் கீழ்கண்ட நிர்வாக அலுவலகத்துக்கு விண்ணப்பிக்கலாம்.

**நிர்வாக அலுவலகம்**

**5, லின்வுட் அவின்யூ, மகாலிங்கபுரம், சென்னை - 34**

**தொலைபேசி : 28173810, 28173811**

நேரில் வந்து சந்திக்க விருப்பம் உள்ளவர்கள் மேற்கண்ட விலாசத்தில் காலை 10 மணி முதல் மதியம் 1 மணிக்குள் வந்து விபரம் பெறலாம்.

---

# நில்... கவனி... செல்! கொல்!

## திக்திக் தொடர்கதை 4

'ஆக ஷிப்ராவோடு அவள் வயிற்றில் இருந்த உயிரையும் சேர்த்துக் கொன்றிருக்கிறோம்.' நினைத்தபோதே பவித்ராவின் குற்ற உணர்ச்சியும் இரு மடங்காகியது. கண்கள் செருகத் தொடங்கின. காலையிலிருந்து ஒரு சொட்டு நீர்கூட அருந்தவில்லை.

பவித்ராவின் உடல் தள்ளாடுவதைக் கவனித்த, வேர்க்கடலைக் கூடையுடன் நின்றுகொண்டிருந்த பெண்மணி, வேகமாக அவளருகே வந்து தாங்கிப் பிடித்தாள்.

''போதும்மா, என் கண்ணெதிரே இதே இடத்திலே ஒரு உயிர் போனதைக் கொஞ்ச நாள் முன்னேதான் பார்த்துத் தொலைச்சேன். நீ வேற தண்டவாளத்துல விழுந்து வைக்காதே'' என்று கடிந்தபடி, பவித்ராவை ஓரமாக அழைத்துச்சென்று உட்கார வைத்தாள்.

அருகிலிருந்த டீக்கடையிலிருந்து அவள் வாங்கிக் கொடுத்த தேநீரை மறுப்பின்றிக் குடித்தாள் பவித்ரா.

தேநீர் குடித்ததில் உடம்பில் கொஞ்சம் தெம்பு கூடியிருந்தது. தான் கேட்கத் துடித்த கேள்வியை வெளிப்படுத்தத் தயாரானாள்.

''உங்க பேரு என்ன?''

''குணசுந்தரி.''

''இதே இடத்துல ஒருத்தி இறந்ததைப் பார்த்தேன்னு சொன்னீங்களே... அதைப் பற்றி உங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்ல முடியுமா? செத்துப் போனவ என்னுடைய நெருங்கிய தோழி.''

குணசுந்தரி பவித்ராவைப் பரிதாபம் சுரக்கப் பார்த்தாள். 'ஓ, அதுதான் இந்தப் பொண்ணு தண்டவாளத்துக்கிட்டே போய் அழுதுக்கிட்டு நின்னதா?'

''ஏம்மா, நீயும் உன் சிநேகிதி மாதிரியே ரயில் தண்டவாளத்திலே நின்னபடி குட்டி டெலிஃபோனிலே பேசுறியே, தப்பில்லையா?''

''கொஞ்ச நாள் முன்னே அந்தப் பொண்ணு யார்கிட்டயோ பேசிக்கிட்டே நடந்துக்கிட்டிருந்தது. அப்போ அதுக்கு என்ன கோவமோ வருத்தமோ தெரியலே, 'அடுத்த ஜென்மத்திலே சந்திக்கலாம்'னு அது சொன்னது என் காதுலே விழுந்திச்சு.''

பவித்ராவுக்கு யாரோ சட்டென சாட்டையால் அடித்ததுபோல் இருந்தது. 'அடுத்த செவ்வாயிலே சந்திக்கலாம்' என்று சுற்றுப்புறச் சத்தத்துக்கு நடுவே அவள் கூறியதாகத் தான் நினைத்திருக்க, ஷிப்ரா கூறியது இப்படியா?

குணசுந்தரிக்கு நன்றி கூறிவிட்டு நகர்ந்தபோதிலும், பவித்ராவின் மனத்தில் மீண்டும் மீண்டும் ஷிப்ராவின் வாக்கியம் வித

விதமான வடிவங்களில் எழுந்துகொண்டே இருந்தது.

'அடுத்த ஜென்மத்தில் சந்திக்கலாம்' என்று ஏன் தன்னிடம் ஷிப்ரா கூற வேண்டும்? தன் மீது கோபமா? வெறுப்பா? அதனால்தான் இரண்டு மாதங்களுக்கும் மேலாக தன்னிடம் பேசாமல் இருந்தாளா? எதற்காக? நூலிழைகூடப் பிடிபட மாட்டேன் என்கிறதே.

யோசித்தபடி நடந்துகொண்டிருந்த பவித்ராவின் கால்கள் சட்டென இயக்கத்தை நிறுத்திக்கொண்டன. எந்தச் சூழலில் 'அடுத்த ஜென்மத்தில் சந்திக்கலாம்' என்று ஒருத்தி கூறுவாள்? இறப்பை எதிர்கொள்ளும் நேரத்தில்தானே அப்படிப்பட்ட சிந்தனை எழ வாய்ப்பு இருக்கிறது? அப்படியானால் ஷிப்ராவின் முடிவு விபத்து இல்லையா? தற்கொலையா?

**“என்**னதான் உன் கவலை? சொல்





## "ஷிப்ரா தற்கொலை செய்துக் கிட்டாளோன்னு இப்போ தோணுது"

லேன்டி'' என்று அம்மா கேட்டபோது ஒட்டிக்கொண்டிருந்த பவித்ராவின் உதடுகள், தனிமையில் ''உன் பிரச்னையை என்னிடம் மனம் விட்டுச் சொல்லக் கூடாதா? முடியாதுன்னா சங்கடப்படாதே. அவரவர் அந்தரங்கம் அவரவருக்கு'' என்று அப்பா கூறியபோது திறந்துகொண்டன. விவரமாகக் கூறினாள்.

''அப்படீன்னா ஷிப்ரா தற்கொலை செய்துக்கிட்டான்னா நினைக்கறே? அது உண்மைன்னா, ஷிப்ராவின் இறப்புக்கு நீ காரணம் இல்லேன்னு ஆகுது இல்லையா?''

பவித்ராவின் மனத்தில் சட்டென ஒரு அமைதி பரவியது. அடுத்த கணமே குற்ற உணர்ச்சியும் கோபமும் பொங்கின. அப்பாவை உற்றுப் பார்த்தாள். ஈஸ்வரன் உணர்ந்துகொண்டார்.

''என்ன செய்ய, நீதானே எனக்கு முக்கியம் பவித்ரா?'' என்று கூறியவர், ''சரி, உன்னைத் தவிர ஷிப்ராவுக்கு வேற யார் நெருங்கிய தோழிகள்?'' என்று கேட்டார்.

கல்லூரியில் தன்னுடனும் ஷிப்ராவுடனும் கலகலப்பாகப் பழகிய பலர் நினைவுக்கு வந்தனர். ஆனாலும், தான் தான் அவளுக்கு அதிக நெருக்கம். சொல்லப் போனால், கல்லூரி வாழ்க்கை முடிந்த பிறகும் ஷிப்ராவுடன் தொடர்ந்து தொடர்பு வைத்துக்கொண்டிருந்தது தான் மட்டுமே.

இதைக் கூறியதும் அப்பா ஏற்றுக் கொள்ளாததுபோல் தலை அசைத்தது பவித்ராவுக்கு வியப்பாக இருந்தது.

''கல்லூரியிலே படிச்சவங்களிலே நீ நெருக்கமானவளாக இருக்கலாம். ஆனால், அதற்குப் பிறகு வேறு யாராவது அவளுக்கு நெருக்கமாகி இருக்கலாமே.''

இது அதீத கற்பனை என்று அவளுக்குப் பட்டது. ஆனால், அடுத்தநாளே ஈஸ்வரனின் கோணம் சரிதான் என்றானது.

''பவித்ரா, உன்னிடம் கொஞ்சம் பேசணும்.''

விக்ரம் தொலைபேசியில் அழைத்த விதமே, ஷிப்ரா தொடர்பாக எதையோ கூறத்தான் தன்னை வரச் சொல்கிறான் என்பதை அவளுக்கு உணர்த்தியது.

''என் வீட்டுக்கு வர முடியுமா விக்ரம்?''

''வர்றேனே'' என்ற விக்ரம் நாற்பது



நிமிடங்கள் பொறுத்து அவள் வீட்டினுள் நுழைந்தான்.

''ஷிப்ரா இறந்த ஸ்பாட்டுக்குப் போய் துப்பறியும் வேலையெல்லாம் செஞ்சி யாமே...'' என்றான் வந்ததும் வராததுமாக.

எப்படி இவனுக்குத் தெரியும்? ஒரு வேளை அப்பா கூறியிருப்பாரோ? இருக் காதே! இப்போது அது முக்கியமல்ல.

''லெவல் கிராஸிங்கிட்டே வேர்க் கடலை விற்கிறவ ஒருத்தி இருக்கா விக்ரம். ரொம்ப நல்ல மாதிரி. பேரு குணசுந்தரி...'' என்று தொடங்கிய பவித்ரா, ''அதனாலே ஷிப்ரா தற்கொலை செய்துக்கிட்டா ளோன்னு இப்போ தோணுது'' என்று முடித்தாள்.

சிறிது நேரம் மௌனமாக இருந்த விக்ரம், ''ஷிப்ராவுக்கு லட்சுமின்னு ஒரு நெருங்கிய சிநேகிதி இருந்திருக்கா. உனக் குத் தெரியுமா பவித்ரா?'' என்று கேட்டான்.

லட்சுமி? பவித்ராவின் மூளையின் மூலையில் ஏதோ திரை விலகியதுபோல் தோன்றியது.

**(திக்திக்)**

''ஹலோ, கந்தசாமியா?''

''இல்லீங்க, நான் ராமசாமி.''

''பரவாயில்லை, பேசுங்க; நான் சும்மா தான் போரடிச்சுக்கிட்டு கிடக்கேன்!''

- அனன்யா

# குணமாகுமா

''ஹாலிலிருந்து கிச்சன், கிச்சனிலிருந்து பெட்ரூம், பெட்ரூமிலிருந்து பாத்ரூம், பாத்ரூமிலிருந்து மொட்டை மாடி... கிட்டத்தட்ட பதினைந்திலிருந்து இருபது கிலோமீட்டர்கள் தூரம். என்ன இது? ஒரு நாளைக்கு ஒரு இல்லத்தரசி வீட்டுக்குள்ளேயே நடக்கும் தூரம்! அதனால்தான் ஆண்களைக் காட்டிலும் பெண்கள் அதிகமான அளவு குதிகால் வலியால் பாதிக்கப்படுகின்றனர்'' என்கிறார் ஸ்ரீசாய்ராம் ஹோமியோபதி மருத்துவக் கல்லூரியின் கௌரவப் பேராசிரியர் டாக்டர் என்.ஆர்.ஜெயக்குமார்.

''ஆண்கள் நடப்பது 90 சதவிகிதம் குறைந்துவிட்டது. பெரும்பாலும் டூவீலர், ஃபோர் வீலர்களில் போய்-வந்துவிடுகின்றனர். ஆனால், ஒரு பெண் 20 கி.மீ. தூரம் வரை வீட்டுக்குள்ளே நடப்பதால் பாதங்களில் அதிக உராய்வு ஏற்படுகிறது. இதனால் குதிகால், பாதத்தின் எலும்புகள் பாதிக்கப்பட்டு, நீளமாக வளர்வதால் பெரும்பாலும் குதிகால் வலி ஏற்படுகிறது. பெண்கள் குழந்தைகளுக்குத் தாய்ப்பால் கொடுப்பதால், உடலிலுள்ள கால்ஷியம் சத்து குழந்தைகளுக்குப் போய்





விடுகிறது. எனவே, கால்ஷியம் சத்து நிறைந்த உணவு வகைகள் மற்றும் கால்ஷியம் மாத்திரை எடுத்துக் கொள்ளாமல் இருந்தால், எலும்புகளின் உறுதித் தன்மை பாதிக்கப்படுகின்றது. உரிய நேரத்தில் சிகிச்சைகள் எடுத்துக் கொண்டால் எதிர்மறையான விளைவுகளை மட்டுப்படுத்தலாம்'' என்றவர் குதிகால் வலி ஏற்படக் காரணங்கள், அதன் அறிகுறிகள் குறித்தும் பேசினார்.

''உடலின் எடை முழுவதையும் கால்கள்தான் தாங்குகின்றன. அவற்றுக்கு அழுத்தம் அதிகமாகக் கொடுக்கப்படும் போது, குதிகால் வலி ஏற்படுகிறது. கரடுமுரடான பாதையில் எடை அதிகமான பொருட்களைத் தூக்கிச் செல்லும்போது

பாதத்துக்கும் தரைக்குமான உராய்வு மிகுதியினால் குதிகால் எலும்புகள் பாதிக்கப்படுகின்றன. உடலில் ஏற்படும் கட்டிகள் மற்றும் எலும்பு முறிவுகளின்போது நடையில் ஏற்படும் மாற்றங்கள், குதிகாலை வெகுவாக அழுத்துகின்றன. கடின தோலினால் ஆன காலணிகள் மற்றும் உயரம் அதிகமான காலணிகளைப் பயன்படுத்தும் போதும், கால்களை ஒன்றன் மேல் ஒன்றாகப் பின்னிக்கொண்டு தூங்கும் போதும், குதிகால் பாதிக்கப்படலாம். கால்ஷியம் சத்து குறைவு, ஸ்டீராய்டு, தைராய்டு போன்ற ஹார்மோன்கள் அபரிமிதமாகச் சுரப்பது போன்றவையும் முக்கிய காரணங்கள்.



# குதிகால் வலி?

அறிகுறிகள்னு பார்த்தீங்கன்னா, தூங்கி எழுந்திருக்கும்போது குதிகால் 'விண் விண்'னு வலிக்கும், பின்னர் நடக்க நடக்க சரியாப் போயிடும். சிலருக்கு உட்கார்ந்து விட்டு எழுந்து நடக்கும்போதும், கையில் சூட்கேஸ் போன்ற பொருட்களைத் தூக்கிச் சுமக்கும்போதும் குதிகால் வலி இருக்கும். ஆரம்ப நிலையிலே உரிய மருத்துவரை அணுகினால் சிரமமின்றி இப்பிரச்னையிலிருந்து விடுபடலாம்'' என்கிறார் டாக்டர் என்.ஆர்.ஜெயக்குமார்.

'குதிகால் வலி ஏற்பட்டால் தடுப்பது எப்படி' என்று கேட்டால், ''கரடுமுரடான பாதையில் நடப்பதைத் தவிர்ப்பது நல்லது. குதிகால் வலி சிகிச்சையில் இருக்கும்போது, விளையாட்டில் ஈடுபடக் கூடாது. உடற்பயிற்சி செய்யும் போது மெதுவாகச் செய்ய வேண்டும். காலணி இல்லாமல் நடப்பதைத் தவிர்த்தல் நலம். கைகளால் எதையேனும் நன்கு பிடித்துக்கொண்டு, கால் பெரு விரலை மட்டும் தரையில் ஊன்றி நிற்பது குதிகாலுக்கு ஆறுதலான செயல். இதனை ஒரு நாளைக்கு பத்து முறை செய்யலாம். ஆர்த்ரைடிஸ் மற்றும் எலும்புக் கோளாறுகள் ஏற்பட்டால் அதற்கு சிகிச்சையுடன் கால்ஷியம், வைட்டமின் டி, சி, சத்துகள் கிடைக்க வழி செய்ய வேண்டும். பாத வலி அதிகமாக இருக்கும் இடத்தில் ஐஸ் கட்டி ஒத்தடம் கொடுத்தால் வலி குறையும். வைட்டமின் சி நிறைந்த பழங்களைச் சாப்பிடுவதும், மிருதுவான காலணிகளைப் பயன்படுத்துவதும் வலியின் தீவிரத்தைக் குறைக்கும்'' என்கிறார் டாக்டர் என்.ஆர். ஜெயக்குமார்.

**- கமலி**

* டாக்டர் ஜெயக்குமார்



# "தெய்வச் சிலையெல்லாம் தேவி இங்குனதே"

உயிர்களைப் படைக்கும் சிருஷ்டி கர்த்தாவாக பிரம்மதேவன் விளங்குகையில், அவற்றுக்கு உணர்வு நிலையைத் தந்து அறிவைப் பெருக்கிக்கொள்ள அருள் புரியும் சக்தியாக சரஸ்வதி தேவி விளங்குகிறாள். உணர்வின்றி உயிருக்குப் பயன் ஏது? உணர்வு இல்லாதது ஜடம் அல்லவா! உயிர்களைப் படைக்கும் பிரம்மனும் அவற்றுக்கு உணர்வைத் தரும் சரஸ்வதியும் சதிபதிகளாக விளங்குவது எவ்வளவு அற்புதமான ஜோடிப் பொருத்தம்!

ஜீவன்களின் அறிவை விழிப்பு (பிரஞ்ஞை) நிலையில் வைத்திருப்பதால், கலைவாணிக்கு 'பிரஞ்ஞாப்தி' என்று பெயர் ஏற்பட்டது. நேபாளத்தில் 'பிரஞ்ஞா அபரிமிதா' என்ற பொருள் பொதிந்த பெயருடன் இவள் விளங்குகிறாள்.

உயிர்களின் அதீதமான விழிப்பு நிலைக்கு (supreme consciousness) இவளே காரண சக்தி. இந்த தெய்வங்கள் எல்லாம் நம் கலைமகளுக்கு நெருங்கிய சொந்தம்!

நம் நாட்டில் குழந்தைகளுக்கு முதன் முதலாக அறிமுகம் செய்யப்படும் தெய்வம் சரஸ்வதி. துள்ளித் திரியும் வயதில் துடுக்கடக்கிப் பள்ளிக்குள் இவர்களை வைக்கும்போது, அவர்களின் மழலை மொழிக்குப் பிடிபடுவதாக அமைந்த

*''சரஸ்வதி நமஸ்துப்யம் வரதே! காம ரூபிணி;*
*வித்யாரம்பம் கரிஷ்யாமி*
*சித்திர்பவது மே சதா''*

என்கிற சுலோகத்தைத்தான் முதலில் சொல்லிக் கொடுக்கிறோம்.

'வேண்டிய வரங்களைத் தரும் சரஸ்வதி தேவியே, உன்னை வணங்கி எனது கல்வியைத் தொடங்குகிறேன், நல்லவிதமாக நிறைவேற நீதான் அருள் புரிய வேண்டும்' என்று வேண்டுகிறோம். இசை, நாட்டியம், கல்வி என்று எதைக் கற்கத் தொடங்கினாலும், சரஸ்வதி தேவியை வணங்கித்தான் தொடங்குவோம். ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் உணர்விக்கும் அன்னையல்லவா அவள்!

*வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்*
*வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்*
*ஓதும் வேதத்து உள் நின்று ஒளிர்வாள்*
*கருணை வாசகத்து உட்பொருள் ஆவாள்.*

மாதர் தீங்குரல் பாட்டிலும் மக்கள் பேசும் மழலையிலும் உள்ளாள்;

கீதம் பாடும் குயிலின் குரலும் கிளியின் நாவும் அவள் இருப்பிடம்;

குற்றமில்லாத தொழில் புரிவோரிடம் இருப்பாள். குலவு சித்திரம், கோபுரம்,

கோயில் ஈதனைத்தின் எழிலிடை உற்றாள்-அழகு இருக்கும் இடம் எல்லாம் அவள் உறைவிடம். வேதம் ஒலிக்கும் இடம் எல்லாம் அவள் கோயில். பள்ளிகள், கலாசாலைகள் எல்லாம் அவள் களிநடம் புரியும் இடம். கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது அல்லவா பழமொழி! ஆனால், ''தேடு கல்வி இல்லாத ஊரைத் தீயிட்டுக் கொளுத்துங்கள். அதுவே சரஸ்வதி பூஜை'' என்று அதிரடியாகக் கட்டளை இடுகிறான் மகாகவி பாரதி!

**த**மிழ்நாட்டில் கூத்தனூரில் தனிக் கோயில் கொண்டு விளங்குகிறாள், மகா சரஸ்வதி. புத்தகச் சுவடி, ஸ்படிக மணியில் ஆன ஜபமாலை, கமண்டலம் ஆகியவற்றைத் தாங்கி, பத்மாசனத்தில் அமர்ந்த கோலத்தில், சின் முத்திரை காட்டி காட்சி தருகிறாள். விளக்குச் சுடரின் ஒளியில் இவள் முகத்தில் விவேகத்தின் பொலிவைக் காண்கிறோம். அமைதியின் வடிவம் கூத்தனூர் மகா

## ❖ த.கி.நீலகண்டன் ❖



சரஸ்வதி. ஒட்டக் கூத்தருக்கு கவித்தன்மை அருளிய தேவி.

இதேபோல் கங்கைகொண்ட சோழபுரத்தில் ஞான சரஸ்வதியாகக் காட்சி தருகிறாள். இந்த சிலாரூபம், அற்புதமான கலையழகு மிளிரும் வடிவம்.

பத்ம பீடத்தில் பத்மாசனத்தில் நிமிர்ந்து அமர்ந்த கோலம். பாதங்களில் கொலுசு. மடிப்பு கலையாத ஆடை, இடுப்பில் ஒட்டியா ணம். கைகளிலும் தோள்களிலும் நேர்த்தி யான ஆபரணங்கள். மார்பில் பூணூல். கழுத்தில் நுணுக்கமான வேலைப் பாடுகளுடன் அணிகலன்கள். காதில் மகர குண்டலம். ஜடாமகுடமாக சிரசில் கிரீடம். மேல் இரு கரங்களில் ஜப மாலையும் கமண் டலமும் நளினமாக ஏந்தி யிருக்க, கீழ் இரு கரங் களில் ஒன்றில் ஓலைச் சுவடி ஏந்தி, அதில் காணும் மெய்ப் பொருள் ஒன்றே என்னும் (ஆசி ஹஸ்தம்) முத்திரையாக ஒரு விரலை உயர்த்திக் காட்டுகிறாள். அரைக்கண் திறந்து அரைக் கண் மூடி யுள்ள மோன நிலை. பார்வை மூக்கின் நுனியில் நிலைத்திருக்க, புருவ மத்தியில் சிந்தையை ஒருமித்த ஞான, யோக நிலையில் உள்ள இவளைத் தரிசித்தாலே ஒரு கணம் நமக்கும் அந்த மோன நிலை சித்திக்கிறது! சக்தி வாய்ந்த ஞான வடிவம் இந்த ஞான சரஸ்வதி! சிருங்கேரியில் அரசோச்சும் சாரதையும் சரஸ்வதி தேவியே! அமரத் தன்மை அருளும் அமுத கலசத்தையும், கிளி, ஜப மாலை, புத்தகச் சுவடி ஏந்தி, சின்முத்தி ரையுடன், பத்மாசனத்தில் வீற்றிருக்கும் அழகும் கம்பீரமும் நிறைந்த வடிவம் சாரதா தேவி! முறுவல் காட்டும் முகத்தில் கருணைவெள்ளம் பொங்கி வழியும். பஞ்ச லோகத்தால் ஆன கம்பீரமான கலை வடிவம் சிருங்கேரி சாரதாம்பிகை!



வாக்கின் அதிதேவதையாக விளங்கும் இவளுக்கு வாக்தேவி என்றும் ஒரு பெயர் உண்டு. கொல்லூரில், சங்கு சக்கரம் ஏந்தி அபய வரதம் காட்டி அமர்ந்த கோலத்தில் விளங்கும் மூகாம்பிகை வாக்தேவியே! ஊமைகளைப் பேச வைக்கும் வாக்தேவி! கவிஞர்களின் தெய்வம் வாக்தேவி. கவி காளிதாசனின் கவிதையில் மயங்கிய போஜன் என்ற அரசன், தன் தலைநகரான தாரா நகரத்தில், ஆளுயரத்துக்கு ஐம்பொன் னால் ஆன வாக்தேவி சிலையை நிறுவி வழிபட்டு வந்தானாம். கால வசத்தில் இந்தச் சிலை கை மாறி, இடம் மாறி, ஊர் மாறி, நாடு மாறி இன்று லண்டனில் உள்ள அருங்காட்சிய கத்தில் இருக்கிறது! அதே மாதிரி ஒரு சிலை, மத்தி யப் பிரதேச மாநிலத்தில் தாரா நகரத்தில் உள்ள ஓர் ஆலயத்தில் காஞ்சி முனி வரின் ஆணையால் பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ளது. இன்று பாரத நாட்டின் தலை சிறந்த எழுத்தாளருக்கு வழங்கப்பெறும் உயர்ந்த விருதான 'ஞானபீடம்' விருது பெறுபவ ருக்கு, இந்த வாக்தேவியின் வடிவம் ஒன்று பரிசாக வழங்கப்பெறுகிறது. நின்ற கோலத்தில் மேல் இரண்டு கரங்களில் தாமரை மலர், புத்தகச் சுவடி ஆகியவை ஏந்தி, தொங்கவிடப்பட்ட கீழ்க்கரங்களில் ஜபமாலையும் கமண்டலமும் ஏந்தி, மிக ஒய்யாரமாக நிமிர்ந்து விளங்குகிறாள் அன்னை வாக் தேவி!

'சரஸ்வதி நம்மைக் காத்து, நம்மிடம் இருக்கும் சோம்பலை மிச்சம் வைக்காமல் அபகரித்து அழிக்கட்டும்' என்று வேண்டி நிற்போம். நம் உணர்வைத் தூண்டி அறி வைப் பெருக்குவதன் மூலம் அவளே தானே தன்னைக் காத்துக்கொள்ள வேண் டும்!

படம்: **ஸ்ரீஹரி**

**(பெருகும்)**



# மனசின் வயசு

கணவர் பரமசிவத்திடம், ''தரகர் என்ன சொன்னார்?'' என்று கேட்டாள் கோமதி.

''ஒரு வரன் இருப்பதாகச் சொல் கிறார்.''

''நல்லா விசாரிச்சீங்களா, என்ன வேலை பாக்கறாராம்?''

''ஒரு கம்பெனியில ஜெனரல் மானேஜராம். நல்ல படிப்பாம். முப்ப தாயிரத்துக்கு மேல் சம்பளமாம். சொந்த வீடு இருக்காம்.''

''நம்ம பாருக்குட்டி நல்ல அதிர்ஷ்டசாலிதான். ஆமா! அம்மா, அப்பா இருக்காங்களா! கூடப் பிறந் தவங்க?'' ஆர்வமாகக் கேட்டாள் கோமதி.

''ஒருத்தரும் கிடையாதாம். ஒண்டிக்கட்டைதானாம்.''

''நிம்மதி போங்க. பார்வதி கொடுத்து வைச்சவா. வயசு என்ன ஆவுது?''

''முப்பத்தேழுன்னு சொன்னார். அதுதான் உதைக் குது.''

''இத்தனை இருந்தும் ஏன் இந்த வயது வரை திருமணமே ஆகலையாம். கேட்டீங்களா?''

''கேட்காமல் இருப்பேனா! ஒவ்வொரு பெண் ணாகப் பார்த்து, தட்டிக் கழித்துக்கொண்டே வந்து விட்டாராம்.''

''நம்ம பாருக்குக்கூட தை பிறந்தா இருபத்து மூணு ஆகுது. நல்ல நாள் பாத்து வரச் சொல்லுங்க.''

குறிப்பிட்ட நாளில் தரகரும் மாப்பிள்ளையும் காரில் வந்து இறங்கினார்கள். ஓடிப் போய் வீட்டுக்குள் அழைத்து வந்தார் பரமசிவம். மாப்பிள்ளையின் கம் பீரமான நடையும் தோற்றத்தையும் கண்டு, எடுத்த எடுப்பிலேயே அவருக்கு மாப்பிள்ளையைப் பிடித்துவிட் டது.

வீட்டுக்குள் வந்தவுடன் கோமதி வரவேற்றாள். மாப்பிள்ளை முகத்தைப் பார்த்தவுடன் திடுக்கிட் டாள். அமைதியாகச் சமையற்கட்டுக்குள் சென் றாள்.

''பெண்ணை வரச் சொல்லுங்கள்'' என்றார் தரகர்.

கோமதி காஃபி கொண்டு வந்து கொடுத்தாள்.

''என்னம்மா! நீங்க கொண்டு வர்றீங்க? பெண்ணை வரச் சொல்லுங்க.''

''அது இருக்கட்டும் தரகரே! இந்த மனுஷன் பெயர் குமரே சன்தானே?''

''ஆமா! அதற்கு என்ன?''

''காரணத்தோடுதான் கேக் கறேன். இவர்தான் பத்து வரு ஷத்துக்கு முன்னால என் கடைசி தங்கையைப் பெண் பார்க்க வந்தார். 'என் வளத் துக்கு ஏற்ற ஜோடி இவள் இல்லை. எனக்கு இந்தப் பெண் வேண்டாம்'ன்னு போனவர். இன்னமும் இவ ருக்குக் கல்யாணம் ஆகாம என் மகளை வேற கேட்டு வந்துட் டாரு! கூட்டிட்டு உடனே வெளியே போயிருங்க தரகரே'' என்றாள்.

❖ வீரசிகாமணி. ஆதினமிளகி ❖

# மணக்கால் நம்பியும் திருக்கோஷ்டியூர் நம்பியும்

மும்மூர்த்திகளும் கோஷ்டியாக ஆலோசனை நிகழ்த்தியதால் திருக்கோஷ்டியூர் என்கிற பெயர் ஏற்பட்டதைப் பார்த்தோம். இம்மூவரையும் கதம்ப மஹரிஷி இத்திவ்யதேசத்தில் வணங்கினார்; அவரது ஆசிரமம் இங்கே இருந்தது.

இங்கேயுள்ள செளம்யநாராயண பெருமாள் கோயிலில் ராஜகோபுரம் தவிர அஷ்டாங்க விமானமும் உள்ளது. அந்த அஷ்டாங்க விமானத்தில் சைவத் திருக்கோயிலுக்குரிய அம்சங்களும் காணக் கிடைக்கின்றன. இங்கே உள்ள திருமாமணி மண்டபத்தில் சிவனை சரபேஸ்வரராக வழிபட்டு வருகின்றனர்.

மண்டபத்துக்குத் தெற்கே நரசிம்ஹருக்கும் ஸ்ரீ ராமனுக்கும் தனி சன்னிதிகள் உள்ளன. இந்த நரசிம்ஹர் சன்னிதியிலேதான் ஸ்ரீ ராமானுஜர் திருக்கோஷ்டி நம்பியிடம் உபதேசம் பெற்றதாகச் சொல்லப்படுகிறது. நம்பியின் திருவுருவத்தையும் ராமானுஜர் திருமேனியையும்கூட இக்கோயிலில் நாம் சேவிக்கலாம்.

திருக்கோஷ்டியூர் கோயில் நான்கு நிலைகள் கொண்டதாக அமைந்திருக்கிறது. மேல் தளத்தில் கிடந்த திருக்கோலத்தில் மூலமூர்த்தியான நாராயணன் ஸேவை சாதிக்கிறார். உரக மெல்லணையான் என்றும் இவருக்கு ஒரு திருநாமம். கதம்ப மஹரிஷிக்கு இந்தக் கோலத்திலேதான் பெருமான் காட்சியளித்திருக்கிறார். உத்ஸவரான செளம்ய நாராயண பெருமாள் திருமேனியும் அவனுடன்உறை மூன்று பிராட்டியர் திருமேனிகளும் கதம்ப மஹரிஷி பூஜித்தவை என்றே சொல்லப்படுகிறது. இந்திரன் அவற்றை அம் மஹரிஷிக்கு வழங்க, மிகுந்த பக்தியோடு அவர் அவற்றை வழிபட்டு வந்திருக்கிறார்.

தாயார் திருமாமகள் நாச்சியாருக்கு, அஷ்டாங்க விமானத்துக்குத் தெற்கே தனி சன்னிதி உள்ளது. இதே விமானத்துக்கு வடக்கே ஆண்டாளுக்குத் தனி சன்னிதி.

விமானத்தின் மற்ற தளங்களில் நின்ற, இருந்த திருக்கோலங்களில் எம்பெருமான் காட்சி தருகிறார். விமான சிற்பங்களுள் ஒன்று, ராமானுஜர் இவ்வூரை நோக்கியபடி, மக்களை ஆவலுடன் அழைப்பதாக அமைக்கப்பட்டிருக்கிறது.

திருக்குளம் தேவபுஷ்கரிணி!

இவ்வூரில் வாழ்ந்த



**வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்**




திருக்கோஷ்டியூர் நம்பிக்கு ஓர் ஆசார்யர் இருந்தார். அவரே ஆளவந்தார்; யாமுனாச் சார்யர் என்பது அவர் பெயர். அவரைப் பற்றிய அழகான கதை ஒன்று உண்டு. திருக்கோஷ்டியூருடன் நேரடித் தொடர்பு இல்லாதுபோனாலும், இவ்வூர் நம்பியின் ஆசார்யர் பற்றிய அந்த வரலாறைத் தெரிந்துகொண்டு நாம் இங்கிருந்து விடை பெறுவோம்:

ஒன்பதாம் நூற்றாண்டிலே நாத முனிகள் என்றொரு ஆசார்யர் இருந்தார். ஸ்ரீ வைஷ்ணவ மரபிலே முதல் ஆசார்யர் ஸ்ரீமந் நாராயணர். அடுத்து லக்ஷ்மி, அடுத்து விஷ்வக்ஸேனர், அடுத்து நம்மாழ்வார், அடுத்து நாதமுனிகள்தான். சிதம்பரத்துக்கு அருகே உள்ள காட்டுமன்னார்கோயில் என்கிற ஊரில் பிறந்தார் நாத முனிகள். அவருக்குப் பேரன்தான் ஆளவந்தார். தாத்தா பரமபதித்த பிறகே பேரன் பிறந்த படியால் தமது சொத்துக்களையெல்லாம் (ஞானமும் பக்தியும்) பேரனிடத்திலே கொடுக்க முடியாமல் போயிற்று. தமது சிஷ்யர் உய்யக்கொண்டாரை அழைத்து அச்சொத்துக்களை ஒப்படைத்தார்.

பேரனுக்கு உரிய வயது வருகிறபோது அவற்றை அவனிடம் தந்துவிடும்படி சொன்னார். ''சரியான வயது வந்தவுடன் அவனுக்கு கீதையின் பொருள்களைச் சொல்லிக் கொடுங்கள். அதுதான் அவனுக்குச் சொத்து. அதுதான் அவன் வாழ்க்கைக்கு வளம்'' என்று சொல்லிப் போனார்.

உய்யக்கொண்டாரும் குருவின் ஆணையை நிறைவேற்றத் தயாரானார். ஆனால் உரிய நேரம் வருவதற்குள், அவரது காலமும் முடிந்து போகிற கட்டம் வந்துவிட்டது. அவரும் தம் சிஷ்யரான மணக்கால் நம்பியைக் கூப்பிட்டு கீதை உபதேசத்தை ஆளவந்தாருக்கு, வயது வந்தவுடன் கொடுத்துவிடும்படி பணித்து விட்டுப் பரமபதமடைந்தார்.

மணக்கால் நம்பி கீதையின் பொருளை ஆளவந்தாரிடத்திலே கொடுக்கப் போனால், அவர் அதற்குள், வாதத்தில் ஒருவரை வென்று பெற்ற பாதி ராஜ்யத்தை ஆளும் அரசனாகிவிட்டிருந்தார்!

ராஜாவிடத்திலே போய் கீதையின் பொருளைச் சொல்லுகிறேன் என்றால், கேட்டுக்கொள்ள அவருக்கு ஏது நேரம்! மறுத்தார். மணக்கால் நம்பிகள் பார்த்தார். எப்படியாவது இவரை ஸத்விஷயம் நோக்கி ஈர்க்க வேண்டும் என்று, நித்யப்படி தூதுவளைக் கீரையை அவர் அரண்மனைக்கு எடுத்துப் போய்க் கொடுக்கலானார். அரண்மனை சமையல்காரரும் அதை நித்யம் சமைத்து அரசனுக்குப் பரிமாறினார். ஆறு மாத காலம் ஓடிவிட்டது. ராஜாவுக்குக் கீரை ரொம்பப் பிடித்துப் போய்விட்டது. இந்நிலையிலே திடீரென்று மூன்று நான்கு நாட்களுக்குக் கீரை கொண்டுபோய்க் கொடுப்பதை நிறுத்தி விட்டார் மணக்கால் நம்பிகள்!

எதுவுமே நமக்குத் தொடர்ந்து கிடைத்துக்கொண்டிருக்கிற வரையில் நாம் அதிகம் கவலைப்படுவதில்லை. அது நின்று போகிறபோதுதான் அது எப்படிக் கிடைத்தது என்றே யோசிக்கிறோம்! ராஜாவும் அப்படியே யோசித்தார், விசாரித்தார்.

சமையற்காரர் மணக்கால் நம்பியைப் பற்றிச் சொல்லவும், அவரைத் தம்மிடம் அழைத்து வரும்படி பணித்தார். அடுத்த முறை மணக்கால் நம்பி தூதுவளை எடுத்து வர, அவர் ஆளவந்தாரின் சமூகத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவரைப் பார்த்ததுமே ஆளவந்தாருக்கு அவர் மிகச் சிறந்த விற்பன்னர் என்பது புரிந்து போயிற்று. ''உமக்கு என்ன தேவை? எதை எதிர்பார்த்து தினமும் தூதுவளைக் கீரையை எடுத்து வந்தீர்?'' என்று அவரிடம் கேட்டார் ஆளவந்தார்.

அதற்கு மணக்கால் நம்பி பதில் சொன்னார்: ''நான் எதையும் உன்னிடம் வாங்க வரவில்லை அரசனே! கொடுத்துப்


★ ராமானுஜர்

''சரியான வயது வந்தவுடன் அவனுக்கு கீதையின் பொருள்களைச் சொல்லிக் கொடுங்கள். அதுதான் அவனுக்குச் சொத்து.''



என்று கேட்டார்.

''காட்டத்தானே வந்தேன்'' என்ற மணக்கால் நம்பி, அவர் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு திருவரங்கத்துக்குப் போனார். ''திருவரங்கநாதனேதான் கண்ணன்'' என்று சொல்லி பெரிய பெருமாள் முன்பு அவரை நிறுத்தினார்.

''இதோ இவரைப் பாரும்! கீதையினுடைய பொருளை இந்த ஆளவந்தாருக்குச் சொல்லிக் காட்டிவிட்டேன். ஆனால், கீதையிலே சொல்லப்பட்ட பரம்பொருளைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார். உம் திருமேனி அழகை மற்ற பேருக்குக் காட்டியதுபோல் காட்டக்

**''கீதையின் சொற்களே இத்தனை அமுதமயமாக இருக்கிறதே! அப்படியானால் அந்தச் சொற்களைப் பேசிய கண்ணன்தான் எப்படி இருப்பான்?''**

போவதற்காக வந்தேன்!''

ஆளவந்தாருக்கு வியப்பு. 'கிழிந்த ஆடை உடுத்தியுள்ள இவர் நமக்கு என்ன கொடுக்கப் போகிறார்?' என்று யோசித்தபடி, 'சரி கொடுங்கள்' என்று ஏற்க, அப்போதுதான் கீதையின் எழுநூறு சுலோகங்களின் பொருளையும் அவருக்கு எடுத்துரைத்தார் மணக்கால் நம்பிகள்.

எல்லாவற்றையும் பொறுமையோடு கேட்டுக்கொண்டார் ஆளவந்தார். மணக்கால் நம்பிகளின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, ''கீதையின் சொற்களே இத்தனை அமுதமயமாக இருக்கிறதே! அப்படியானால் அந்தச் சொற்களைப் பேசிய கண்ணன்தான் எப்படி இருப்பான்? அவனைக் காண மிக ஆவலாக இருக்கிறது. கீதையைக் காட்டினீர்; கீதையின் பொருளான கண்ணனைக் காட்டுவீரா?''

கூடாது. திருப்பாணாழ்வாருக்குக் காட்டிக் கொடுத்தீரே, அதைப்போல் இவருக்கும் காட்டும்'' என்று ரங்கநாதரைக் கேட்டுக் கொண்டார் மணக்கால் நம்பிகள்! பெருமானும் தன் திருமேனியை ஆளவந்தாருக்குக் காட்டிக் கொடுத்து அருள் புரிந்தான்.

அன்றோடு ஆளவந்தார் அரச வாழ்க்கையைத் துறந்து, மிகுந்த பக்தி தலையெடுத்து, சம்பிரதாயத்துக்கே ஓர் ஆசார்யராகத் தோன்றினார்.

அந்த ஆளவந்தாரின் சிஷ்யர்தான், கண்ணனைத் தேடி நாம் வந்துள்ள திருக்கோஷ்டியூரில் வாழ்ந்து, ராமானுஜருக்கு அதே கீதையின் பொருளை உபதேசித்த திருக்கோஷ்டியூர் நம்பி!

**(தேடுவோம்)**



# நீல ரத்தம்!

ஞாயிற்றுக் கிழமை என்றால் இளைஞர்கள் என்ன செய்வார்கள்? சென்னையில் இருக்கும் பிரபலமான மால்களில், திரையரங்குகளில், காப்பி ஷாப்களில் படையெடுப்பார்கள் என்று எண்ணிக் கொண்டிருப்பவர்கள் உடனடியாக உங்கள் எண்ணங்களை மாற்றிக் கொள்ளுங்கள். ஏன்?

நீல ரத்தம் (Blue Blood) - இது முழுக்க முழுக்க கல்லூரியில் பயிலும் மாணவ மாணவிகளை மட்டுமே கொண்டு தொடங்கப்பட்ட ஒரு அமைப்பு. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும், ஏதாவது ஒரு சமூக நல இல்லத்துக்குச் சென்று அங்கிருப்பவர்களோடு, குறைந்தபட்சம் ஒரு மணி நேரமாவது செலவு செய்து, தனிமையுணர்வை நீக்குவது, அந்த சமூக இல்லத்துக்கு என்னென்ன தேவை என்பதை அறிந்துகொண்டு கொடுத்து உதவுவது ஆகிய சேவைகளில் ஈடுபடுகிறது.

''தன்னலமற்ற ஒரு சேவையை இளைஞர்களால் நிச்சயம் கொடுக்க முடியும். நம்முடைய நேரத்தை நல்ல வழியில் பயன்படுத்தி, யாரோ ஒரு சிலருடைய வாழ்க்கையிலாவது கொஞ்சம் சந்தோஷப் பூக்களை மலர விடணுங்கறதுதான் எங்களோட லட்சியம். வாரா வாரம் சென்னை புறநகர்ப் பகுதியில் இருக்கிற பொதுமக்களின் பார்வைக்கோ, செவிகளுக்கோ அவ்வளவாகச் சென்று சேராத ஒரு சமூக இல்லத்துக்குச் செல்வதைத்தான் கடந்த இரண்டு வருடங்களாகச் செய்து கொண்டிருக்கிறோம். எங்கள் குழு உறுப்பினர்களுக்கு அந்த வாரம் எங்கு செல்லப் போகிறோம் என்பதை மின் அஞ்சல் மூலம் தெரிவித்து விடுவோம்'' என்கிறார்கள்.

''இந்த சமூக இல்லங்களில் வளரும் குழந்தைகள் பத்தாம் வகுப்பு படிக்கும் வரை மட்டும்தான் இங்கே வைத்துக்கொள்ளப்படுகிறார்கள். அதன் பிறகு அவர்கள் என்ன ஆனார்கள், எங்கே போனார்கள் என்று விடை அளிக்க யாரும் முன்வருவதுமில்லை; அதற்கான விடை அவர்களிடம் இல்லவும் இல்லை'' என்கின்றனர் இவ்விளைஞர்கள். அதிர்ச்சியான விஷயம்தான். இருந்தாலும், இவர்கள் சமூகத்தில் பாய்ச்சுவது புது ரத்தம்! 'ஒரு ஃபோட்டோ' என்றோம்.

'வேண்டாமே ப்ளீஸ்' என்கிறார்கள்.

**- நளினி சம்பத்குமார்**



# அருள்வாக்கு



# வழிபாட்டுக் கழகம்

ஒவ்வொரு ஊரிலும் அநேக சங்கங்கள், மன்றங்கள், குழுக்கள் நிறுவப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குறிக்கோள் உண்டு. இவை ஒவ்வொன்றும் பற்பல சமயங்களில் மற்றவற்றுடன் முரண்பட்டு ஊரிலும் நாட்டிலும் வெறுப்பு, கசப்பு, புரட்சி முதலியவற்றுக்குக் காரணமாக முடிகிற நிலைக்குக் கொண்டு விடுவதையும் நிறையும் பார்க்கிறோம். ஆதலால் எல்லாக் கசப்பையும் இனிப்பாக மாற்றக் கூடியதும், எல்லாப் புரட்சிகளையும் அன்பாக மாற்றக் கூடியதுமான ஒரு கழகம் நமக்குத் தேவையாகிறது. பக்தி மார்க்கம் என்னும் வழிபாட்டைப் பரப்பும் கழகங்களே இவை. இந்த வழிபாட்டுக் கழகங்களே இப்போதும், எப்போதும் தேவை. மற்ற எல்லா வாழ்க்கை அம்சங்களையும், மற்ற எல்லாக் கழகங்களையும் சாந்த முறையில் சீர்ப்படுத்தும் சாதனம் வழிபாட்டுக் கழகங்களே.

எனவே, நம் தேசத்திலுள்ள அத்தனை இலட்சம் கிராமங்களிலும் சாந்தம் பரவ, ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு வழிபாட்டுக் கழகம் நிறுவ வேண்டும். நாம் எல்லோரும் முனைந்து முயற்சி செய்து ஈசன் அருளைத் துணை கொண்டு இப்பணியை முடித்தாக வேண்டும். இதனால் நாமும் சீர்ப்பட்டு, நம் நாட்டில் உள்ள எல்லாக் கட்சிகளும் மக்களும் சீர்ப்பட்டு, நாடே அன்பு மயமாகும். நம் ஒரு நாட்டின் உதாரணத்தின் மூலம் உலகமும் சாந்தியாகி, 'லோகா: ஸமஸ்தாஸ் ஸுகினோ பவந்து' 'வையகம் துயர் தீர்கவே' என்ற நமது வேத நெறியின் சிறப்புக் கொள்கை புத்துயிர் பெற்று நிலவும்; நாம் தான் அப்படி நிலவ வைக்க வேண்டும். இப்பணிக்கே நம் ஆயுளை அர்ப்பணிக்க வேண்டும்.

நவீன விஞ்ஞான வளர்ச்சிகளாலோ, பணவீக்கம் முதலியவற்றாலோ, பரஸ்பர அவநம்பிக்கைகளாலோ ஏற்படக் கூடிய எந்தப் புரட்சியையும், வெகு சாந்தமான முறையில் சமாளிக்கக்கூடிய வழிபாட்டுக் கழகங்களை நிறுவும் பணியில் நாம் எல்லோரும் ஒன்றுபட்டு, எஞ்சியிருக்கும் நமது வாழ்நாட்களை இதிலே பயன்படுத்தித் தொண்டு புரிவோமாக! "நம் கடன் பணி செய்து கிடப்பதே!"

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

"மானாமதுரையில ஆரம்பிச்ச எவர் சில்வர் ஃபாக்டரி நல்லா ஓடுது. எல்லாம் பாத்திரம்தான். தினமும் மூணு லோடு வெளியூர் போகுது. இங்க மேலவாசல் மெயின் ரோட்டுல, ஒரு ஹோட்டல் நடத்தறேன். இந்த ஊருல எவன் தினமும் பிரியாணியும், புரோட்டாவும் வாங்கித் தின்பான். சுமாரா போகுது. மருமகன் பாத்துக்கிடுறாரு. தெக்க ஒரு செங்கச் சூளையிருக்கு. அதுவும் பரவாயில்லை. ஏதோ அல்லா கருணையால காலம் ஓடுது.''



காரைக்குடியிலிருந்து வந்த வியாபாரியிடம், தான் நடத்தும் தொழில்களின் வரவு செலவு பற்றிப் பேசிக்கொண்டிருந்தார் உமர் ராவுத்தர்.

அப்பொழுது ஊர் கணக்குப் பிள்ளை பிரம்மநாயகம் அவசரமாக

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

## பிரசுரத்துக்குத் தேர்வான சிறுகதை - 1

உள்ளே வந்து ''ராவுத்தரய்யா... ஒரு சேதி.''

''சேதியா... சொல்லுங்க... ஏன் பதறுறீக?''

''ஐயா, நம்ம ஓதுவார் சிவசிதம்பரம் இறந்துட்டாரு.''

''என்னய்யா சொல்லுறீக, மாப்பிள்ளை சிவசிதம்பரம் இறந்துட்டானா... திடீர்னு என்னய்யா குண்டைத் தூக்கித் தலையில போடுறீக? விளக்கமாச் சொல்லுங்க.''

உமர் ராவுத்தரின் உடல் நடுங்கியது. கண்ணீர் ததும்பி வழிய ஆரம்பித்தது.

நிலைமையைப் புரிந்துகொண்ட காரைக்குடி வியாபாரி மெல்ல எழுந்து விடைபெற்றார்.

''ஐயா, காலையில பத்து மணிக்கு திண்ணையில உட்கார்ந்து பேப்பர் வாசிச்சுக்கிட்டிருந்திருக்காரு. திடீர்னு 'தாயி, நெஞ்சு வலிக்கு. கொஞ்சம் தண்ணி கொண்டா'ன்னு மருமககிட்டக் கேட்டிருக்காரு. தண்ணி கொண்டாறதுக்குள்ள தலை



விட்டார்.

இதற்குள் சிவசிதம்பரம் இறந்த செய்தி ஊருக்குள் பரவி விட்டது. உமர் ராவுத்தரின் மகன் ஜமால், அவசரமாக மோட்டார் சைக்கிளில் கடைக்கு வந்தான்.

''ஜமாலு... உங்க மாமா சிவசிதம்பரம் தவறிட் டான்.''

மகனின் கரங்களைப் பிடித்துக்கொண்டு உமர் ராவுத்தர் கதறியதும், கணக்குப் பிள்ளை, ''ராவுத்தரய்யா, இது என்ன சின்னப்பிள்ளை மாதிரி... ஊருக்குப் புத்தி சொல்லி வழி நடத்துற தைரியசாலி, இப்படிக் கலங்கலாமா?'' என்றார்.

''கணக்குப்பிள்ளை, எங்க வாப்பா கடை வைக்கறதுக்கு முன்னால, குடும் பத்துல ரொம்ப கஷ்டம். பாதிநாள் பட்டினி. காலையில் சிவசிதம்பரம் வீட்டு வழியாத்தான் பள்ளிக்கூடம் போவேன். அவங்க வீட்டு வாசல்லே எனக்காகக் காத்துக்கிட்டு நிப்பான். என்னைப் பாத்ததும் வீட்டுக்குள்ள கூட்டிட்டுப் போயி 'அம்மா, உமர் வந்துட் டான்'னு சொல்லுவான். 'வா தம்பி, உன் சிநேகிதன் உனக்காகச் சாப்பிடாம இருக் கான். ரெண்டு பேரும் சேர்ந்து சாப் பிடுங்க'ன்னு தட்டு நிறைய இட்லி வைச்சுக் கொடுப்பாங்க. தினமும் ஏதாவது இந்தப் பாவியோட வயித்துக்கு அவனால கிடைச்சுக்கிட்டேயிருக்கும். ஒரு ரம்ஜான் பண்டிகைக்கு முதல் நாளு வீட்டுக்கு

சாய்ஞ்சிடுச்சு. நம்ம டாக்டர் காளியப் பனைக் கூட்டி வந்திருக்காங்க. உயிர் போயிருச்சுன்னு சொல்லிட்டாரு. சேதி தெரிஞ்சதும் உங்ககிட்டச் சொல்லணும்னு ஓடியாந்தேன். நீங்களும் அவரும் நெருங்கிய சிநேகிதர்களாச்சே.''

ராவுத்தர் ஏங்கி ஏங்கி அழ ஆரம்பித்து

# அஸ்திவாரம்

வந்து, 'என்னடா புது டிரஸ் வாங்கலியா?'ன்னு கேட்டான். 'இல்லை'ன்னு சொன்னதும் வீட்டுக்கு ஓடிப்போயி அவன் அப்பா, அம்மாகிட்ட சொல்லிட்டு, தீபாவளிக்காக அவனுக்குத் தைச்சு வைச்சிருந்த சட்டை டிராயரைக் கொண்டு வந்து கொடுத்தான். அந்தச் சின்ன வயசுலேயே அவன் மனசு ரொம்ப பெருசாயிருந்துச்சு.''

''சரி, பேசிக்கிட்டேயிருந்தா எப்படி? நடக்க வேண்டிய காரியம் நிறைய இருக்கு'' என்ற கணக்குப் பிள்ளை, ''ஜமால், பணம் எடுத்துக்கோ. வீட்டுல போயி அம்மாவக் கூட்டிக்கோ. காரியங்க முடியற வரைக்கும் கூட நில்லு'' என்றார்.

''கணக்குப் பிள்ளை, அவனுக்கு என்ன தெரியும்...? நாம கிளம்புவோம்'' என்று உமர் ராவுத்தர் எழுந்தார்.

''ராவுத்தரய்யா, இன்னிக்கு என்ன தேதி? ஜனவரி எட்டு. திருநெல்வேலி கலெக்டர் ஆஃபீஸ்ல சரியா நாலு மணிக்கு நீங்க இருக்கணும். இன்னிக்குத்தான் ஆட்டுச் சந்தை ஏலம். இப்ப கிளம்பினாத் தான் சரியான நேரத்துக்குப் போய்ச் சேர முடியும்'' என்றார்.

''ஓ... இன்னிக்குத் தேதி எட்டா? மறந்தே போயிட்டேன். காஜாமைதீனை திருநெல்வேலிக்கு அனுப்பி ஏலத்தில் கலந்துக்கச் சொல்லு'' என்றார் ராவுத்தர்.

''ஐயா, அன்னிக்கு கலெக்டர் ஆஃபீஸ்ல ஏலம் எடுக்கறதுக்குன்னு கொடுத்த ஃபாரத்துல நீங்க தான் கையெழுத்துப் போட்டிருக்கீக. அதனால காஜாமைதீனை அனுமதிக்கமாட்டாங்க.''

''ஓ... அப்படியொரு சிக்கல் இருக்கா...? சரி, அதுக்காக நான் துக்கத்தில் கலந்துகிடலேன்னா...''

''கலந்துக்கிடலேன்னா ஊரு உலகம் ஒண்ணும் உங்களக் குறை சொல்லாது'' என்றார் கணக்குப் பிள்ளை.

''ஊரு உலகம் சொல்லாது. ஆனா, சாகும் வரை என் மனச்சாட்சி குத்திக் கிழிச்சி ரணமாக்கிடுமே... ஏலத்துக்கு நான் போகல'' என்றார் ராவுத்தர்.

''ஐயா, அவசரப்பட்டு முடிவெடுத்திடக்கூடாது. இந்த வாய்ப்பை விட்டுட்டா அடுத்து மூணு வருஷம் கழிச்சுத்தான் ஏலம் வரும். இது எட்டுக் கிராமத்து ஆட்டுச் சந்தை. சும்மா பணத்தை நீங்க அள்ளிடலாம். உங்க அத்தனை வியாபாரத்தில் வர்ற லாபத்தை ஒரு வருஷச் சந்தை தந்துடும். ஓதுவார் சிவசிதம்பரம் ஈமச் சடங்குல உங்க மகன் போய் கலந்துக்கிட்டும். நீங்க ஏலம் எடுக்கப் போங்க.''

''கணக்குப் பிள்ளை, நான் ஏணி மேல ஒவ்வொரு படியா ஏறுறதப் பாத்து, கீழ நின்னு ரசிச்சவன் சிவசிதம்பரம்.

போன வருஷம் ஒரு நாள் அவனைக் கடைக்குள்ள கூட்டிட்டுப் போயி இரும்புப் பெட்டியைத் திறந்து, 'எடுத்துக்கோ சிதம்பரம், எடுத்துக்கோ... எவ்வளவு வேணுமோ எடுத்துக்கோ'ன்னு சொன்னேன். என்னய அப்படியே இழுத்துத் தழுவி, 'உன்னய என்னிக்கோ இந்த நெஞ்சுக்குள்ள எடுத்துக்கிட்டேன். இந்தக் காகிதக் கட்டுக்கள எடுத்



**பணம் எதுக்கு? இதை வைச்சு நான் என்ன செய்ய? நான் பட்டினி கிடந்தா சோறு போட மாட்டியா, இல்ல செத்தா தூக்கிப் போட மாட்டியா?**



தூக்கிடச் சொல்லுறியே. மலை மாதிரி என் கூடவே நீ இருக்கும்பொழுது பணம் எதுக்கு? இதை வைச்சு நான் என்ன செய்ய? நான் பட்டினி கிடந்தா சோறு போட மாட்டியா... இல்ல செத்தா தூக்கிப் போட மாட்டியா?'ன்னு சொன்னான். அந்த நட்போட அஸ்தி




தேடிப்போன வீட்டில்
யாருமில்லை.
வெகுநாள் பழகிய
மழை மட்டும்
வரவேற்றது
கூரையிலிருந்து...

–க. ஓம்சப்ரியா

வாரத்திலதான் பெரிய வியாபாரிங்க கட்டடம் வெளிய தெரியுது. கணக்குப் பிள்ளை, அவன் செத்துருக்கலாம். ஆனா, அவனோட உகரு என்னப் பாக்கற வரைக்கும் மேல போகாம அங்கேயே சுத்திக்கிட்டிருக்கும். இனி ஏலம் பற்றிய பேச்சே வேண்டாம்'' என்ற உமர் ராவுத்தர், சிவசிதம்பரம் வீட்டை நோக்கி விரைந்தார்.

சிவசிதம்பரத்தின் கடைசிக் காரியங்களை முடித்துவிட்டு உமர் ராவுத்தர் வீடு திரும்பும்போது, மணி இரவு ஒன்பதுக்கு மேலாகிவிட்டது. திட உணவு எதுவும் சாப்பிடாமல், ஒரு தம்ளர் பால் மட்டும் குடித்துவிட்டு அப்படியே ஹாலில் படுத்துவிட்டார்.

மறுநாள் காலை உமர் ராவுத்தர் டீ குடித்துக் கொண்டிருக்கும்பொழுது, ''ஐயா, உங்க சிநேகிதர் காலமாயிட்டாராமே...'' என்றவாறு திருநெல்வேலி கலெக்டர் ஆஃபீஸில் பணிபுரியும் ராஜாராம் வந்தார்.

''ஆமா தம்பி, பொசுக்குன்னு போயிட்டான்... உட்காருங்க'' என்றார் ராவுத்தர்.

ராஜாராம் நாற்காலியில் உட்கார்ந்து, சட்டைப் பையிலிருந்த ஒரு கவரை எடுத்து ராவுத்தரிடம் நீட்டினார்.

''என்ன தம்பி கவரு?''

''ஐயா, ஆட்டுச்சந்தை ஏலம் நேத்து நடக்கல. தேதியை மாத்தி வச்சாச்சு. வர்ற புதன்கிழமை ஏலம். இதுல எல்லாம் விவரமா இருக்கு. தாசில்தார் கொடுத்துட்டு வரச்சொன்னாரு'' என்றார்.

''ஏலம் நேத்து நடக்கலையா! ஏன் நடக்கல?'' ராவுத்தரின் புருவங்கள் மேலேறின.

''ஐயா, ஏலம் கேட்க ரெண்டு பேருதான் அப்ளிகேஷன் போட்டிருக்கிக. ஒண்ணு

நீங்க, அடுத்தது தூத்துக்குடி பீட்டர் ஃபெர்னாண்டோ.''

''மீன் வியாபாரி பீட்டரய்யாவா? நமக்குப் பழக்கம்தான். போன மாசம் இங்க வந்தாக. 'எங்க கிராமத்தில் தேவாலயம் புதுசா கட்டறோம் ராவுத்தரே, நீங்கதான் மணி வாங்கிக் கொடுக்கணும்'னு கேட்டாக. கும்பகோணத்தில் ஆர்டர் கொடுத்து வாங்கி அனுப்பிச்சேன். சரி, நான்தான் எடுக்க வரமுடியாமல் போச்சு. பீட்டரய்யா எடுத்திருக்க வேண்டியதுதானே. அவுகளும் வரலியா?''




''பீட்டர் ஃபெர்னாண்டோ வந்திருந்தாரு. நீங்க ஏன் வரலேன்னு கேட்டாரு. 'ராவுத்தரோட நெருங்கிய நண்பர் கோயில் ஓதுவார் இறந்துட்டாரு. அதனால அவரு வர முடியலே'ன்னு சொன்னோம். சில நிமிஷம் எதுவும் பேசாம அப்படியே உட்கார்ந்திருந்தாரு. தாசில்தார் வந்து, 'மிஸ்டர் ஃபெர்னாண்டோ, ராவுத்தர் வரல. களத்தில் நீங்க மட்டும்தான் இருக்கீக. அரசாங்கம் நிர்ணயிச்ச விலையைச் சொல்றேன். மேல ஒரு ரூபா அதிகமா கேட்டுட்டு ஏலத்தை முடிச்சிடுங்க'ன்னாரு. நாங்களும் 'பீட்டர் பெர்னாண்டோ காட்டுல மழை. எதிர் ஏலம் கேட்க ராவுத்தர் இல்ல. மூணு வருஷம் சந்தை ஏலத்துல அள்ளப் போறாரு'ன்னு பேசிக்கிட்டோம். ஆனா, பீட்டர் ஃபெர்னாண்டோ 'ஏலத்துல கலந்துக்கிடமாட்டேன்'னு சொல்லிட்டாரு.''

''அட அல்லா, எதுக்கு இப்படிச் சொன்னாரு?''

''சந்தர்ப்பத்தச் சாதகமாக்கிச் சம்பாதிக்க மாட்டேன். லட்ச லட்சமாக் கிடைக்கும் ஏலம்கூட வேண்டாம்னு தன்னோட தோழனின் ஈமச் சடங்குதான் முக்கியம்னு போயிருக்கற உமர் ராவுத்தருக்கு எவ்வளவு பெரிய மனசு! அவரு வர முடியாத இந்த ஏலத்தை எடுக்க நான் விரும்பல'ன்னு அழுத்தமாச் சொல்லிட்டு எழுந்திரிச்சிட்டாரு. உடனே தாசில்தார், 'சரி, இந்த எட்டு கிராமத்து ஆட்டுச் சந்தையை வர்ற புதன் கிழமைக்கு மாத்தி வைச்சிடறேன். ராவுத்தருக்கும் தகவல் கொடுத்திடறேன்'னு சொல்லி என்னை அனுப்பிச் சாரு'' என்றார் ராஜாராம்.

உமர் ராவுத்தர் அப்படியே நெகிழ்ந்து போய் கண்களை மூடியவாறு அமர்ந்திருந்தார். இதற்குள் டீ வந்தது. ''இப்பவே தூத்துக்குடி போய் பீட்டரய்யாவப் பாக்கணும்னு மனசு சொல்லுது'' என்றபடியே வெளியேறத் தயாரானார் ராவுத்தர்.

●

# இரவு வானவில்

'அகராதி' படத்தில்...

''தெரிந்தோ தெரியாமலோ பணம் என்கிற மாயக்கரத்திடம் நம்முடைய வாழ்க்கையை ஒப்படைத்துவிட்டோம். வாழ்வின் தேவைக்காகப் பணம் என்பது போய், பணத்துக்காக வாழ்க்கையைத் திசை மாற்ற ஆரம்பித்துவிட்டோம். அதனால், ஏற்படும் கலாசார பண்பாடு மாற்றங்கள் ஒரு குடும்பத்தில் தொடங்கி ஒரு சமூகத்தையே புரட்டிப் போடுவதுதான் 'அகராதி' படத்தின் கதை என்கிறார் இயக்குநர் நாகா வெங்கடேஷ்.

''கதைக்காக யோசித்தபோது, நான் ஏற்கெனவே பலமுறை படித்த எழுத்தாளர் ராஜேஷ்குமாரின் 'இரவில் ஒரு வானவில்' என்கிற நாவல்தான் நினைவுக்கு வந்தது. க்ரைம் கதைகளில் உள்ள அதே விறுவிறுப்போடு குடும்பக் கதைகளையும் எழுதுவதில் ராஜேஷ்குமார் வல்லவர். அவரிடம் என்னுடைய யோசனையைச் சொன்னதும் ரொம்பவும் மகிழ்ந்து போனார். கதையின் சுய வடிவத்தைப் பாதிக்காமல் கதை எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் பயன்படுத்திக்கொள்ளுங்கள் என்று உற்சாகப்படுத்தினார்'' என்றவரிடம் படத்துக்குத் தலைப்பு 'அகராதி' ஏன் என்று கேட்டோம்.

''அகராதிக்கு இங்கே பல அர்த்தங்கள் உள்ளன. சமூகத்துக்கு அடங்காமல், தான் தோன்றித்தனமாகத் திரிபவன் அகராதி என்போம். அதேநேரத்தில் அறிவு பூர்வமான விஷயங்களைத் தன்னகத்தே கொண்ட ஒரு புத்தகமும் அகராதிதான். உணர்வு + அறிவுபூர்வமாக தன்னிறைவு பெற்றுத் திகழும் யாருமே ஓர் அகராதிதான். கதைக்கு ஏற்றவாறு நடிகர்களை வேலை வாங்கியிருக்கிறேன். எனவேதான் படத்துக்குத் தலைப்பு அகராதி'' என்கிறார்.

'அகராதி' குழுவையும் 'அன்னிய தேச' மோகம் விட்டுவைக்கவில்லை. ஒரு பாடலை ஆப்பிரிக்காவிலும், அமெரிக்காவிலும் எடுத்திருக்கிறார்கள்.

– சாவித்ரி

# ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாங்குடி.



* ஜோதிமணி

அரசு பள்ளியில் ஒரு வகுப்பறைக்குள் அதிகபட்சமாக என்னென்ன இருக்கக் கூடும்? மேசை, பெஞ்சுகள், கரும்பலகை, சாக்பீஸ், கரும்பலகை அழிப்பான். இவை தானே இருக்கும்? இங்கு அப்படியல்ல. இவற்றுடன் ஒரு நீண்ட பட்டியல் எழுதுமளவுக்கு, ஒரு வகுப்பறைக்குள் பல விஷயங்கள் அடங்கியுள்ளன.

ஒவ்வொரு வகுப்பறைக்குள்ளும் தொலைக்காட்சிப்பெட்டி, தபால் பெட்டி, முதலுதவி பெட்டி, குடிநீர்க் குழாய் வசதி, மூடியிடப்பட்ட சில்வர் வாளி, சங்கிலியால் பிணைக்கப்படாத சில்வர் தம்ளர், காகிதக் குப்பைகளைப் போடுவதற்கென ஒவ்வொரு வகுப்பறையிலும் சிறிய சில்வர் அண்டா, முகம் பார்க்கும் கண்ணாடி, சீப்பு, ஆணியில் தொங்கவிடப்பட்டிருக்கும் நகவெட்டி, தினசரி மற்றும் மாதக் காலண்டர், மின் விசிறி. இவ்வளவும் ஒவ்வொரு வகுப்பிலும்! அது மட்டுமின்றி, இதற்கென ஒவ்வொரு வகுப்பிலும் போஸ்ட் மாஸ்டர் மற்றும் போஸ்ட் மேன்.

தபால் பெட்டிகளில் வந்து சேரும் தபால் கார்டு சைஸிலான வண்ண அட்டைகளில் போஸ்ட் மாஸ்டர், பள்ளி முத்திரை இடுகிறார். அதனை, அதற்குண்டான வேறு வகுப்பு மாணவ - மாணவியரிடம் கொண்டு சேர்க்கிறார் போஸ்ட் மேன். மாணவ - மாணவிகள் தங்களுக்குள் தினசரி கடிதப் பரிமாற்றம் செய்து கொள்கின்றனர்.

''மாற்றங்களையும் படிப்படியாகத்தான் கொண்டு வந்தேன். மதிய உணவு இடைவேளையின் முதல் பதினைந்து நிமிடங்கள், பாரதியாரின் பாடல்கள் அந்தந்த வகுப்பறை ஸ்பீக்கர்களில் ஒலிபரப்பப்படும். கணிப்பொறி கல்வி நான்காம் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்பு வரை






# கடவுளின் நந்தவனம்

கற்றுத் தரப்படுகிறது. மதிய உணவு நேர இடைவேளையின்போது, நூலக அறையில் அமர்ந்து செய்தித் தாள்கள் வாசிக்கும் பழக்கம் மாணவ - மாணவியரிடையே கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. பள்ளி துவங்கும் முன்பாக, தினசரி அரைமணி நேரம் நாதஸ்வர இசை ஒலிபரப்பப்படுகிறது; அதன் பின்னர் கடவுள் வணக்கம்; தினசரி தேசியக் கொடியேற்றுதல், அன்றைய முக்கிய செய்திகள் வாசித்தல்; பிறகு மாணவர்கள் வகுப்புக்குச் செல்வர்.

இங்கு பயில்பவர்கள் அனைவருக்கும் மேம்பட்ட வசதிகளோடு கல்வி வழங்கிட வேண்டுமென்கிற நோக்கத்தில்தான் இந்தச் செயல்பாடுகள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன!'' எனச் சொல்கிறார் **மாங்குடி கிராமத்தின் அரசு நடுநிலைப்பள்ளி** தலைமையாசிரியர் ஜோதிமணி.

**பு**துக்கோட்டை மாவட்டம், அறந்தாங்கி அருகே அமைந்துள்ளது மாங்குடி கிராமம். அழகிய சுற்றுச் சுவர். அதனுள்ளே வளர்ந்தோங்கிய பசுமையான மரங்கள், முக்கிய வாசலைத் தாண்டியவுடன் இருபுறமும் அணிவகுத்து வரவேற்கின்றன.

''ஐம்பத்தியொரு வகை மூலிகைச் செடிகள் மற்றும் பூச்செடிகள் - அதற்கான பெயர்ப் பலகைகளோடு மாணவ - மாணவிகள் அறிந்திட வேண்டி காட்சியளிக்கின்றன. இங்கு படிக்க வரும் மாணவ - மாணவிகளின் குடும்பச் சூழல் எப்படி இருந்தாலும், இந்தப் பள்ளிச் சூழல் அவர்களின் மனத்தை இலேசாக்கி விடும். மூளைத்திறன் சோர்வின்றி சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கிவிடும். இந்த அரசு நடுநிலைப்பள்ளியினை அப்படியொரு நந்தவனச் சூழலில் அமைத்துள்ளோம்!'' எனக் கூறுகின்றனர் பள்ளியின் சக ஆசிரியர்கள் அனைவரும். கடவுளே ஓய்வெடுக்க ஆசைப்பட்டு, தேர்வு செய்யும் இடமாக இந்த வகுப்பறைகள் இருக்கும் என்பதில் மாற்றுக் கருத்து ஏதுமில்லை.

செய்தியும், சித்திரங்களும்: **திருநாவு**



## காட்டுத்தீ!

இடதுசாரிகள் மாயாவதியுடன் கைகுலுக்கியதைத் தொடர்ந்து, மே.வங்காளத்தில் இடதுசாரிக் கூட்டணி அரசுக்குச் சிம்ம சொப்பனமாக இருக்கும் மம்தா பேனர்ஜியைச் சந்தித்து கை குலுக்கி இருக்கிறார் சமாஜ்வாதி கட்சியின் அமர்சிங். காங்கிரஸ் கூட்டணியும் வேண்டாம்; பா.ஜ.க. கூட்டணியும் வேண்டாம் என்று சொல்லி ஒரு நபர் படையாக பாராளுமன்றத்தில் தனித்து இருக்கும் மம்தாவிடம், ''உங்களுக்குப் பக்கபலமாக பாராளுமன்றத்தில் நாங்கள் இருக்கிறோம். கவலைப்படாதீர்கள்'' என்று கூறி இருக்கிறார் முலாயம் சிங்கின் தளபதி அமர்சிங். எதிரியின் எதிரி, நண்பர் என்ற அரசியல் தத்துவம் காட்டுத் தீ கணக்கில் பரவிக்கொண்டிருக்கிறது!



★ தாகூர்

## துணை ஜனாதிபதி சாட்டர்ஜி?

சபாநாயகர் பதவியை சோம்நாத் சாட்டர்ஜி ராஜினாமா செய்யவில்லை என்பதை, வங்காளத்தில் பல இடதுசாரி அபிமானிகளால் ஜீரணித்துக்கொள்ளவே முடியவில்லை. சபாநாயகர் பதவி கட்சிக்கு அப்பாற்பட்டது என்றால், சபாநாயகர் பதவியில் இருந்தபோதும் தனது மார்க்சிஸ்ட் கட்சி மெம்பர்ஷிப்பைத் தொடர்ந்து புதுப்பித்தாரே அது ஏன்? சிறப்பு அழைப்பாளராக கட்சி நிர்வாகக் குழுக் கூட்டங்களில் கலந்து கொண்டாரே அது எப்படி சரி? என்றெல்லாம் கேள்வி கேட்கிறார்கள். மேலும் எந்தச் சர்ச்சைகளிலும் சிக்கிக்கொள்ள விரும்பாத சாட்டர்ஜி தற்போது மௌனம் காத்தாலும், ஜோதிபாசு தலையிட்டு அவரை மீண்டும் கட்சிக்குள் கொண்டு வந்துவிடுவார் என்கிறார்கள். 'இல்லை... ஆக்டிவ் பாலிடிக்ஸில் இருந்து அவர் ஒதுங்கி விடுவார்' என்றும் சொல்கிறார்கள். வாய்ப்பு கிடைக்கும்போது அவரது பெயர் துணை ஜனாதிபதி பதவிக்குப் பரிசீலிக்கப்படும் என்றும் ஒரு நியூஸ் உலா வருகிறது.

## Google தேடிக் கண்டுபிடிக்க



# முடியாத கூகுள் சர்ச்!

கொல்கத்தாவைச் சேர்ந்த பாஸ்வதி - முகர்ஜி தம்பதிக்குத் தாங்க முடியாத சோகம். கூகுள் இந்தியா என்னும் இணையதள நிறுவனத்தில் வேலை பார்க்கும் அவர்களுடைய மகள் ரோஷ்னி, மருமகன் ஹரி இருவரும் கோதாவரி எக்ஸ்பிரஸில் ஹைதராபாத் புறப்பட்டுச் சென்றனர். தீப்பிடித்து எரிந்த அந்த ரயிலின் சில பெட்டிகளில் ரோஷ்னி-ஹரி பயணம் செய்த எஸ் 10ம் ஒன்று. சம்பவம் நடந்த இடத்துக்கு விரைந்த ரோஷ்னியின் தந்தையும், அக்காவும் கருகிய உடல்கள் கட்டி வைக்கப்பட்ட வெள்ளை மூட்டை களைப் பார்த்து விக்கித்துப் போய் நின்று விட்டார்கள். எவ்வளவு முயற்சி செய்தும், ரோஷ்னி- ஹரியை அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. 'இவ்வுலகில் எது வேண்டுமென்றாலும், கூகுள் சர்ச் இன்ஜினில் தேடினால் நிச்சயம் கண்டுபிடித்து விடலாம். ஆனால், இந்த கூகுள் தம்பதி உடல்களைக் கண்டுபிடிக்க முடியவில்லையே' என்று கதறி அழுதார் பெண்ணைப் பறிகொடுத்த முகர்ஜி.



* மம்தா பேனர்ஜி



* சாட்டர்ஜி



* அமர்சிங்

## எழுத்தாளர் கூட்டணி!

நோபெல் பரிசு பெற்ற கவிஞர் தாகூர் பல கதைகள் எழுதியது தெரியும். ஆனால், அவரது அண்ணன் சத்யேந்திர நாத் தாகூர் மற்றும் அபனிந்திர நாத் தாகூர், ஷேதிந்திரநாத் தாகூர், பிரமதா சௌத்ரி, மணிலால் கங்கோபாத்யாய், மோகன்லால், ஷௌவன் லால் என்று தாகூர் குடும்பத்தைச் சேர்ந்த பலரும் ஒன்று சேர்ந்து எழுதிய கதைகளின் தொகுப்பு ஒன்றை சாந்திநிகேதன் வெளியிடப் போகிறது. அதற்கு வங்காளத்தின் இலக்கிய ரசிகர்கள் மத்தியில் பெரும் வரவேற்பு இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

– கௌதம் ராம்

# 50 Kg தாஜ்மஹால்!

அன்று ஸ்கூல் விட்டு வந்த ஸ்வேதா, 'அம்மா எனக்கு ஆலு ஸாண்ட்விச் வேணும்' என்றாள். காலையில் மீதமிருந்த உருளைக்கிழங்கு நினைவுக்கு வந்தது. பிரெட்டின் உள்ளே வைத்து டோஸ்ட் செய்தவள், தனக்கும் ஒன்று எடுத்து வைத்தாள். 'கிழங்கு வகைகளைக் கண்டிப்பா தொடக்கூடாது' - டாக்டரின் குரல் அசரீரியாய் காதில் ஒலித்தது.

செவ்வாய்க்கிழமை நல்ல நாள் இல்லை. பொன் கிடைச்சாலும் புதன் கிடைக்குமா? நாளையிலிருந்து டயட்டை ஆரம்பிச்க்கலாம் என்ற முடிவுக்கு வந்தாள் அருணா. ஒரு ஸாண்ட்விச்சை விழுங்கி தண்ணீயைக் குடித்தபின்தான் மனது அடங்கிற்று.

சரி நாளைக்கு என்ன சமைக்கலாம்? அதற்கு முன்னால் வாக் போவது நினைவுக்கு வந்தது. தனியாக நடப்பது ஒரே போர். பக்கத்துப் பக்கத்துத் தெருவில் வசிக்கும் சுபா, மீனா, ரம்யாவெல்லாம் சேர்த்துக்கொண்டால் பேசிக்கொண்டே நடக்கலாம்; அலுப்பும் தெரியாது. உடனே அவர்களுக்கெல்லாம் வரிசையாக ஃபோன் செய்ய ஆரம்பித்தாள்.

''சுபா, நாளையிலிருந்து வாக் ஆரம்பிக்கலாம்னு இருக்கேன் வர்றியா போலாம்?'' அவளும், ''ம் போலாமே... எத்தனை மணிக்கு வரணும், எங்கே வரணும். பை தி வே யாரெல்லாம் போகப் போறோம்?'' என்று லிஸ்ட் கேட்டுக் கொண்டிருந்தாள். ஒரு வழியாக எல்லோரும் பொதுவாக பிள்ளையார் கோயில் வாசலில் மீட் செய்து, வாக் ஆரம்பிக்கத் திட்டமிட்டார்கள்.



லக்ஷ்மி மோகன்

# வாக்கிங் பேரணி!

''நீ கூட்டம் கூட்டறதப் பார்த்தா வாக் போகப் போற மாதிரி தெரியல. பேரணி போற மாதிரி தெரியுது'' என்றான் ஹரி. ''அம்மா நானு'' என்று இழுத்தாள் ஸ்வேதா. ''சும்மா இருடி. உன்னைய விட்டுட்டு பிக்னிக் போயிடுவேனா. வாக்தான் போகப் போறோம்.''

''எப்ப வருவ?'' என்றாள் ஸ்வேதா.

''ஒரு மணி நேரத்துல வந்துடுவேன்.''

''எனக்கு என்னமோ இது சரிப்பட்டு வரும்னு தோணல'' என்றான் ஹரி.

''நாங்க எல்லாம் சேர்ந்து ஒரு நல்ல காரியம் செஞ்சா, உங்களுக்குப் பிடிக்காதே. எனக்கு மாமியாரே நீங்கதான்'' என்று முறைத்தாள்.

''சரி, சரி. காலையில சீக்கிரம் எழுந்துக்கணும். அலாரத்தை அஞ்சு மணிக்கு வைங்க'' என்றபடி பெட் ரூமுக்குள் நுழைந்தாள்.

ஹரியும் அரை மனத்துடன் வாக் கிளம்புவதற்குத் தனது பழைய ஷூவைத் துடைத்து வைத்துக்கொண்டான்.

அருணாவுக்கு கலர் கலர் கனவுகள். இளைத்துத் துரும்பாகிவிட்டாள். போகுமிடமெல்லாம் ரிப்போர்ட்டர்ஸ் அவளிடம் டிப்ஸ் கேட்டார்கள். பதில் சொல்லிச் சொல்லி வாய் வலித்தது அவளுக்கு. சட்டென்று முழித்துக்கொண்டவள் மணியைப் பார்த்தாள். அதிகாலை மணி நான்கு. ஆஹா, இந்தப் பொழுதில் கண்ட கனவு பலிக்கும்னு சொல்வாங்களே. கனவு தொடர மீண்டும் இழுத்துப் போர்த்திக்கொண்டாள்.

(தொடரும்)

உடல் எடையைக் குறைக்க முயற்சிப்போர், மாவுச் சத்தையும் புரதச் சத்தையும் அதிக அளவில் குறைக்க வேண்டும். கிழங்கு வகைகளை அறவே தவிர்க்க வேண்டும். இப்போது நாம் சாப்பிடும் பாலிஷ் செய்யப்பட்ட அரிசியைக் காட்டிலும், பாலிஷ் செய்யாத கைக் குத்தல் அரிசிதான் சிறந்த உணவு. மேலும், சீரான உடற்பயிற்சியுடன் சிறந்த உணவுப் பழக்கமும் எடைக் குறைப்பில் முக்கிய பங்கு வகிக்கிறது. முழு கோதுமை, ஓட்ஸ், சோளம், ராகி போன்ற நார்ச் சத்துள்ள தானியங்களை அரிசிக்கு மாற்றாக எடுத்துக்கொள்ளலாம். ஆட்டா, மைதாவில் செய்த பிரெட், ஸாண்ட்விச், பீட்ஸா போன்றவற்றைத் தொடக்கூடாது. இவற்றில் மாவுச் சத்து அதிகம்!



• ஜெயராவ்



• நாடகத்தில் ஒரு காட்சி

# மகாவுடன் 10 நாட்கள்

**ந**வீன நாடக உத்திகளைக்கொண்டு நாடகங்களை நடத்தி, நாடக பயிற்சியும் அளிக்கும் குழு தியேட்டர் லேப்.

சமீபத்தில் (3.8.08) அலையன்ஸ் பிரான் சேஸ் அரங்கத்தில் நிகழ்த்திய நாடகம் 'மகா'வுடன் 10 நாட்கள். மரண வீடுகளில் கானா பாடல்களைப் பாடும் 'மரண கானா' விஜி என்பவரின் வாழ்வில் நிகழ்ந்த ஒரு அனுபவம் நாடகமானது.

சினிமா மோகத்தில் காதலனோடு சென்னை வந்த மகா எனும் பெண், பாலியல் கொடுமைக்கு ஆளாகி புத்தி சுவாதீனம் இழந்து கல்லறையில் சுற்றிக் கொண்டிருக்க, அவளை மீட்டு ஒரு குடிசைப் பகுதியில் தங்க வைத்து விட்டுப் போக, அந்த நிலையிலும் அவள் கொடுமைக்கு உள்ளாகிறாள். மகா இறக்கிறாள். மகா சடலத்தை இடுகாட்டுக்கு ஆண்கள் தூக்கும்போது, நாடகம் பார்த்துக்கொண்டிருந்த கல்லூரி மாணவி ராஜேஸ்வரி அரங்கத்தை நோக்கி ஓடிவந்து, ''செத்த பொணத்தை விட மாட்டீங்களா, உங்க விரல் கூடப் படக்கூடாது'' எனக் கதறி ஆண்களை விரட்டி விட்டு, அழுத படியே மகாவின் உடலை அவளே இழுத்துச் செல்கிறாள்.

இந்த நாடகத்தில் கானா பாடல்களும் இடம் பெற்றன. ஆண் ஆதிக்க சமூகத்தில் உலகில் தனிமையில் பெண் எதிர்கொள்வது துயரம்தான். இந்த நிலை குறித்து விழிப்புணர்வு வேண்டும் என்பதற்கே இந்நாடகம்'' என்கிறார் இயக்குநர் ஜெயராவ். நடிப்பும் உரையாடலும் விசேஷமான இயல்பு!

நமது சமூக அவலத்தை நமக்கு முன்னால் திறந்துகாட்டி, 'இதில் உனக்குப் பங்கில்லையா? இது உன் பிரச்னைதானே... எப்படி மாற்றலாம்? கொஞ்சம் யோசி' என சொல்லாமல் சொல்லி, அரங்கத்தை விட்டு அனுப்பியது இந்த நாடகம்.

இயக்குநர் மிஷ்கின், இறுதிவரை இருந்து பாராட்டிவிட்டுப் போனது நல்ல முன்னுதாரணம்.



**- சொர்ண பாரதி**

படம்:
**மணிமேகலை நாகலிங்கம்**

# ஒண்ணும் ஒண்ணும் ஒண்ணு!

''பிரசுரத்துக்கு ஏற்றதல்ல'ன்னு ஜோக்கைத் திருப்பி அனுப்பினதுக்காக ஒருவர் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருக்கார் சார்...''

''என்னன்னு...?''

'''நாலு வருஷம் முந்தி இதே ஜோக்கை பிரசுரிச்சிருக்கீங்களே, அது எப்படி?'ன்னு கேட்டிருக்கார் சார்!''

**- சீர்காழி வி.ரேவதி**



''ஊரில் உள்ள மன்னர்களை எல்லாம் பாடுகிறீர்கள். எங்கள் மன்னரையும் புகழ்ந்து பாடுங்களேன் புலவரே...''

''மன்னித்துக்கொள்ளுங்கள் அமைச்சரே. அந்த அளவு கற்பனை வளம் எனக்கில்லை...''

**- கே.ஆனந்தன்**

''எம்.காம். படிச்சுட்டுச் சும்மா இருக்கேன்...''

''அதுக்கு நீ பி.காம். படிச்சுட்டு கூடுதலா ரெண்டு வருஷம் சும்மா இருந்திருக்கலாம்!''

**- ஜே. தனலட்சுமி**

''நான்சென்ஸ் - நான் சொல்றது ஒண்ணு... நீ செய்யறது ஒண்ணு.''

''அப்ப ரெண்டும் ஒண்ணுதானே சார் - அப்புறம் எதுக்கு சார் என்னைத் திட்டுறீங்க?''

**- எம்.அசோக்ராஜா**





1. விஜய் கபடி வீரராக நடித்திருக்கும் இந்தப் படத்தின் ஸ்டண்ட் மாஸ்டர்?

..........................................................

2. இந்தப் படத்தில் விஜய்யின் அம்மாவாக நடித்த முன்னாள் ஹீரோயின்...?

..........................................................

3. இந்தப் படத்தில் இடம் பெற்ற 'அப்படிபோடு' பாடலை எழுதிய கவிஞர்?

..........................................................



# நீங்கள் ஆவலோடு எதிர்பார்த்த...

# விஜய் வின்னர்ஸ் பம்பர் பரிசுப் போட்டி!

7. 'குருவி'யின் டான்ஸ் மாஸ்டர் யார்?

..........................................................

8. 'விஜய்' குருவியோடு மலேசியா போகும் மற்றொரு 'குருவி'?

..........................................................

9. 'ஸ்டில்'லில் இடம் பெற்றிருக்கும் பாடல்?

..........................................................



4. இந்தப் படம் விஜய்யின் ஆக்ஷன் திருப்புமுனை?

..................................................

5. விஜய்யுடன் ஒளிமயமான நடிகை இரண்டாவது முறையாக நடித்திருக்கிறார்... யார்?

..................................................

6. இந்தப் படத்தின் இயக்குநர்?

..................................................



**விஜய் வின்னர்ஸ் பம்பர் பரிசுப் போட்டிக்கான விடைகள் வந்து சேர**
கடைசி தேதி : 3.9.2008

**பொருத்துக :**

10. இயக்குநர் - ஏ.ஆர்.ரஹ்மான்
11. இசை - நா.முத்துக்குமார்
12. மதுரைக்குப் போகாதடி - பரதன்

பெயர் : .................................................. வயது : ..................

முகவரி : ..................................................

..................................................

செல் : .................................. இ.மெயில் : ..................................

*இந்த இரண்டு பக்கங்களையும் பூர்த்தி செய்து இதனோடு 15 வார தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்களையும் சேர்த்து அனுப்ப வேண்டிய முகவரி:*

**விஜய் வின்னர்ஸ் பம்பர் பரிசுப் போட்டி,**
கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032




பழைய கறுப்பு வெள்ளை சரித்திரப் படங்களில் பக்கம் பக்கமாகப் பேசும் வசனத்தில் தவறாமல் ஒரு வரி இடம் பெற்றிருக்கும். 'மன்னரின் நாவசைந்தால் நாடே அசையும்'. ராஜாவின் கூஜா யாரும் இப்படிக் கூறாமல் சாமானியனும் நாவை அசைக்கலாம். கம்ப்யூட்டர் நாவை அசைக்காது. ஆனால், நடமாட உதவி செய்யும்.

பெரிய விபத்துகளில் சிக்கி முதுகுத் தண்டில் பாதிப்பு ஏற்பட்டு மூளை கட்டளையிட முடியாமல் போய், அசைவு முழுக்க நின்று போகிறது. பேச்சும் தான். முதுகு பாதிக்கப்பட்டாலும் பெரும்பாலும் எந்தச் சேதாரமும் இன்றித் தப்பிப்பது நாக்கு. இது நேரடியாக மூளையோடு நரம்பு வழியாக இணைக்கப்பட்டிருக்கும் ஒரே மனித உறுப்பு. உடம்பே மரத்துப் போனாலும், நாக்கு மட்டும் அசையும்.

முடக்குவாதம் வந்து படுத்த படுக்கையாகக் கிடக்கும் நோயாளி, நாவசைத்து அங்கே இங்கே நடமாட, தொழில்நுட்பம் துணை புரிகிறது. பச்சரிசி சைஸில் ஒரு குட்டியூண்டு சிலிக்கான் சில்லு. அதை நோயாளி நாக்கில் உபத்திரவம் இல்லாமல் ஓர் ஓரமாகப் பதிக்க வேண்டும். அவர் அமர ஒரு சக்கர நாற்காலியும் தேவை. நாக்கை மடித்து அல்லது இடம் வலமாக அசைத்தால் மட்டும் போதும். நாக்கில் பதித்த சில்லு, அந்த அசைவை அர்த்தப்படுத்திக் கொண்டு சக்கர நாற்காலியில் பொருத்திய சென்சருக்குச் சிக்னல் அனுப்பும். நாற்காலி நகரும். திரும்பும். நிற்கும்!

• • •

படிக்கும் வயதில் ராத்திரி நேரம் கழித்துத் தூங்குவது வாடிக்கை. ராத்திரி தாமதமாக உறங்கி, காலையில் சீக்கிரம் எழுந்து பள்ளிக்கூடம் ஓடினால் நாள் முழுக்க ஒரு சோர்வு. அடுத்த இரவு மறுபடி தாமதமான உறக்கம் அல்லது உறக்கமின்மை, திரும்ப அசதி.

இருட்டு வந்ததும் உறங்கி, சூரியன் வந்ததும் எழ வைக்கும் உயிரியல் கடிகாரம் மரபணு வழியாக ஆதி மனிதனில் தொடங்கி நமக்குள் தொடர்கிற ஒன்று. அந்தக் கடிகாரத்தின் இயக்கம், இரவினில் நீண்ட நேரம் கண்விழித்து காலையில் சீக்கிரம் எழும்போது தாறுமாறாவதால் ஏற்படும் அசதி இது. வெளிச்ச சிகிச்சை மூலம் அசதியும் தூக்கமின்மையும் போகும் என்கிறது புதிய மருத்துவக் கண்டுபிடிப்பு.

அயர்வோடு காலையில் எழும்போது, நீல நிற ஒளிக்



கதிர்கள் கண்ணில் படாமல் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட கண்ணாடியை அணிந்து கொள்ள வேண்டும். நேரமாக ஆக, உடலின் குறைந்தபட்ச வெப்ப அளவு கூடும். அப்போது பள்ளியில் நீல வெளிச்சம் வெளிப்படும் கம்ப்யூட்டர் திரைக்கு முன் மாணவர்களை உட்கார்த்த வேண்டும். அவர்களுடைய தூக்க நேரமும் விழிப்பு நேரமும் எந்தக் கோளாறும் இல்லாமல் பழையபடிக்கு வரும். அசதியும் களைப்பும் ஓடி மறையும்.

மருத்துவமும் தொழில்நுட்பமும் இப்படி ஒரு பக்கம் நன்மையைக் கொண்டு வரப் பாடுபட்டுக்கொண்டிருக்க, இன்னொரு புறம் அறிவியல் கண்டுபிடிப்பு ஒன்று, ரெண்டுங்கெட்டானாக பயன் கொடுக்குமா கெடுக்குமா என்று முழிக்க வைக்கிறது.

தினசரி தவறாமல் ஒரு மணி நேரமாவது வியர்த்து விறுவிறுத்து உடற்பயிற்சி செய்தால், உடல் வலுப் பெறும். உடற்பயிற்சி இல்லாத உடம்பு, ஊளைச் சதை பிடித்து ஊதிப் போகும். இது காலம் காலமாக படித்தும் அனுபவித்தும் தெரிந்துகொண்ட பாடம். உடற்பயிற்சி செய்த உடம்பு, கொழுப்பைக் கரைப்பதால் உடல் டிரிம் மாக இருக்கும். ஓடியாடி உடற்பயிற்சி செய்த தாக மூளையை

# ஜெயிக்கப் போவது யாரு?



ஏமாற்றி நம்ப வைத்தாலும், கொழுப்பு கரைவது ஆரம்பமாகி விடும் என்கிறது புதிய ஆராய்ச்சி! இந்த ஏமாற்று மாத்திரையைச் சாப்பிட்டால் எத்தனை கொழுப்புச் சத்துள்ள உணவை உண்டாலும் வெய்ட் போடாது என்பதோடு, ஒலிம்பிக் வீரர்கள் போல் பலத்தோடும் சக்தியோடும் எப்போதும் இருக்கலாம் என்றும் சொல்லப்படுகிறது! வரும் ஒலிம்பிக்கின்போது இதைச் சாப்பிட்டு, விளையாட்டு வீரர்களுக்குச் செயற்கையாகச் சக்தி கூடினால் கண்டுபிடிக்கவும் ஆராய்ச்சி தொடர்கிறது. இப்படியாய் இயற்கையை வெல்ல மனிதனின் விஞ்ஞானம் போராடுகிறது. இந்தப் போரில் ஜெயிக்கப் போவது யாரு? என்பதற்கு இப்போதைக்குப் பதிலில்லை. ○

சங்கீதா நடித்துள்ள 'தனம்' படத்தின் கேசட் வெளியீட்டு விழாவில் பேசிய இயக்குநர் பாலசந்தர், 'இப்படியொரு திறமையான நடிகையை என் படத்தில் பயன்படுத்திக்கொள்ளாமல் விட்டுட்டேனே' என்று வருத்தம் தொனிக்க கருத்து தெரிவிக்க... கோலிவுட்காரர்களின் பார்வை தற்போது சங்கீதா மீது அழுத்த மாய்ப் பதிந்திருக்கிறது. அவரோடு பேசினோம்...

***கஞ்சா விற்கும் பெண், காமுக அண்ணி, விலைமகள் கேரக்டர் - விளம்பரத்துக்காகவும், பரபரப்புக்காகவும் இப்படிப்பட்ட கேரக்டர்களையே செய்கிறீர்களா?***

"நீங்க 'தனம்' பார்த்துட்டீங்களா? அப்புறம் எப்படி இப்படியொரு கேள்வி கேட்கறீங்க? சொல்லப் போனா, பத்திரிகைக்காரங்கதான் இந்த விஷயத்தை இவ்வளவு பரபரப்பாக்கிட்டீங்க. நான் இதுபத்தியெல்லாம் யோசிக்கிறதில்லை. நான் ஒரு நடிகை. நடிக்கிறது என் வேலை. 'தனம்' படத்தில் வருவதும் எல்லா கேரக்டர்கள் மாதிரி ஒரு கேரக்டர். அதில் என்னை நடிக்கக் கேட்டாங்க. நான் நடிக்கிறேன். அவ்வளவுதான். இதில் விளம்பரம் கிடைக்குமா? பரபரப்பு ஏற்படுமா என்றெல்லாம் நான் பார்ப்பதில்லை."

***விருது வாங்கும் எண்ணத்தில்தான் இதுமாதிரியான வித்தியாச கேரக்டர்கள் செய்கிறீர்களா?***

"அதெல்லாம் இல்லீங்க. என்னை வைச்சுப் படமெடுக்கிற தயாரிப்பாளர் நல்லா சம்பாதிச்சு சந்தோஷமா இருந்தா

## நாங்களும்தான்...

கல்கி இதழில் (10.8.2008) இலவச உள் அண்ணப்பிளவு அறுவை சிகிச்சை பற்றிய கட்டுரை படித்தோம்.

மதுரையில் எங்களது மீனாட்சிமிஷன் மருத்துவமனையிலும், உதடு பிளவு, மேல் அண்ணப்பிளவு உள்ளவர்களுக்கு மூன்று மாதம் முதல் நாற்பது வயது வரை இல வசமாக அறுவை சிகிச்சை செய்து தரப்படுகிறது.

தமிழ்நாட்டில் உதடுபிளவு, உள் அண்ணக் குறைபாடுள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுக்கு அறுவை சிகிச்சை, உணவு, தங்குமிடம், பேச்சு பயிற்சி ஆலோசனை முற்றிலும் இலவசமாக அளிக்கத் தயாராக இருக்கிறோம்.

உங்களுக்கு உதவி தேவையெனில் தொடர்பு கொள்க.

**மீனாட்சி மிஷன் ஆஸ்பிட்டல்,**
**லேக் ஏரியா, மேலூர் ரோடு,**
**மதுரை - 625 107. ஃபோன் :**
**0452-2588741**

# பரபரப்புக்காக நடிக்கிறீங்களா?

போதும். எனக்கு இப்பவே வீட்ல வரன் பார்த்துட்டு இருக்காங்க. நாளைக்கு என் கணவர், குடும்பம்னு வாழும்போது... என் குழந்தைகள்கிட்ட இது அம்மா நடிச்ச படம்னு காட்டணும் இல்லையா? அது மாதிரி, தரமான பத்து படங்களாவது நான் நடிச்சது இருக்கே... அது போதும்!''

***'தனம்' படத்தின் பாலியல் தொழிலாளி கேரக்டர் உங்களை எந்த அளவுக்குப் பாதிச்சது? அதுக்கு யாரையாவது ரோல் மாடலா வைச்சு நடிச்சீங்களா?***

''யாரையும் பின்பற்றி எல்லாம் நடிக்கலை. டைரக்டர் என்ன சொன்னாரோ, எனக்கு என்ன தோணுச்சோ அதைச் செய்தேன். பாலியல் தொழிலாளிகளோட வாழ்க்கையை நியாயப்படுத்தவோ, குறை சொல்லவோ வரலை. அவங்கள்ல 'தனம்'ங்கற ஒரு பாசிட்டிவான பெண்ணின் வாழ்க்கை பற்றிய நாவல் இது.''

***திரையுலகில் உங்களைப் பாதிக்கிறவர்கள்?***

''கமல் ஒரே ஒருத்தர் மட்டும்தான். அவரை நினைச்சாலே ஆச்சர்யமா இருக்கு. அவரை மாதிரி இன்னொருத்தர் இனி வரவே முடியாது.

பர்சனலா எனக்குப் பிடிச்ச மனுஷன் பாலா சார். அப்படியோர் அன்பான மனுஷனை, அக்கறையான மனுஷனை எங்கேயும் பார்க்க முடியாது. நமக்கு ஒரு பிரச்னைன்னு சின்ன ஃபோன் பண்ணினா போதும். அடுத்த நிமிஷம் உதவிக்கு வந்துடுவார்.''

**- ஷைலஜா ஜெயராஜ்**

'தனம்' படத்தில்





# சும்மா... பேசுங்க!

''தலைவரை அடிக்கடி மாற்றுவதை விட, ஆளுக்கு ஒரு வருஷம் என்ற அடிப்படையில் 10 வருஷத்துக்கு தலைவரை கட்சி தேர்ந்தெடுத்துவிட்டால்... காப்பாற்றவும் கவிழ்க்கவும் டெல்லி செல்ல வேண்டிய அவசியம் எழாது என இந்த நேரத்தில் சொல்லிக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன்.''

- ராஜிராதா



''அந்தாளு, மனைவியை ஆறு மாசமா பிரிஞ்சிருக்கிறார்...''

''ஆறு மாசமா அந்தாளு மூஞ்சியில ஒரு தேஜஸ் இருக்கறப்பவே சந்தேகப் பட்டேன்!''

- வி.சகிதா முருகன்

''ரௌடி கபாலி தொழிலுக்கு வாலன்ட்ரி ரிட்டயர்மென்ட் கொடுத்தது ஏன்?''

''வயசானதால அரசியல் தொழில்தான் சிறந்த வழின்னு அவன் நினைக் கிறானாம்.''

- ஆர்.செந்தில்முருகன்



## தன்னம்பிக்கை டானிக்!

**அறிந்த ஆலயங்கள் அபூர்வ தகவல்கள் - விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 02. விலை ரூ.125/-**

பிரபலமான ஆலயங்களைப் பற்றிய செய்திகளைக் கொண்ட கட்டுரைகளின் தொகுப்பு. ஒவ்வோர் ஆலயத்தில் உறையும் பெருமான்கள் பற்றியும் ஆலயத்தின் சிறப்புகள், உற்சவங்கள், தலங்களின் மகிமை... என பல அரிய தகவல்கள் இதில் அடுக்கப்பட்டுள்ளன. கச்சிதமான கண்கவர் வண்ணப்படங்களால் நம் கண் முன் ஆலயத்தை நிறுத்துவது கூடுதல் சிறப்பு.




**ஒவ்வொரு நாளும் சவால்தான்! - டேபிள் டென்னிஸ் வீரர் வே.சந்திரசேகர், தமிழில்: டி.வெங்கடகிருஷ்ணன், கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை. ரூ.70/-**

தேசிய டேபிள் டென்னிஸ் வீரர் சந்திரசேகரின் வாழ்க்கைப் போராட்டத்தைச் சொல்லும் நூல். புகழின் உச்சத்தில் இருந்த இந்தச் சாம்பியனுக்கு மூட்டு அறுவை சிகிச்சை செய்யப்பட்டபோது, எதிர்பாராதவிதமாக செயல்பட இயலாதவராக ஆன அவரின் வாழ்வைப் புரட்டிப் போட்ட சூழல்; அதிலிருந்து வெளி வந்து, தம் லட்சியத்தை அடைய எதிர்கொண்ட சவால்கள் நிறைந்த போராட்டங்கள்... என பல அதிர்ச்சியூட்டும் நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளார். தன்னம்பிக்கை டானிக் இந்நூல்.




**பசுமரத்தாணி - சாகித்யன், ருத்ரா பதிப்பகம், 14-ஏ, முதல் தெரு, அருளானந்தம்மாள் நகர், தஞ்சாவூர். விலை ரூ.70/-**

சாகித்யனின் பதினேழு சிறுகதைகள் அடங்கிய புத்தகம். சரளமான கிராமிய மொழி வழக்கில் கதைகள் எழுதப்பட்டுள்ளன. சில கதைகள் திரைப்படத் தன்மையுடன் விளங்குகின்றன. வாழ்க்கையின் அவலங்களை இயல்பான எளிய நடையில் வெளிப்படுத்தியுள்ளார் நூலாசிரியர்.



**செந்தூரம் ஜெகதீஷ் கவிதைகள் - சிருஷ்டி, 6, புரசை நெடுஞ்சாலை, சென்னை - 7. விலை. ரூ.60/-**

பாஷா பாரதி சம்மான் தேசிய விருதும், தஞ்சை ப்ரகாஷ் இலக்கிய விருதும் பெற்ற செந்தூரம் ஜெகதீஷ் எழுதிய கவிதைகளின் தொகுப்பு. துக்கத்தையும், தனிமையையும் கவித்துவ அழகுடன் சொல்லிச் செல்லும் இத்தொகுப்பில் ஹைக்கூ தூறல்களும் இடம் பெற்றுள்ளன.




- மித்ரா

ஒரு பதினைந்து நிமிடங்கள் செலவழித்து இணையதளத்தில் உலாவி விட்டு வாருங்கள். நம்மூர் கணக்கில் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள மருந்து மாத்திரைகள், சிங்கப்பூரில் இருநூறு ரூபாய்க்குக் கிடைக்கின்றன. தபால் செலவு இலவசம். 'அட பரவாயில்லையே சகாய விலையில் கிடைக்கிறதே' என்று நம்பி வாங்குபவர்களுக்கு, இரண்டு ஆபத்துகள் காத்துக் கொண்டிருக்கின்றன. மருந்து போலி என்பதால், உபாதை சர்வ நிச்சயமாகத் தீரப்



# மலிவு



போவதில்லை. பல புதிய உபாதைகள் தோன்றுவதற்கு வாய்ப்புகள் பிரகாசம்.

அசல் போலவே தோற்றமளிக்கும் இந்த மாத்திரையை உடைத்துப் பார்த்த அதிகாரிகள் அதிர்ந்துவிட்டார்கள். உள்ளே இருந்தது சாக்பீஸ் தூள், மைதா மாவு, மரப் பட்டை, கலர் பொடிகள். அவ்வளவே! போலி மருந்துகள் மாத்திரமல்ல. போலி இன்ஜெக்ஷன், போலி பிளாஸ்திரி, போலி க்ளுகோஸ், போலி மருத்துவ உபகரணங்கள். அனைத்தும் கிடைக்கின்றன. ஒரு வருடத்துக்கு 600 பில்லியன் டாலர் ஜிகினா மருந்துகள் விற்பனையாவதாகச் சொல்கிறார்கள். இந்த எண்ணிக்கையை மருந்து மாத்திரைகளாக மாற்றி யோசித்துப் பாருங்கள். ஆபத்தின் பிரமாண்டம் புரியும்.

போலி மருந்துகளைப் போலவே ஆபத்து நிறைந்தவை போலி மது வகைகள்.

ஹாங்காங், துபாய் - வெளிநாட்டுப் பயணிகளின் சொர்க்கபுரியாகத் திகழும் இந்த இரு நாடுகள்தாம் கடத்தல்காரர்களுக்கும் சொர்க்கபுரி. துபாய் என்றால் கூடுதல் வசதி. ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா என்று எங்கும் எதையும் தடையின்றி அனுப்பி வைப்பது சாத்தியம்.

எத்தனை தீவிரமாக பாதுகாப்பைப் பலப்படுத்தினாலும் பல்லி மிட்டாய் அள

வுக்கு ஏதாவதொரு ஓட்டை ஏற்படுத்தி விடுகிறது. கடத்தல்காரர்களுக்கு, பல்லி மிட்டாய் ஓட்டை போதும். யானையைக் கூட நுழைத்துவிட முடியும். இந்த ஆண்டு, முதல் ஐந்து மாதங்களில் மட்டும் 293 டன் போலி மருந்துகளை துபாய் துறை முகத்தில் கண்டெடுத்து அழித்திருக் கிறார்கள்.

போலி வாட்ச், போலி டி.வி.டி. ப்ளே யர், போலி கம்ப்யூட்டர் - இவற்றால் பெரி தாக என்ன ஆபத்து வந்துவிடப் போகிறது?

எங்கோ ஒரு மூலையில் அமர்ந்து கொண்டு இரவு பகல் பாராமல் சிரமப் பட்டு, ஒரு தொழில்நுட்பத்தை ஒருவர் கண்டுபிடிக்கிறார். சந்தையில் நுகர்வோர், அதை ஆவலுடன் வாங்கிப் பயன்படுத்த ஆரம்பிக்கும்போதே, சகாய விலையில் அச்சு அசலாகப் புழக்கத்தில் நம்முன் வரு கிறது போலி. விஞ்ஞானிகளின் உழைப்பு இல்லையென்றால் கண்டுபிடிப்பு எப்படி வரும்?

புதிய கண்டுபிடிப்புகளை அறிமுகம்

# விலையில் மரணம்!

மருதன்

'நீ அணிந்திருப்பது அசல் ரோலேதானா? எங்கே பில்லைக் காட்டு பார்க்கலாம்' என்று யாரும் சட்டையைப் பிடிக்கப் போவதில்லை. ஆனால், போலி மருந்தை உட்கொண்டால் உடல் நாசமும் உச்சபட்ச மாய் உயிர்ச் சேதமும்தான் மிஞ்சும்..

**போ**லிகள் பற்றி ஆய்வு செய்து வரு பவர்கள், 'போலிகள் பெருகிவிட்டால், கண்டுபிடிப்புகள் குறைந்துவிடும்' என் கிறார்கள்.

செய்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வரும் அதேசமயம், அவற்றை பிரதி எடுப் பவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டிருக்கிறது.

இணையதள வியாபாரத்தில் (net purchase) குறைந்தபட்சம் மருந்துகள் வாங்குகையில், கண்ணில் விளக்கெண் ணெய் விட்டு விழிப்போடு வாங்குவது உசிதம். அது ஃபாரின் விளக்கெண்ணெயா யிருந்து போலியாகவும் இருந்துவிட்டால், கண்ணே போயிடும், ஜாக்கிரதை! ○

பயணம், தனி மனிதனை மட்டு மல்ல, மானுடத்தையே புதுப்பிக்கும் என்று நம்புகிறவர்கள் செல்ல வேண்டிய இடம் பாலி தீவு. கலாசார பண்பாட்டில் இந்திய சாயலில் இருக்கும் இந்தக் குட்டி தீவு, இந்தோனேஷியாவைச் சேர்ந்தது. இந்தியாவிலிருந்து மலேஷியா, சிங்கப்பூர் வழியாக ஜாவா - லம்போ தீவுகளுக் கிடையே உள்ள பாலி தீவை அடையலாம்.

ஊருக்குள் நுழையும்போதே வரவேற் பது வாயில் தோரண அமைப்பு. கோபுரத் தைக் கத்தியால் மிகச் சரியாக வெட்டியது போல இருக்கிறது. ஏதோ பழைய காலத் தில் சஞ்சரிப்பதுபோல பிரமையைத் தரு வதைத் தவிர்க்க முடியாது.

சுற்றுலாவையும் விவசாயத்தையும் நம்பியுள்ள தீவு. ஒவ்வொரு வீட்டிலும், கட்டடத்திலும், கடையிலும் ஒரு கோயில் இருக்கின்றது. விக்கிரஹம் ஏதுமின்றி



# இந்தியாவின் குட்டி ஜெராக்ஸ்

நம்மூரின் கிராமத்து பூடம் வைத்திருக்கும் கோயில் போன்றது. பழைமையும் புரா ணமும் அவர்களின் வாழ்வோடு ஒன்றி யிருக்கின்றன. ஒவ்வொரு காலை வேளை யும் தீய சக்திகளுக்கான படையலை, தாம் இருக்கின்ற இடத்துக்கு வெளியிலும், வாழ வைக்கும் சக்திக்கான படையலை வீட்டுக்கு உள்ளேயும் வைக்கின்றனர் பாலி மக்கள். (நம்மூரில் காக்கைக்குச் சோறிடல் போல). தென்னங்கீற்றுத் தொன்னையில் பூ, அரிசி, கூடவே மணங்கமழும் பத்தி - இதுதான் படையல்.

திருநீரைப் போல நெற்றியில் அரிசியை ஒற்றிக்கொள்கின்றனர். சடங்குகளால் நிறைந்த வாழ்வு இந்த மக்களுடையது.

இங்கு நாற்புறமும் குளிர்ந்த நீர் சூழ்ந்த சூரியக் கோயில் (கடற்கரை கோயில்) ஒன் றுண்டு. ஒரு பெரும் பாறையின் மேலே அக்கோயில். கீழே குகையில் கொதிக்கும் நீர் கொப்பளிக்கும் நன்னீர் ஊற்று. அதில் கை கால் கழுவி, பூவைக் காதிலும், நெற்றி யில் அரிசியையும் இட்டுக்கொள்ள வேண்





# பயணம்

* சூரியக் கோயில்

டும். கோயில் மேலே செல்ல அந்நியர்க்கு அனுமதியில்லை.

கோயிலுக்கு வெளியே விற்கும் பொருட்களில் எல்லாம் ராமன், சீதை சாயல்தான். மர்மமான ஒரு புதிர் - நிறைய பூனை பொம்மைகள் விற்கிறார்கள்.

இன்னொரு இடம், ஆழமில்லா கடற்கரை. பாராசூட் மூலம் பறக்கவும், கவாச கவசம் அணிந்து கடலில் மூழ்கி மீன்களோடு கொஞ்சிக் குலாவவும் இங்கு வசதியுண்டு. சுற்றுலாப் பயணிகளை அதிகம் கவரும்



* பாரம்பரிய உடையில்...

-திலகபாமா



அம்சம் இதுதான். பாலித் தீவில் மிகப் பெரிய மலைச்சிகரம் ஆகுன். சுமார் 3142 மீட்டர் உயரமுடையது. இதன் மீதுள்ள கோயில் பைசாகி. அங்கு தரு மிஞான் எனும் மரமுண்டு. அங்குள்ள பழங்குடியினர் இறந்த உடல்களை அம்மரத்தடியில் விட்டுவிடுவார்களாம். அந்த மரம் துர்நாற்றத்தை உறிஞ்சிக்கொள்ளுமாம். மிஞான் என்றால் வாசனை, தரு (கற்பக தரு ஞாபகம் வருகிறதா?) என்றால் மரம் - பாலி மொழியாம். 93 சதவிகித பாலினிஸ் ஹிந்து மதத்தவரும் நான்கு சதவிகித முஸ்லிம் மக்களும் உள்ள இத்தீவில் ரின்டிக் இசை என்பது பாரம்பரிய இசை. பாரம்பரிய உடையோடு கோயிலுக்குச் செல்கின்றனர்.



* இந்திய சாயலில் கடவுள் சிலை

நமது ஒரு ரூபாய் 230 ரூபாய்க்குச் சமம். எனவே கடைக்குச் சென்று பொருளின் விலை கேட்டால் லட்சக் கணக்கில் சொல்வதைப் பார்த்து மிரள வேண்டியிருக்கும். மூங்கில் நார், சிப்பிகள், சிரட்டை எல்லாவற்றையும் இசைக் கருவிகளாக்கி விடுகின்றனர்.

**பா**ரம்பரிய பாலி நடனம் விசேஷமானது. மார்ச்/ஏப்ரல் மாதத்தில் தீவிலிருந்து தீமைகளை வெளியேற்ற பதினொரு நாட்கள் விழா எடுக்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் கோயில், வீடு என சுத்தப்படுத்தி அழகுபடுத்தப்படுகின்றன. பதினொராவது நாள் யாரும் வீட்டை விட்டு வெளியே வருவதில்லை. அன்று தீமை வெளியேறும் நாளாம்! நம்மூர் போகி பண்டிகை ஞாபகம் வருகிறது.

இரண்டாவது பெண்ணைத் திருமணம் செய்ய அங்கு கடும் போட்டி - பெண்ணின் பெற்றோரைக் காப்பாற்றும் பொறுப்பும் சொத்தும் அவளுக்குத்தான் என்பதால்!



* பாலி கடற்கரை—

இந்தியாவைக் குட்டியாய் ஜெராக்ஸ் எடுத்து கடலுக்கு நடுவில் வைத்தது போல், விவசாய பசுமையும் கடலின் வனப்பும் சமமாய்க் கலந்த பண்பாட்டு பூமி. பாலியை ஒரு முறையேனும் பார்த்துவிட வேண்டும்... நமது வேர் அந்தத் தீவு முழுக்கப் பரவியுள்ளதுதான் பரவசம்.

படங்கள்: **லதா**

# அப்போது அவள் தேவதை!



இளங்கவி அருள்

எல்லோராலும்
புறக்கணிக்கப்பட்டவள்
தன்னை ஸ்தாபித்துக்கொள்ளும்
ரகசியம் தேடி
தனிமையோடு வலம் வருகிறாள்
பூவுலகை

அவள் நிலையறிந்து
யாரோ ஒரு சுத்த ஆத்மா
சிந்திய கண்ணீரால்
இழந்த தன் உலகை
புதிப்பித்துக்கொள்கிறாள்

அக்கண்ணீரைப் போல
பிறர் துயர் துடைப்பதையே
தொழிலாக்குகிறாள்

இடையிடையே சிலர்
வன்கதையால் விமர்சித்தும்
புனை கதையால் போற்றியும்
அவளின் வாழ்வை எழுதுகின்றனர்

எல்லோரும் விரும்பும் ஜோதியாக
யாரும் நெருங்க முடியா தீயாக
உருமாறிய அவள்
தன் மீது சிந்திய கண்ணீர்த் துளியை
புன்னகை முத்துக்களாய் மாற்றி
தன் எதிரிகளுக்குச் சூட
அப்போது அவள்
தேவதையாகியிருப்பாள்

ஆளுக்கொரு ஊரில் தனித்தனி தீவுகளாகத் தங்கி வேலை பார்ப்பது, கணவன் ஒரு திசையில் மனைவி ஒரு திக்கில் என பணி முடித்து இரவில் முகம் பார்த்துக் கொள்வது... இப்படியாய், பொருளாதாரம் உறவுகளில் பெரும் இடைவெளியை ஏற்படுத்தியிருக்கும் நகரச் சூழலில், ராமர் சீதை போல ஒரு ஜோடி

ஒரே இடத்தில்...

ஒரே துறையில்...

ஒரே பணியில்...

தொடர்ந்து 35 ஆண்டுகள் - நல்ல கொடுப்பினைதான்.

அந்த ஆசிர்வதிக்கப்பட்ட ஜோடியின் அனுபவம் சுவாரஸ்யமானதுதான்.

'எப்படி இப்படியொரு அமைப்பு?'

'எல்லாம் இறைவன் செயல்' என்கின்றனர் - ஸ்ரீநிவாசனும் ஸ்ரீ மீனாட்சியும் ஒரே குரலில்.

39 ஆண்டுகளாக அறிவிப்பாளராக பணியாற்றி சமீபத்தில் ஓய்வு பெற்றுள்ளார் ஸ்ரீநிவாசன். ஸ்ரீ மீனாட்சி 35 ஆண்டுகளுக்கும் மேலாக தமது பணியைத் தொடர்கின்றார்.

''திருவையாறு தியாகராஜர் ஆராதனை விழாவில் டி.சுப்ரமண்ய தேசிகரின் வர்ணனையைக் கேட்டேன். அவர் குரலில் அத்தனை ஈர்ப்பு. அவரைப் போல் ஆக வேண்டும் என்று விரும்பினேன். அப்போது எனக்கு வயது எட்டு'' என்று கூறும்

# காற்றினிலே வரும் ஜோடி!

ஸ்ரீநிவாசன், ''அதே தியாகராஜர் ஆராதனை விழாவின் நேர்முக வர்ணனையை 1989 முதல் 2008 வரை ஒரிரு ஆண்டுகள் தவிர, நான் செய்ய வாய்ப்பு கிடைத்தது பெரும் பாக்கியம்'' எனப் பெருமிதப்படுகிறார்.

''நல்ல தமிழை வானொலி கற்றுக் கொடுத்தது'' எனக் கூறும் ஸ்ரீ மீனாட்சி, தமிழ்த் திரை இசைப் பாடல்கள் பற்றிய விவரங்களை விரல் நுனியில் வைத்திருக்கும் நடமாடும் இசைக் கணினி!

திருச்சி ரெயின்போ பண்பலை 102.1-ல் வரும் 'வசந்த அழைப்பு' என்ற நேரடித் தொலைபேசி நிகழ்ச்சியில், இவர்கள் விவாதிக்காத தலைப்புகளே இல்லை



* ஸ்ரீமீனாட்சி

என்று சொல்லுமளவுக்கு நிகழ்ச்சி கொடுத்துள்ளனர்.

''1981-ல் என் தந்தையார் இறந்துவிட்டார். நேயர்களுக்கு இந்தத் தகவல் எப்படியோ தெரிந்துவிட்டது. உடனே அவர்களில் சிலர் உடனடியாக கறுப்புக் கோடிட்டு துக்கம் அனுஷ்டிக்க வேண்டுமென கடிதம் ஒன்றை நிலையத்துக்கு

அனுப்பி வைத்தனர். நான்கு வாரத்துக்கு நேயர் கடித நிகழ்ச்சிக்குக் கடிதம் அனுப்பு வது இல்லை என்றும் அதில் குறிப்பிட்டி ருந்தனர்.

அப்போதெல்லாம் எங்கள் முகம் தெரி யாது; இல்லத்தின் முகவரி தெரியாது. இருப்பினும் இந்த வெளிப்பாட்டை அவர் கள் செய்தனர். துன்பத்திலும் துணை நிற் பவர்கள் நேயர்கள். அவர்கள்தான் எங்க


* ஸ்ரீநிவாசன்

ஜமானர்கள்'' என்கிறார் ஸ்ரீநிவாசன்.

''சரி... இப்போது எண்ணற்ற தனியார் பண்பலைகள் வந்துவிட்டனவே. அவர் களின் நிகழ்ச்சிகள் எப்படி இருக்கின் றன?'' எனக் கேட்டால், ''சற்று எல்லை மீறிப் போய்க் கொண்டிருக்கிறதோ என எண்ணத் தோன்றுகிறது'' என்கிறார்!

**- எம்.திரவியமுருகன்**


* அன்பரசு

# அலைவரிசைகளில் அலை ஓசை!

முப்பது நிமிடங்கள், பதினைந்து தொடர்கள் என அமரர் கல்கியின் அலை ஓசை நாவல், வானொலி நாடகமாக ஒலிபரப்பாகி வருகிறது. திருச்சி வானொலி, 4.8.2008 திங்கட்கிழமை இரவு 9.30 மணிக்கு ஒலிபரப்பும் அதே நாளில் அதே நேரத்தில் அதனை சென்னை, கோவை, மதுரை வானொலி நிலையங்களும் அஞ்சல் செய் கின்றன.

''வானொலி நாடக வடிவமாக்க வேண்டும் என்பதற்காக, 'அலை ஓசை'யை மீண்டும் மீண்டும் ஆழ்ந்து வாசித்தேன். முக்கிய கதாபாத்திரங்களை மட்டும் வைத்து சரளமான உரையாடல்களை உருவாக் கினேன். பல இடங்களில் அமரர் கல்கியின் கதாபாத்திர வசனங்களை அப்படியே பயன் படுத்திக்கொண்டேன்.

எந்த வகையிலும் கதாசிரியரின் கற்ப னையில் உருவான கதைக் களமும், பாத்திரங்களின் தன்மையும் மாறாத வகை யில், நுணுக்கமாக வானொலி நாடக வடிவ மாக எழுதித் தந்துள்ளேன்'' என்கிறார் வானொலி நாடக ஆசிரியர் அன்பரசு.

இதுவரை எழுதி ஒலிபரப்பான முப்பத் தைந்து நாடகங்களில் கிடைத்த மன மகிழ்வு மற்றும் ஆத்ம திருப்தியைவிட, இப் பணியை நிறைவு செய்தபோது மிக அதிக மாக தனக்குள் பரிபூரண நிறை கிட்டிய தாகச் கூறுகிறார் அன்பரசு.

**- ஸ்ரீரங்கம் திருநாவு**



# ஹீரோ

பிரபல நடிகர் ராம்பிரசாத்தின் மானேஜர் மனோகருக்குத் திருமணம். அவனது தாய், தகப்பன் இருவரும், தட்டு நிறைய பூ, பழம், வெற்றிலைப் பாக்கு வைத்து, பத்திரிகை வைத்து சகல மரியாதையுடனும் திருமணத்துக்கு அழைத்தார்கள்.

''சார், நீங்க அவசியம் வரணும். நீங்க வர்றது எங்களுக்குப் பெரிய கௌரவமாவும், மரியாதையாவும் இருக்கும் சார். அவசியம் வரணும்!'' என்றனர் மானேஜரின் பெற்றோர். ராம்பிரசாத்தும் வற்புறுத்திக் கூப்பிட்டுச் சென்றான்.

பத்து நாள் கழித்து திருமணத் தேதி வந்தது. ''இந்தா, பொண்ணுக்கு இந்த எட்டு பவுன் ஹாரத்தைப் போடு; மனோகர் கையில் இந்த அஞ்சு பவுன் பிரேஸ்லெட்டையும், மோதிரத்தையும் போடு; இந்தப் பத்தாயிரத்தை மொய் எழுதிட்டு வா. மறக்காம அவங்க ஒரு வாரம் ஹனிமூன் போய்வர, ஊட்டிக்கு இந்த ரெண்டு டிக்கெட்டையும் கொடுத்துட்டு வா. சகல செலவும் நம்மளது'' என்று தாராளமாய்க் கொடுத்து அனுப்பினான் மனைவியிடம்.

''என்னங்க நீங்க வரலையா? இன்னிக்கு ஷூட்டிங்கும் கிடையாது! வருந்தி வருந்தி அழைச்சான்? பாவம், நம்ம கூடவே இருக்கற பையன். வர்றதுதான் மொறை!'' என்றாள் நடிகனின் மனைவி.

''கல்யாண மாப்பிள்ளை அவன். இன்னைய ஹீரோ அவனாத்தான் இருக்கணும். இன்னைய புகழும், ஒளிவட்டமும் அவனைச் சுத்திதான் இருக்கணும். அதைவிட்டு நான் வந்தேன்னா, எல்லா ஜனமும் பலாப்பழம் ஈயாய் என்னையே மொய்க்கும் - வருஷம் முழுக்க ஹீரோவா இருக்கற நான், ஒருநாள் ஹீரோவா இருக்க வேண்டிய அவனுக்கு வில்லனா ஆகணுமா? பிறகு ஒருமுறை அவன் வீட்டுக்குப் போவோம். இப்போ நீ மட்டும் போயிட்டு வா!'' என்று சொன்ன கணவன் ராம்பிரசாத்தைப் பார்த்து,

''அட! நீங்க நிஜமாலுமே ஹீரோ தாங்க!'' என்றாள் பெருமையாக.

○ இ.வில்சன்

**முன்னோர்களுக்கு திதி செய்ய மறந்தவர்களுக்கும், திதி, தர்ப்பணம் செய்யத் தவறியவர்களுக்கும் பித்ரு பூஜை நிறைவேற்ற ஏற்ற காலம் மஹாளயபக்ஷ அமாவாசையே. பித்ரு தர்ப்பண க்ஷேத்ரமான**

# காசியில் மஹாளய அமாவாசை அன்று

(28-9-2008) சாதுக்களுக்கு நடைபெறும் அன்னதானத்திலும், பித்ரு பூஜையிலும் அனைவரும் கலந்து கொண்டு பித்ருக்களின் ஆசிர்வாதத்தை பெற அன்புடன் அழைக்கிறோம்

**ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட் 10 ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து நடத்தும் முன்னோர் வழிபாடு**

பித்ரு க்ஷேத்ரமாக விளங்கும் காசியில் அன்பர்கள் அனைவராலும் **கங்கைக்கு ஜல தீபம் ஏற்றி மஹாளய அமாவாசை** அன்று முன்னோர் வழிபாடு செய்து, அவர்கள் நினைவாக அன்னதானம் செய்ய முடியும் என்ற இறை சிந்தனையோடு அனைத்து வாசக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க **ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட் மூலம் மஹாளய அமாவாசை அன்று காசியில் பித்ருக்கள் நினைவாக கங்கையில் ஜலதீபம் ஏற்றி அவர்கள் நினைவாக வஸ்தரதானத்துடன் அன்னதானமும் வைதீக முறைப்படி செய்யப்படுகிறது.** மஹாளய அமாவாசை அன்று **தர்ப்பணமும், அன்னதானமும்** செய்தால் பித்ருக்கள் பூரண திருப்தி ஏற்பட்டு அவர்கள் நமக்கும் நம் சந்ததிகளுக்கு அனைத்து வகை ஆரோக்யத்தையும் அளிக்கிறார்கள். மஹாளய அமாவாசை அன்று நடைபெறும் **அன்னதான திருப்பணி** மற்றும் **முன்னோர் வழிபாட்டுக்கு** தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பி **பித்ருக்களின் ஆசிர்வாதத்தை** பெற்று **அனைத்து** பித்ரு தோஷங்களில் **இருந்து** நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோம்.

பித்ருக்கள் நினைவாக நடைபெறும் அன்னதானத்திற்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு திருக்கயிலாயத்தில் இருந்து நேரடியாக பெறப்பட்ட கீழ்கண்ட ருத்ராட்சங்கள் அனுப்பி வைக்கப்படும்

- **ரூ. 300** - அனுப்பும் அன்பர்களுக்கு, 5 முகம் கொண்ட ருத்ராட்சம் 5 அனுப்பி வைக்கப்படும்.
  (5 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு அனைத்து தோஷங்களும் நிவர்த்தியாகும். ரத்த அழுத்தம், இதய கோளாறுகளை சீர் செய்யும்).
- **ரூ. 500** - அனுப்பும் அன்பர்களுக்கு, ருத்ராட்ச மாலை அனுப்பி வைக்கப்படும்.
  (ருத்ராட்ச மாலை அணிபவர்கள் அனைத்து சிவ ஸ்தலங்களையும் தரிசித்த மஹாபுண்ணிய பலனை பெறலாம்).
- **ரூ. 1000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 3 முகம் (மஹா சரஸ்வதி) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (3 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு அறிவு வளர்ச்சி, கல்வி மேம்பாட்டிற்கும் உதவும். குழந்தைகளுக்கும் மாணவர்களுக்கும் பொருத்தமானது).
- **ரூ. 2000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 6 முகம் (ஸ்ரீசுப்பிரமணியர்) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (6 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு வியாபாரத் தடை நீங்கி, தொழில் வளர்ச்சி சிறப்பாகும். மேலும் அஸ்வமேத யாக பலனையும் தரவல்லது).
- **ரூ. 3000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 7 முகம் (சப்த ரிஷி) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (7 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு தடைபட்ட திருமணம் நடக்கும். மேலும் செவ்வாதோஷம் விலகி சுப நிகழ்ச்சிகள் கைகூடும்).
- **ரூ. 4000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 11 முகம் (வீர ஹனுமான்) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (11 முக ருத்ராட்சத்தை அணிவதால் குழந்தை பாக்கியம் இல்லாதவர்களுக்கு புத்திர பாக்கியம் உண்டாகும்).
- **ரூ. 5000** - அனுப்பும் அன்பர்களுக்கு, கௌரி சங்கர் (சிவ-பார்வதி) ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (கௌரி சங்கர் ருத்ராட்சத்தை அணிபவர்கள் கணவன் - மனைவி ஒற்றுமையுடன் வாழ்வார்கள். நீண்ட ஆயுளையும் தரும்).
- **ரூ. 6000** - அனுப்பும் அன்பர்களுக்கு, ஒரு முகம் (ஸ்ரீபரமேஸ்வரன்) ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (ஒரு முக ருத்ராட்சத்தை அணிந்தவர்களை எதிரிகளால் கூட வெல்ல முடியாது மற்றும் பிரம்மஹத்தி தோஷமும் நீங்கும்).
- **ரூ. 7000** - அனுப்பும் அன்பர்களுக்கு, ஸ்ரீகணேஷ் (விநாயக பெருமானின் முழுத்தோற்றம்) ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (ஸ்ரீகணேஷ் ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு செழிப்பான வளர்ச்சியுடன் எடுத்த காரியத்தில் வெற்றியும், அஷ்ட லக்ஷ்மிகளின் அருளும் கிடைக்கும்).
- **ரூ. 10000** - அனுப்பும் அன்பர்களுக்கு, 21 முகம் (குபேர ஸ்வரூபம்) கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்.
  (சகல ஆன்மீக சக்திகளையும், ஆத்ம பலத்தையும், ஆரோக்கியத்தையும் வழங்கி, சகல செல்வங்களும் சொத்துக்களும், சுகங்களும் கிடைக்கும்).

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம், தர்ப்பணம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் சேர்த்து ரூபாய் 1000 அனுப்பும்போது யாருக்கு திதி செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களை தெரிவித்தால், தங்கள் விருப்பப்படி மஹாளய அமாவாசை அன்று முன்னோர் வழிபாடு முறையாகவும், முழுமையாகவும் செய்து, **அவர்களின் நினைவாக வஸ்திரதானத்துடன் அன்னதானமும்** செய்யப்படும். பித்ரு காரியங்களுக்கு பணம் அனுப்புபவர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய 3 இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான **'அக்ஷய வடத்தின்'** படமும், கயாவில் உள்ள **விஷ்ணு பாதமும், விஷ்ணு பாதத்தின்** படமும் மற்றும் ஸ்ரீஅன்னபூரணி அன்னையின் விக்ரகமும் கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பு, காசி கயிறு அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் சிராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. 3 பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு க்ஷேத்ரத்தில் பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு **பித்ருக்கள் அனைவரும் திருப்தி அடைவதுடன்** பித்ரு தோஷமும் நமக்கு நிவர்த்தியாகும்.

**பணம் அனுப்பும் அன்பர்களுக்கு ரசீதும், மேற்கண்ட பிரசாதங்களும் மஹாளயபக்ஷம் முடிந்த பிறகு அனுப்பி வைக்கப்படும்**

மஹாளய அமாவாசை அன்று முன்னோர்கள் நினைவாக நடைபெறும் அன்னதான சேவையிலும், முன்னோர் வழிபாட்டிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை **Cheque/D.D/M.O.** மூலம் **Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai** என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி பித்ருக்களின் ஆசியை பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வரி விலக்கு உண்டு

## ஸ்ரீஅன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd)**

**4, Appavoo Gramani IIIrd Street R.A.Puram, Chennai - 28. Ph: 044 - 32464848**

**ருத்ராட்சத்தை ஆண்கள் பெண்கள் மற்றும் குழந்தைகள் அனைவரும் அணியலாம்**

# ஃபயட் கதை–1

பார்வை ஒன்று போதும் என்று இருந்தது பாஸ்கருக்கு.

அன்றைக்கு அவனுக்கு பஸ்ஸில் வேலையே ஓடவில்லை. மற்றவர்கள்



பாலுசத்யா

அவள் இன்னும் வரவில்லை.

'இன்னிக்கு என்ன ஆச்சு அவளுக்கு? மிஞ்சிப் போனா அஞ்சு நிமிஷம் காத்திருக்கலாம். அதுக்கு மேல முடியாது' தனக்குத்தானே சொல்லிக்கொண்டான் பாஸ்கர்.

''பஸ்ஸை எப்பப்பா எடுப்பீங்க?'' என்று இரண்டு மூன்று பேர் கேட்டு விட்டார்கள். இதற்கு மேலும் டிரைவர் மாரிமுத்து பொறுக்க மாட்டான். அவனையும் குறை சொல்ல முடியாது. இன்றைக்கு அடிக்க வேண்டிய டிரிப்கள் வேறு இருக்கின்றன.

''ஏண்டா என்னவோ மாதிரி இருக்கே?'' என்று அம்மா தினமும் கேட்கிறாள். அது உண்மைதான். பாஸ்கர் ஒரு மாதமாக 'முனி' அடித்த மாதிரிதான் இருக்கிறான், ரேவதியைப் பார்த்த தினத்திலிருந்து. இதேபோல ஒரு சாயங்காலத்தில், மழை பெய்கிற ஒரு பொழுதில் அவள் ஓடி வந்து மினி பஸ்ஸில் ஏறினாள்.

நனைந்த செம்பருத்திப் பூவைப் போல 'பளிச்'சென்று இருந்தாள். தாவணித் தலைப்பால் ஈரத் தலையைத் துவட்டிக்கொண்டாள். உடன் வந்த சிநேகிதியிடம் மழையைப் பற்றியே 'சளசள'வென்று பேசிக்கொண்டிருந்தாள். பார்த்தவுடனேயே பாஸ்கர் முடிவு செய்துவிட்டான். 'இவள்தான். இவளுக்காகத்தான் இத்தனை நாட்களாகக் காத்திருந்தோம்.'

மினி பஸ்ஸில் அலறிக்கொண்டிருந்த 'டண்டனக்கா... ஏ... டணக்குனக்கா...' பாட்டை நிறுத்திவிட்டு, 'அந்தி மழை பொழிகிறது...' பாட்டைப் போட்டான். அவள் சடாரென்று திரும்பி, இவனைப் பார்த்தாள். அப்பா! ஆயுசுக்கும் இந்தப்

# அந்தி மழை பொழிகிறது

வனிக்கிறார்களே என்கிற லஜ்ஜை யில்லாமல், அவளைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி டிக்கெட் கிழித்தான்.

அவளுக்கும் புரிந்தது. உம்பளப் பாடியில் அவள் இறங்குகிற வரை உடும்புப்பிடியாக அவன் பார்வை அவளைப் பற்றியிருந்தது. அன்றைக்குப் பஸ்



பிரபல திரைப் பாடல் வரித் தலைப்புக்கு முன்னணி எழுத்தாளர்கள் வரையும் சொல்லோவியங்களாகச் சில வாரங்களுக்கு...

ஸிலிருந்து இறங்கியவள், நின்று நிதானமாகத் திரும்பி அவனை ஒரு பார்வை பார்த்துவிட்டுத்தான் போனாள்.

இரவு பதினொரு மணிக்கு வீட்டுக்கு வந்து படுத்த பாஸ்கர், மல்லாக்க விழுந்த கரப்பான்பூச்சியைப் போல புரண்டுகொண்டே இருந்தான்.

அடுத்த நாளும் குறிப்பிட்ட அதே நேரத்துக்கு அவள் வந்தாள்; மினி பஸ்ஸில் ஏறினாள்; சிரித்தாள்; இவன் பார்த்தான். பார்த்துக்கொண்டே இருந்தான். உலகையும் சூழலையும் மறந்து, அவள் பெயரும் தெரிந்துவிட்டது. அவள் சினேகிதிதான் மூச்சுக்கு முன்னூறு தடவை கூவிக்கொண்டிருக்கிறாளே! ரேவதி. உண்மையில் அவள் ஒரு நட்சத்திரம்தான்.

**அ**ன்றைக்கு மதியம் பன்னிரண்டு மணிக்கே கம்பெனியை விட்டு வெளியே வந்துவிட்டாள் ரேவதி. பொம்மைப் பொருள்கள் செய்கிற சிறிய பிளாஸ்டிக் கம்பெனி அது. மெஷினில் ஏதோ கோளாறென்று அனுப்பிவிட, வீட்டுக்குப் போக மனமில்லாமல், தோழி மலர்மதியின் வீட்டுக்குப் போய் சாப்பிட்டு, அரட்டை அடித்து, பாஸ்கரின் மினி பஸ் வருகிற நேரத்தைக் கணக்கிட்டு பஸ் ஸ்டாப்பில் வந்து நிற்கிறாள் ரேவதி. அரை மணி நேரமாகிவிட்டது. ஏன் அந்தப் பாழாய்ப்போன 'மினி பஸ்' வருவதற்கு இவ்வளவு தாமதமாகிறது என்பது அவளுக்குப் புரியவில்லை. இது நகரமில்லை. ஒரு பெண் தனியாக



வெகு நேரம் பஸ் ஸ்டாண்டில் நின்றால் பார்க்கிறவர்கள் புதுக் கதைகளைக் கட்டி விடுவார்கள்.

'சீக்கிரம் வாடா!' மனத்துக்குள் பாஸ்கரை 'அதட்டு'ப் போட்டாள் ரேவதி. சிரிப்பு வந்தது. ஒரு மாதத்துக்கு முன்பு கூட அவன் யார் என்று அவளுக்குத் தெரியாது. வேலைக்குப் போக ஆரம்பித்த முதல் நாளில்தான் அவனை அவள் பார்த்திருந்தாள். கலைந்த தலையும், கழுத்தில் மினுங்கும் சில்வர் செயினும், அலை பாயும் கண்களுமாக அழகாகத்தான் இருக்கிறான்.

நடராஜன் அரை மணி நேரமாக அந்த உரக்கடையில் உட்கார்ந்திருக்கிறான். ரேவதியைப் பார்த்ததிலிருந்து அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவனுக்குக் காரணம் தெரிந்தாக வேண்டும். அவள் ஏன் அங்கு நிற்கிறாள்? ஒரு மாதமாக அவள் பாபநாசத்தில் இருக்கும் பிளாஸ்டிக் கம்பெனிக்கு வேலைக்குப் போவது அவனுக்குத் தெரியும். ஆனால், அவள் ஏன் இங்கு நிற்க வேண்டும்? இத்தனைக்கும் உம்பளப்பாடி போகிற பஸ் காலியாகத்தானே வந்தது? அவள் ஏன் ஏறவில்லை?

அக்காள் கணவர் ஃபைனான்ஸுக்குப் பணத்தைக் கொடுத்து, வசூலிக்கத் தெம்பில்லாமல், நொடித்துப் போய் உயிரை விட்டிருந்தார். எப்படியும் ரேவதி தனக்குத்தான் என்ற நம்பிக்கையில் இருந்தான் அவன். ஆனால், ரேவதியோ அவனுடைய புல்லட் சத்தத்தைக் கேட்டாலே உள் அறைக்குள் போய்ப் பதுங்குகிறவளாக இருந்தாள்.

கடை வாசலில் முன்பக்க மேற்கூரைத் தகரத்தில் 'சடசட'வென்று மழைத்துளிகள் விழும் சத்தம் கேட்டது. அதேநேரம் ரேவதியின் விழிகள் விரிவதையும் அவள் எதற்கோ தயாராவதையும் பார்த்தான் நடராஜன். மெதுவாக எழுந்து வெளியே வந்தான். உம்பளப்பாடி போகிற மினி பஸ் வந்து நின்றது.

மழையில் இறங்கி ஓடினான். ரேவதி மினி பஸ்ஸில் ஏற, நடராஜனும் பின்னாலேயே ஏறினான். ஏறின வேகத்தில் பாஸ்கரிடம், ''ரெண்டு உம்பளப்பாடி!'' என்று ரேவதியின் தோளை உரசிக் கொண்டு கையை நீட்டினான். அவளைப் பார்த்துச் சிரித்தான்.

''என்ன ரேவதி! இங்க ஏறியிருக்கே?''

''இன்னிக்கு மத்தியானமே கம்பெனி முடிஞ்சிடுச்சு. ஃபிரெண்ட் வீட்டுக்குப் போய்ட்டு வர்றேன்.'' பாஸ்கரைப் பார்த்தபடியே மெதுவான குரலில் சொன்னாள்.

''வேலை இல்லைன்னா நேரா வீட்டுக்குப் போறது. ஏன் ஃபிரெண்ட் வீடு. அது இதுன்னு சுத்தறே?''

அவள் பதில் பேசாமல் ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள். ''காலா காலத்துல உனக்கும் எனக்கும் கல்யாணம் ஆகியிருந்தா, நீ வீட்டை விட்டு வெளியே கால் வைப்பியா? நான்தான் உன்னைப் போகவிட்டிருப்பேனா?''

நடராஜன் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தான். மாரியம்மன் கோயில் வந்த

போது, ஒரு சீட் காலியானது.

''சீட் காலியாயிடுச்சு பாரு. உக்காரு'' என்று அவள் தோளில் கை வைத்தான் நடராஜன். ரேவதி சட்டென்று அவன் கையைத் தட்டிவிட்டாள்.

''யாருய்யா நீ?'' என்று கேட்டாள். அந்தக் கேள்வியில் நடராஜன் அதிர்ந்து போனான்.

''என்ன ரேவதி, இப்பிடிக் கேட்டுட்டே? நான் உன் மாமா. உன்னைக் கட்டிக்கப் போறவன்.''

''அப்பிடின்னு யாரு சொன்னது? நான் சொன்னேனா, இல்ல எங்க அம்மா சொன்னாங்களா? மாமாவாம் மாமா. நாங்க கஷ்டப்படறப்போல்லாம் எங்கேய்யா போயிருந்தீங்க? எங்கப்பா கஷ்டப்பட்டப்போ வேடிக்கை பாத்து சிரிச்சவங்கதானே நீங்க? இப்போ என்ன புது உறவு?

வீட்டுக்கு யாரு வந்தாலும் வாங்கன்னு சொல்றதுதானே மரியாதை. அதை வைச்சுக்கிட்டு நான் உங்களைக் கல்யாணம் பண்ணுவேன்னு முடிவு பண்ணிட்டீங்களா? இன்னொரு தடவை மேல கையை வைச்சீங்க... அவ்வளவுதான்.''

திடுக்கிட்டுப் போனான் நடராஜன். வெள்ளாளத் தெரு ஸ்டாப் வந்திருந்தது.



இறங்கிக்கொண்டான். அவன் போன பிறகுதான் பஸ் முழுவதும் அவளையே பார்த்துக்கொண்டிருப்பது தெரிந்தது. கோடிவீட்டு நல்லம்மாக் கிழவி ரேவதியைப் பார்த்துச் சொன்னாள்: ''நல்லா கேட்டேம்மா, போக்கத் தவனை.''

பாஸ்கர் முன்பக்கப் படிக்கட்டில் நின்றபடி இவளையே பார்த்துக்கொண்டிருந்தான். இன்னும் ஒரே ஒரு நிறுத்தம்தான்.

உம்பளப்பாடியில், பஸ்ஸில் இருந்த மொத்தப் பயணிகளும் இறங்கிய பிறகு, கடைசி ஆளாக எழுந்த ரேவதி, முன் பக்க வாசலுக்கு வெளியே நின்றிருந்த பாஸ்கரின் அருகே போனாள்.

''என்ன பயந்துட்டீங்களா?''

அவன் அவள்தான் பேசுகிறாள் என்பதை நம்ப முடியாதவனாகப் பார்த்தான்.

''எங்கம்மா அடிக்கடி சொல்லுவாங்க. 'அடக்கமா இரு. ஆனா, யாருக்கும் அடங்கிப் போகாதே'ன்னு. ரொம்ப நாள் பொறுத்துக்கிட்டு இருந்தேன். இன்னிக்கு முடியல. அதான் கொட்டிட்டேன்.''

அவன் அவள் கண்களையே பார்த்தான். அவன் எதிர்பார்க்காத ஒன்றைச் சொன்னாள் ரேவதி.

''எனக்கு உங்களைப் பிடிச்சிருக்கு. உங்களுக்கு என்னைப் பிடிச்சிருந்தா, நாளைக்குச் சாயங்காலம் நான் வர்றப்போ 'அந்தி மழை பொழிகிறது' பாட்டுப் போடுங்க.''

சொல்லிவிட்டு அவள் வேகவேகமாக மழையின் ஊடே ஓடினாள். பாஸ்கருக்கு, பெய்கிற ஒவ்வொரு மழைத் துளியிலும் அவள் முகம் தெரிந்தது. ○



* விற்பனை நிலைய

"பன்னி மேய்க்கத் தான்டா நீங்கள்லாம் லாயக்கு என்று, எங்கள் சமூகப் பெரியோர்களால் வசவு வாங்கியவர்கள் நாங்கள். காரணம், எவருமே ஒழுங்காகப் பள்ளிக்குச் செல்வதில்லை. நான்காம் வகுப்போடு நின்றவர்கள் எங்களில் ஏராளம். அந்த வசவுகளை மாற்றிக்காட்ட உறுதியெடுத்த எங்களுக்கு, வாழ்க்கைப் பாதையே மாறிப் போகுமென அப்போது நாங்கள் யாருமே நினைக்கவில்லை. எங்கள் வாழ்க்கைப் பாதையை மாற்றியமைக்க அடித்தளம் அமைத்துத் தந்தது சைக்கோ அறக்கட்டளை!'' எனக் கூறுகிறார் பாஸ்கர்.

கரூர் நகராட்சியில் பாதாள சாக்கடைத் திட்டங்களும், துப்புரவுப் பணி களில் நவீன முறைகளும் வந்துவிட்டன அதனால், துப்புரவுத் தொழிலாளிகளின் வாரிசுகள் அனைவருக்குமே, துப்புரவு பணி கிடைப்பது என்பது வினாக்கு ஆகிப்போனது.

''ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்பே துப்பரவுத் தொழிலாளிகளின் வாரிசுகள் தொடர்ந்து மீண்டும் மீண்டும் அே வேலைகளில் ஈடுபட்டு உழன்று கொண்ட ருக்க வேண்டியதில்லை என்கிற புதிய வெளிச்சத்தை, விழிப்புணர்வு மூலம் எங் களிடையே படர விட்டது சைக்கோ அற கட்டளை!'' எனக் கூறுகிறார் பாஸ்கர்.

இருபது வயதுக்குட்பட்ட ஐம்ப நபர்களைத் தேர்வு செய்து அவர்களுக் சானிட்டரி பொருள் தயாரிப்பு பயிற் தரப்பட்டது. அதில் இருபது நபர்களே

இறுதிச் சுற்றில் முன்னேறி வந்தனர். அதில் பத்துபேர் ஆண்கள். பத்து பேர் பெண்கள். இந்த இருபது நபர்களை ஒருங்கிணைத்து, சானிட்டரி பொருட்களைத் தயாரிக்க முடிவானது.

பள்ளி, கல்லூரி, மருத்துவமனை மற்றும் தொழிலகங்களுக்கு விநியோகிப்பது என்பது பற்றி விசேஷ மார்க்கெட்டிங் பயிற்சியை திண்டுக்கல் காந்தி கிராமம் வழங்கியது.

மென்பதை நிரூபித்துக் காட்டியுள்ளோம். இந்தத் தொழிலுக்கென தாட்கோவில் ஐம்பது சதவிகித மானியத்தில் நான்கு லட்ச ரூபாய் கடன் பெற்றிருந்தோம். அறுபது மாதங்களில் கட்டி முடிக்கப்பட வேண்டிய கடனை, ஐம்பது மாதங்களில் முழுமையாகக் கட்டி முடித்துச் சான்றிதழ் பெற்றுள்ளோம். அக்கால வசவுகள் இப்போது வாழ்த்துகளாக மாறியுள்ளன'' என நியாயமான பெருமையோடு சொல்கிறார் ரகுபதி.

செய்தியும், சித்திரங்களும்:
**ஸ்ரீரங்கம் திருநாவு**

# வசவை மாற்றிய வாரிசுகள்

இன்று அவர்களது விற்பனை நிலையம், கரூர் நகராட்சி வணிக வளாகக் கட்டடத்தில் இயங்கி வருகிறது. சானிட்டரி பொருட்களின் தயாரிப்பு மற்றும் விற்பனை நிர்வாகிகளாக பாஸ்கர், ரகுபதி என்கிற இருவர் மட்டுமே செயல்பட்டு வருகின்றனர். இவர்களது மாதச் சம்பளம் போக லாபத்தினை, குறிப்பிட்ட இருபது நபர்களும் ஆண்டுதோறும் பகிர்ந்துகொள்கின்றனர்.

''இருபது நபர்களில் ஐந்து, ஆறு பெண்கள் கல்யாணமாகி வேறு ஊர்களுக்குச் சென்றுவிட்டனர். எங்கள் இருவரைத் தவிர மீதம் பதினெட்டு நபர்களும் ஸ்லீப்பிங் பார்ட்னர்களாக இயங்கி வருகின்றனர். எங்களாலும் நாலு இடம் அலைந்து திரிந்து மார்க்கெட்டிங் பண்ணி, ஒரு வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்திட முடியு


ரகுபதி

# அன்றும் இன்றும் என்றென்றும்

பிறருக்குச் சம்பந்தமில்லாத நமது சொந்த விஷயங்களைப் பற்றி அநாவசியமான கேள்விகளுக்குப் பதில் சொல்லிச் சொல்லி என்னைப் போல் அலுத்துப் போனவர்கள், அந்த மாதிரி கேள்விகளுக்கு ஏதேனும் ஒரு பரிகாரம் ஏற்படுத்தவேண்டும் என்பதை மட்டும் வற்புறுத்திக் கூறுவேன்.

நான் பலமுறை எதிரிகளின் கையில் தோல்வியடைந்திருக்கிறேனாயினும், ஒரே ஒரு தடவை மட்டும் ஒரு நபரை முற்றும் முறியடித்து ஓட்டியிருக்கிறேன். அது சமீபத்தில் நடந்த சம்பவம்.

ரெயிலேறியது திருச்சிராப்பள்ளி ஜங்ஷனில்.

வண்டி திருவரம்பூர் ஸ்டேஷனில் நின்றதும், அந்த மனிதர் இறங்கி வந்து என் வண்டியில் ஏறி எதிர் ஆசனத்தில் உட்கார்ந்தபோது, நான் சிறிதும் ஆச்சரியமடையவில்லை. அதற்கு மாறாக, அவர் வருகையை எதிர்பார்த்துப் பூரண ஆயத்தமாயிருந்தேன். இரண்டொரு முறை தொண்டையைக் கனைத்துச் சரிபடுத்திக்கொண்டு அந்த மூக்கு நீண்ட மனிதர் மெதுவாக ஆரம்பித்தார். ''தங்களை எங்கேயோ பார்த்த ஞாபகமிருக்கிறது ஸார்'' என்றார்.

''எனக்கும் அப்படித்தான் ஸார் தோன்றுகிறது. ஒரு வேளை கும்பகோண மகாமகத்தில்...''

''பார்த்தீர்களா! நினைத்தேன்! மகாமகத்துக்கு நீங்கள் வந்திருந்தீர்களல்லவா?''

''நானா? நான் கும்பகோணத்துக்குப் போனதே கிடையாது.'' ஆசாமி கொஞ்சம் திடுக்கிட்டுப் போனார். ''பின்னே மகாமகத்தில் பார்த்ததாகச் சொன்னீர்களே!'' என்றார்.



## அமரர் கல்கி

''இதோ பாருங்கள்; நான் சொல்லாததைச் சொன்னதாகச் கூறினால் என்ன செய்யட்டும்! ஒருவேளை மகாமகத்தில் என்றுதானே நான் சொன்னது?''

''எனக்கு விளங்கவில்லை; நீங்கள் மகாமகத்துக்கே வரவில்லையானால் நான் எப்படி உங்களை அங்கே 'ஒருவேளை' பார்த்திருக்க முடியும்?''

''நான் வராவிட்டால் என்ன? நீங்கள் போயிருக்கலாமல்லவா?''

''நான் போயிருந்தால்...?''

''ஒரு வேளை அங்கே என் தம்பியைப் பார்த்திருக்கலாம்!''

''ஓஹோ! தெரிந்தது, தெரிந்தது! இதை முன்னமேயே சொல்லியிருக்கலாமே?''

''மறுபடியும் பார்த்தீர்களா? சொல்வதற்கு நீங்கள் இடம் கொடுத்தால்தானே...''

''அதுபோகட்டும், ஸார்! தங்களுக்கு எந்த ஊர் சொல்லுங்கள்.''

''சொந்த ஊர் மாயவரம்...''

''ஓஹோ ஹோ! ரொம்ப அழகாகப் போச்சு! மாயவரத்தில் எந்தத் தெருவோ?''

''பெரிய கடைத் தெரு.'' (அப்படி ஒரு தெரு எந்த ஊரிலும் இருந்தே தீர வேண்டுமல்லவா?)



# எந்த ஊர் ஸார்?

''சரிதான், சரிதான்! செட்டியாரை உங்களுக்குத் தெரியுமல்லவா?''

''ஆ! அவருடைய தகப்பனாரைக்கூடத் தெரியும்.''

''யார் சொக்கலிங்கச் செட்டியாரையா? அதெப்படி ஸார்! அவர் செத்துப் போய்... இருக்கட்டும், தங்களுக்கு வயது என்ன ஆகிறது...?''

''அடுத்த மார்கழிக்குப் பத்தொன்பது!''

''பத்தொன்பதா, இருபத்தொன்பதா?''

''பத்தொன்பது.''

''என்ன வேடிக்கை, ஐயா! தங்களுக்குக் குறைந்தது முப்பது வயதிருக்கலாமென்று யாரும் சொல்வார்களே!''

''வழியில் போகிறவர்கள் எது வேண்டுமானாலும் சொல்வார்கள். அதற்கு நான் என்ன செய்யட்டும்?''

''தாங்கள் எந்த வருஷம் பிறந்தீர்கள்?''

''1805ஆம் வருஷம்!''

''என்ன, என்ன! அப்படியானால் தங்களுக்கு இப்போது 125 வயதல்லவா ஆக வேண்டும்?''

''சபாஷ்! உங்களுக்கு நல்ல மூளை ஸார். நீங்கள் ஒரே நிமிஷத்தில் கண்டு பிடித்து விட்டீர்களே!'' என்றேன்.

ஆசாமி ஒரு நிமிஷம் என்னை ஏற இறங்கப் பார்த்தார். ''ஆமாம் ஸார்! இதற்கென்ன வழி? முதலில் உங்களுக்குப் பத்தொன்பது வயது என்றீர்கள்! அப்புறம் 125 என்கிறீர்கள்...''

''பார்த்தீரா! பார்த்தீரா! நீர் என்ன,

பத்திரிகை நிருபரோ! நான் சொல்லாததையெல்லாம் சொன்னதாகச் சொல்கிறீரே! எனக்கு 125 வயது என்று நான் சொன்னேனா?''

மறுபடியும் சற்று நேரம் யோசித்தார். உடனே அவர் முகம் பிரகாசம் அடைந்தது. ''அட இழவே! சாலிவாகன சகாப்தத்தில் வருஷம் சொல்கிறீராக்கும்! முன்னமே சொல்லித் தொலைத்திருக்கக் கூடாதா? இருக்கட்டும்; உமக்கு 19 வயதுதான் என்றா சொல்கிறீர்?''

''அதுதான் என் அபிப்பிராயம். இதைப் பத்திரிகையில் வெளியிடுவதற்கும் உமக்கு அதிகாரம் கொடுக்கிறேன்!''

''அப்படியென்றால் நீர் சொக்கலிங்க செட்டியாரைப் பார்த்திருக்க முடியாதே!''

''ஆம்! அப்படி வாருங்கள் வழிக்கு! செட்டியாருடைய கருமாதிக்கு நான் போயிருந்தேன். புரோகிதர் 'சுக்லாம் பரதரம்' ஆரம்பித்தபோது அடக்க முடியாத தும்மல் வந்து தும்மினேன். அதற்காக 'என்னடா, அபசகுனம்?' என்று செட்டியார் கோபித்துக்கொண்டார்.''

''இது என்ன ஓய்! முழு மோசமாய் இருக்கிறது? செட்டியாருக்குக் கருமாதி என்றால் அவர் செத்துப் போயிருக்க வேண்டுமே; நீர் தும்மினால் அவருக்கு என்ன கவலை?''

''அதுதான் ஸார், இத்தனை நாளாய் எனக்கும் புரியவில்லை.''

''இருக்கட்டும், ஐயா! செட்டியார் செத்துப் போனார் என்றா சொன்னீர்?''

''அப்படி நான் சொன்னேனா?''

''அட இழவே! அப்படியானால் அவர் சாகவில்லையா?''

''அதில் அபிப்பிராய பேதம் இருந்தது. சிலர் செத்துப் போனதாகச் சொன்னார்கள்; சிலர் சாகவில்லையென்றார்கள்.''

''நீர் என்ன நினைத்தீர்?''

''நான் ஒன்றும் நினைக்கவில்லை. நான் ஏன் நினைக்க வேண்டும்? எனக்கா கருமாதி?''



**''இதென்ன கூத்து? செத்துப் போனது நிச்சயம் தெரியாமலே புதைத்து விட்டீர்களா?''**

வேறு மனிதனாயிருந்தால் இதற்குள் தோல்வியை ஒப்புக்கொண்டிருப்பான். ஆனால், அந்த மூக்கு நீள மனிதர் இலேசுப்பட்டவரல்ல; எனவே, கொஞ்ச நேரங்கழித்து மறுபடியும், ''தங்களுக்கு அண்ணன் தம்பிகள் யாரேனும் உண்டா?'' என்று கேட்டார்.

''உண்டு என்றுதான் நினைக்கிறேன். ஆனால் நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை. உண்மை என்னவென்றால், நன்றாக ஞாபகமில்லை'' என்றேன்.

''இதைப்போன்ற அதிசயத்தை நான் கேட்டதேயில்லை'' என்றார் மூக்கர்.

''ஓஹோ! எந்த விதத்தில் இது அதிசயமாகத் தோன்றுகிறது?'' என்றேன்.

''சற்று முன்னால் உங்களுக்கு ஒரு தம்பி உண்டென்றும், அவன் மகாமகத்துக்குப் போயிருந்ததாகவும் சொன்னீர்களே!''

''ஆமாம், ஸார்! ஆமாம். நல்ல வேளை ஞாபகப்படுத்தினீர்கள். மிக்க வந்தனம். ஒரு தம்பி இருந்தான். அவன் பெயர் இன்னாச்சிமுத்து. அந்தப் பெயரைச் சொன்னாலே எனக்குத் துக்கம் நெஞ்சை அடைத்துக்கொண்டு போகும். அதனால்தான் மறந்துவிட்டேன்.''

''ஐயோ பாவம்! செத்துப் போனானாக்கும்!''

''அதுதானே, ஸார், நிச்சயம் தெரியவில்லை! ஏன் கேட்கிறீர்கள்? பெரிய மர்மமாக அல்லவா நேர்ந்து போயிற்று?''

''மர்மம் என்ன? ஆளே அகப்படவில்லையோ?''

''அப்படித்தான் சொல்லவேண்டும். சுடுகாட்டில் புதைத்துவிட்டு வந்தோம். அப்புறம்...''

''இதென்ன கூத்து? செத்துப் போனது நிச்சயம் தெரியாமலே புதைத்துவிட்டீர்களா?''

''சீச்சீ! அப்படியல்ல. செத்துப் போனது சர்வ நிச்சயம். உம்மைப்போல் இப்படி யாராவது கேட்கப் போகிறார்களென்றெண்ணித்தான் டாக்டர் சர்டிபிகேட்டை வாங்கி வைத்திருக்கிறோம்.''

''செத்துப் போனது நிச்சயம். புதைத்தது நிச்சயம். பின்னர் இதில் மர்மம் என்ன?''

''ஆ! அதுதான் விஷயம்: செத்துப் போனதும் புதைத்ததும் நிச்சயந்தான். ஆனால், யார் செத்துப் போனது, யாரைப் புதைத்தது என்பதுதான் மர்மம். நன்றாகக் கவனித்துக் கேளுங்கள். நானும் இன்னாச்சிமுத்துவும் இரட்டைப் பிள்ளைகள். நாங்கள் மூன்று வயதுக் குழந்தைகளாயிருந்தபோது, சேர்ந்தாற்போல் குளத்தில் விழுந்துவிட்டோம். இரண்டு குழந்தையில் ஒன்று செத்துப் போயிற்று. செத்துப் போனது யார் என்று நிச்சயமாக இதுவரை கண்டுபிடிக்கவில்லை. சிலர் இன்னாச்சி என்றார்கள்; சிலர் நான் என்கிறார்கள்.''

''தங்கள் பெயர் என்ன?''

''பார்த்தீரா? நீர் புத்திசாலியென்றல்லவா நினைத்தேன்? செத்துப் போனது இன்னாரென்று தெரியாதபோது என் பெயர் இதுவென்று நான் எப்படிச் சொல்வது? இருந்தாலும் இந்த மர்மத்தைக் கண்டுபிடிக்க ஒரு துப்பு எனக்கு அகப்பட்டது. உம்மிடந்தான் முதன்முதலாகச் சொல்கிறேன்: இரட்டைக் குழந்தைகளில் ஒன்றின் இடது தோளில் பெரிய மச்சம் ஒன்றிருந்தது. அந்தக் குழந்தைதான் முழுகி இறந்து போயிற்று.''

''அப்படியானால் அதில் மர்மம் ஒன்றுமில்லையே?''

''முழுவதும் சொல்வதற்குள் அவசரப்படுகிறீரே! அந்தப் பெரிய மச்சம் என்னுடைய இடது தோளில் இருக்கிறது; இப்போது என்ன சொல்கிறீர்?''

''ஒன்று நீர் பைத்தியமா இருக்க வேண்டும்; அல்லது நான் பைத்தியமா இருக்க வேண்டும்.

''நான் பைத்தியமில்லை. உம்மைப்பற்றி எனக்குத் தெரியாது.''

**''செத்துப் போனதும் புதைத்ததும் நிச்சயந்தான்! ஆனால் யார் செத்துப் போனது. யாரைப் புதைத்தது என்பதுதான் மர்மம்?''**

இதற்குள் தஞ்சாவூர் ஸ்டேஷன் வந்தது. அந்த நன்றிகெட்ட சி.ஐ.டி.காரன் ஒரு 'குட் மார்னிங்' கூட சொல்லாமல் எழுந்து போனான். அன்றைய தினம் அவன் என்ன 'டைரி' எழுதினான் என்று பார்க்க, எனக்கு எவ்வளவோ ஆவல் உண்டு. இந்த ஜன்மத்தில் அது கைகூடாது என்றே நினைக்கிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**- ஆனந்த விகடன், 14.3.1931**

"தமிழகத்தில் ஆழிப்பேரலையின் பெருஞ்சீற்றத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவு, உடை என்று பல அமைப்புகள் உடனடி உதவிகள் வழங்கி மானுட சேவையைப் பதிவு செய்தார்கள். நாங்களும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு என்ன செய்யலாம் என யோசித்தோம். எங்களுக்கு ஒரு பழமொழி கிடைத்தது. அதனைத் தொடர்ந்தே 'ஆர்டிலன்' என்ற அமைப்பைத் துவங்கினோம்'' என பீடிகையோடு துவங்குகிறார், அமைப்பாளர் கில்பர்ட் ஜேம்ஸ். இவர் சில்ட்ரன் ஆஃப் த வேர்ல்டு இந்தியா என்ற அமைப்பின் மேனேஜிங் டிரஸ்டி.

அது என்ன பழமொழி என்று கேட்டதற்கு, ''ஒரு நாள் பசியைப் போக்க நீயொரு மீனைக் கொடுப்பதைக் காட்டிலும், வாழ்நாள் பசியை நீக்க அவனுக்கு மீன் பிடிக்கக் கற்றுக்கொடு' என்ற பழமொழி நினைவுக்கு வந்தது. சுனாமியால் பாதிக்கப்பட்டு எல்லாவற்றையும் இழந்து நின்றவர்களைத் தேர்வு செய்து, புதியதாய் அவர்களுக்குத் தொழிற்பயிற்சியை இலவசமாய்க் கொடுத்தால், ஒவ்வொருவரால் ஒவ்வொரு குடும்பமும் பசியின்றி தலை நிமிரும் என்று பட்டது. செயல்படத் துவங்கிவிட்டோம். ஃபேஷன் டிஸைனிங், லெதர் டெக்னாலஜி, எம்ப்ராய்ட்ரி, கார்மென்ட்ஸ், கம்ப்யூட்டர் என பல்வேறு பயிற்சி பிரிவுகளிலும் முதல் பேட்ச்சில் 60 மாணவர்கள் பயிற்சி பெற்று வெற்றிகரமாய் வெளியேறினர். பயிற்சியின்போது உணவு, உடை, இருப்பிடம், அனுபவப் பயிற்சி எல்லாமே வழங்கப்பட்டன. இதுவரை 500 மாணவர்கள் பயனடைந்துள்ளனர்'' என்றவரிடம், 'உங்கள் நோக்கம் இப்போது நிறைவேறியதா?' என்றால், முகமெல்லாம் மகிழ்ச்சி பொங்க, ''ஆமாம்! எங்கள் மாணவி ராஜலஷ்மி, பத்து பேருக்கு வேலை கொடுக்கும் தனி எம்ப்ராய்ட்ரி யூனிட்டை நடத்தி வருகிறாரே'' என்கிறார்.

பயிற்சி பெற்ற மாணவர்கள் தயாரிக்கும் ஃபேஷன் பொருட்களின் விற்பனை மையம் ஆர்டிலன். சென்னை மயிலாப்பூரில் இயங்குகிறது. இதனை அயிச்சா என்ற பெண்மணியும் அவரது கணவர் பிராங்கும்தான் ஒருங்கிணைக்கிறார்கள் என்று அவர்களை அறிமுகப்படுத்துகிறார். உரையாடலின்போது அயிச்சா, ''நாங்கள் மயிலையின் வசீகரத்தில் மயங்கிக் கிடக்



* அயிச்சா

# இதமான இந்தியப்

கிறோம். எங்களுக்கான இடம் இந்தியாதான் என முடிவு செய்தவுடன் குறிப்பாக, மயிலை யைத் தேர்வு செய் தோம். இங்கு ஒவ்வொருவரிடமும் தெய்விகத் தன்மை இருப்பதாக உணர்கிறேன். கோயில் ஐயர்கள், பூ விற்கும் பெண்கள், சைக்கிள் ரிக்ஷாக்காரர் எல்லோரிடமும் சக்தி நிறைந்த ஒரு இந்தியப் புன்னகை இருக்கிறது.





✱ வகுப்பறையில்



✱ தோடி பயிற்சியில்

சொல்லத் தெரியவில்லை. மக்களின் அந்தப் புன்னகைதான் எங்களை இயக்குகிறது. நாங்களும் மயிலைத் தமிழைக் கற்றுக்கொண்டு வருகிறோம்'' என்றார்.

''பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த திருமதி மார்டின், திரு. மிக்சல் ஆகியோர் தான் இதன் மூலகர்த்தா. 500 ஏக்கர் நிலப் பரப்பில் விவசாயிகளுக்கு ஆர்கானிக் முறை விவசாயம், ஹெல்த் சென்டர் என இன்னுமின்னும் சேவையை விரிவுபடுத்திச் செல்கிறது ஆர்டிசன். இன்னும் பல இடங்களுக்கு விரிவுபடுத்த இருக்கிறோம்'' என்று சொல்லும் கில்பர்ட் ஜேம்ஸின் சேவை யார்வம் வெற்றி பெற வேண்டும் என்பது நமது பிரார்த்தனையாகிறது.



✱ கில்பர்ட் ஜேம்ஸ்

– லக்ஷ்மி மோகன்

# புன்னகை!

# துப்பாக்கித் தங்கம்!



* அபினவ் பிந்திரா

2004. ஏதென்ஸ் ஒலிம்பிக்ஸ். பொதுவாக எந்தச் சூழ்நிலையிலும் உணர்ச்சிவசப்படாத அபினவ் பிந்திரா அப்போது நடுக்கத்திலிருந்தார். பத்து மீட்டர் ஏர் ரைஃபிள் போட்டியில் ஏழாவது இடம் கிடைத்து படுதோல்வியைச் சந்தித்திருந்த தருணம் அது. சக வீரரான சுமாவிடம் தன் வேதனையைப் பகிர்ந்துகொண்ட அபினவ் இறுதியாகச் சொன்னார் - 'இந்த ஒலிம்பிக்ஸுக்காக நான் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சம் இல்லை. ஆனால், என்ன பிரயோஜனம்? இனிமேல் நான் துப்பாக்கியைக் கையில் எடுக்கமாட்டேன். இன்றோடு இந்த விளையாட்டுக்கு முற்றுப்புள்ளி.'

2008. பீஜிங் ஒலிம்பிக்ஸ். அதே பத்து மீட்டர் ஏர் ரைஃபிள் போட்டியில் அபினவ் பிந்திராவுக்குத் தங்கம் கிடைக்கிறது!

பீஜிங் ஒலிம்பிக்ஸுக்காக இணைய தளம் ஒன்று அதிகாரபூர்வமாக தொடங்கப்பட்டுள்ளது. ஆகஸ்ட் 10ம் தேதி அன்று வெளியிடப்பட்ட செய்தி ஒன்றில் பத்து மீட்டர் ஏர் ரைஃபிள் பிரிவில் சீன வீரருக்குத்தான் தங்கம் என்று அறுதியிட்டுக் கூறப்பட்டிருந்தது. விதியை மாற்றி எழுதி, ஆயிரம் வருடம் ஆனாலும் அழிக்க முடியாத ஒரு சாதனையை நிகழ்த்திவிட்டு, 'எல்லாம் அதிர்ஷ்டம்தான். இன்றைக்கு என்னுடைய குறி சரியாக அமைந்திருக்கிறது. மற்றொரு நாளில் நான் தோற்றுப் போகவும் வாய்ப்பிருக்கிறது' என்று தன்னடக்கத்தோடு துப்பாக்கி மொழி பேசுகிறார் 25 வயது அபினவ் பிந்திரா. 1920லிருந்து ஒலிம்பிக் போட்டிகளில் கலந்துகொள்ளும் இந்தியாவுக்கு, இப்போதுதான் நீண்ட நாள் கனவு ஒன்று நிறைவேறியிருக்கிறது.

ஐந்து வயதாகும்போது அபினவ் கையில் பொம்மைகள் எதுவும் இருக்காது. துப்பாக்கிதான். அப்பா ராணுவக்காரர் என்பதால் வீட்டில் எப்போதும் துப்பாக்கி இருக்கும். வீட்டுப் பணியாளரான பாட்டியின் தலையில் பலூனைக் கட்டி, சரியாகக் குறி பார்த்து அடிப்பதைக் கண்ட அபினவின் தந்தை, உடனடியாக துப்பாக்கி சுடும் பயிற்சி மையத்துக்கு அழைத்துச் சென்றார். அன்றுமுதல் துப்பாக்கியும் கையுமாக வாழ ஆரம்பித்துவிட்டார் அபினவ். ஏதென்ஸ் தோல்விக்குப் பிறகு இரண்டு வருடங்கள் உடல்நல தகுதியின்மை காரண

❖ ச.ந.கண்ணன் ❖





மாக வீட்டில் முடங்கிக் கிடந்தார் அபினவ். ஆனால், அவருடைய இயல்பான குணங்களான பொறுமையும் விடாமுயற்சியும் அவரை பீஜிங் பதக்கமேடை வரைக்கும் அழைத்து வந்திருக்கின்றன.

இந்திய கிரிக்கெட் வாரியம் பிந்திராவுக்கு 25 லட்சம் அளித்துள்ளது. இனி பிந்திரா நாட்டின் எந்த ரயிலிலும் எப்போது வேண்டுமானாலும் எந்த வகுப்பிலும் இலவசமாகச் செல்லலாம் என்கிற அதிவிசேஷ சலுகையை வழங்கியிருக்கிறது இந்திய ரயில்வே துறை. பஞ்சாப் அரசு, இவருக்கு பத்து லட்சம் பரிசாக அறிவித்ததுபோக, இதர மாநில அரசுகளும் பிந்திராவுக்கு பரிசுத் தொகையை வாரி வழங்கியிருக்கின்றன. இதுவே ஒரு கோடியைத் தொட்டுவிடும். கிரிக்கெட்டர்களுக்கு ஸ்பான்ஸர்களாக இருக்கும் அத்தனை நிறுவனங்களும், இப்போது அபினவ் வரவுக்காகக் காத்திருக்கின்றன. விளம்பரங்கள் மூலமாக, அடுத்த ஒரு வருடத்துக்கு பத்து முதல் இருபது கோடி வரை சம்பாதிக்க முடியும் என்று கணிக்கப்படுகிறது.

இன்று அபினவை தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டாடும் இந்திய அரசு, இதுவரை கிஞ்சித்தும் அவருக்குத் தேவையான வசதி வாய்ப்புகளைப் பற்றி எண்ணிப் பார்த்தது கிடையாது. தன் சொந்த முயற்சியில், சொந்த செலவின் மூலமாகவே பயிற்சிகள் எடுத்துத் தன்னை மேம்படுத்தியிருக்கிறார்.

இந்த நேரத்தில் நாம் சீனாவிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய ஒரு பாடம் இருக்கிறது. சீனாவின் முதல் தனி நபர் தங்கமும் துப்பாக்கிச் சுடும் போட்டி வழியாகவே கிடைத்தது. வருடம் - 1984. அன்று தன் இலக்கைக் குறி பார்த்து அடித்த சீனா, அடுத்து இருபத்தைந்து வருடங்களில் உலகின் மிகப்பெரிய விளையாட்டு தேசமாகத் தன்னை வளர்த்துக்கொண்டது! அபினவ் பிந்திராவை முன்னிறுத்தி நாம் எவ்வளவு தூரம் போகப் போகிறோம்?

# 'அச்சு' அசலான போலிகள்!



படம் : ஸ்ரீஹரி

''திருட்டு வி.சி.டி., போலி பதிப்பு புத்தகங்கள் போல, வெண்கலச் சிலைகளிலும் போலி புகுந்து விளையாடுகிறது! இதைத் தடுக்க எங்களால் ஒன்றும் செய்யமுடியவில்லை'' என்று தார்மிகமாகக் கோபப்படுகிறார் ஸ்ரீனிவாசன். இவர் தமிழ்நாட்டு கைவினைக் கலைஞர்கள் சங்கத்தின் பொருளாளர். இந்தச் சங்கம் சென்னை ஷெமியர்ஸ் ரோடில், 'சிருஷ்டி எம்போரியம்' என்ற பெயரில் கலைப் பொருட்கள் விற்பனை மையம் ஒன்றை நடத்தி வருகிறது. தமிழகத்தின் பல்வேறு ஊர்களிலும் வசிக்கும் திறமையான கைவினைக் கலைஞர்கள் தயாரிக்கும் கலைப் பொருட்கள் சென்னை நகரத்தில் உள்ள இந்த விற்பனை நிலையத்தின் மூலமாக விற்பனை செய்யப்படுகின்றன.

''ஒரு திறமையான சிற்பக் கலைஞர், வெண்கலத்தில் நான்கு அடி உயரமுள்ள நுட்பமான ஒரு விநாயகர் சிலையைச் செய்து முடிக்க, சுமார் ஆறு மாதம் வரை கூட ஆகும். முதலில், செய்ய வேண்டிய சிற்பத்தை மெழுகில் செய்து, அதற்கு மண் பூச்சு கொடுத்து, அதில் சிறு துளையிட்டு, வெப்பத்தில் மெழுகை உருக்கி வெளியேற்றிவிட வேண்டும். அதன்பிறகு, மண் மோல்டுக்குள்ளே வெண்கலத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும். அடுத்த கட்டமாக வெண்கலச் சிலை மீதுள்ள மண் அகற்றப்படும். தொடர்ந்து, அந்த வெண்கலச் சிலையைத் தன் உளி கொண்டு மிகவும் நுட்பமாகச் செதுக்குவார் சிற்பக் கலைஞர். இப்படி ஆறு மாத காலம் சிரமப்பட்டு உருவாக்கப்பட்ட சிலையின் விலை, சுமார் ஒன்றரை லட்சம் வரை இருக்கும்'' என்கிறார் ஸ்ரீனிவாசன். இதில் போலி எப்படி நுழையும் என்றதற்கு...

''சிலர் எங்களிடமிருந்து இப்படிப்பட்ட ஒரு வெண்கலச் சிலையை வாங்கிக் கொண்டுபோய், அதை ஆறு துண்டுகளாக்கி ஒவ்வொன்றுக்கும் தனி அச்சு செய்துவிடுகிறார்கள். அதன் பிறகு அந்த அச்சுக்களைப் பயன்படுத்தி, நூற்றுக்கணக்கில் பார்ட் பார்ட்டாகச் செய்துவிடுகிறார்கள். பிறகு அந்த ஆறு பார்ட்களை இணைத்து பிள்ளையார் சிலையை உருவாக்கிவிடுகிறார்கள். ஒரிஜினல் சிலைக்கும், இப்படி ஒட்டுப் போட்ட சிலைக்கும் உள்ள வித்தியாசத்தை சாமானிய மக்களால் கண்டுபிடிக்க முடியாது. ஒரிஜினல் ஒரு லட்சம் விலை என்றால், ஒட்டுப் போட்ட போலி வெறும் பத்தாயிரம் ரூபாய்க்குக் கிடைக்கும். இதனால் கைவினைக் கலைஞர்களுக்கு ஏற்படும் நஷ்டம் அளவில்லாதது. இதைத் தடுக்கவும் எங்களால் முடியவில்லை'' என்று வருத்தப்படுகிறார் ஸ்ரீனிவாசன்.

சந்திப்பு : எஸ்.சந்திரமௌலி

# நீங்கள் கேட்டவை - தராசு

● க. வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

**? த.மா.கா. கொடியை ஏற்றி, சிலர் தங்கபாலுவுக்கு எதிர்ப்பு தெரிவித்திருப்பது எதைக் காட்டுகிறது?**

! தங்கபாலுவுக்குத் தலைவலி இன்னும் நிறைய காத்திருக்கிறது என்பதைத்தான். த.மா.கா. பிரிவின் எதிர்ப்புக் கொடி என்பதைவிட, தலைமை மாற்றும் காங்கிரஸுக்கு எதிர்ப்புக் கொடி எனலாம். தலைமை மாற்றுவது தவிர, சோனியாவுக்கு காங்கிரஸைப் பலப்படுத்த வேறு வழி எதுவும் தெரியவில்லை என்பதுதான் சோகம்.

* வராத வைராக்கியம்

# மாயாவதி செலுத்திய 26 கோடி வருமான வரி..?

● த. புகழேந்தி, கூகூர்

**? ரூ. 26 கோடி வருமான வரி கட்டினாராமே மாயாவதி?**

! தாஜ் காரிடார் ஊழல் நிழலை, வருமானவரி வெளிச்சத்தால் நீக்கும் முயற்சி. பிரதமர் ஆவதற்குத் தம் தகுதியை உணர்த்துகிறார்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

**? 'இசையை உருவாக்க இசையமைப்பாளர்கள் முயற்சி செய்கிறார்கள். தானாக வருவதுதான் இசை' என்று இளையராஜா கூறுவது சரியா?**

! ரொம்ப சரி. மிகச் சிறந்த இசை என்பது, முயற்சியில் விளைவதைக் காட்டிலும் உணர்விலிருந்து உதிக்கிறது என்பதே உண்மை. அவ்வாறு முகிழ்த்தவைதான் நமது வாக்கேயக்காரர்களின் கீர்த்தனைகள்.



* முந்தும் பிரதமர் கனவு!

●வி. வெங்கட்ராமன், செகந்தராபாத்

**? நம்பிக்கை வாக்கெடுப்பில் காங்கிரஸ் வென்றதற்காக, சமாஜ்வாடி கட்சி உறுப்பினர் ஒருவர், கௌஹாத்தி காமாக்யா கோயிலில் 242 ஆடுகள், நான்கு எருமைகளை பலிகொடுத்துள்ளாரே?**

! பணத்தாசை காட்டி வோட்டுப் பெற முயன்றபோதே நேர்மை, தன்மானம் முதலான உன்னத குணங்களை பலி கொடுத்தாச்சு. அப்புறம் வெற்றி என்ன? மிருக பலி என்ன? முன்னது கொடுமை; பின்னது கொடுமையிலும் கொடுமை!



* தொலைந்து போன சாவி!



* மகிழ்வித்த இசை

தொலைத்து ரொம்பக் காலம் ஆகிவிட்டது!

● மு.ரா. பாலாஜி, கோலார் தங்கவயல்

? 'என் குழந்தைகளுக்காக, நான் சிகரெட் பிடிப்பதை இரண்டு மாதங்களுக்குள் நிறுத்திவிடுவேன்' என்கிறாரே ஷாருக்கான்?

! இரண்டு நிமிடங்களுக்குள் வரவேண்டிய வைராக்கியம் அது. இரண்டு மாதங்களில் வராமலே போகக்கூடும்!

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்

? டி.எம்.எஸ்.ஸைப் பாராட்ட வேண்டிய அளவுக்கு என்ன பொதுசேவை ஆற்றியிருக்கிறார்?

! சிறந்த பின்னணிப் பாடகராக விளங்கி லட்சக்கணக்கான மக்களை மகிழ்வித்து, தற்காலிகமாகவேனும் கவலைகளை மறக்கச் செய்தாரே; அதுவே பெரிய பொதுஜன சேவைதான். அவருக்குப் பாராட்டு என்ற பெயரில் சிலர், அரசியல் ஆதாயம் தேடியதுதான் அபஸ்வரம். அதற்கு அவர் ஒப்புக் கொண்டது, தப்புத் தாளம்.

● ஜெ. துரைராஜ், சென்னை - 116

? நிகேதா 26 வாரக் கருவைக் கலைக்கக் கூடாது என்று மும்பை உயர்நீதி மன்றம் உத்தரவிட்டுள்ளதே?

! சட்டத்தின் அடிப்படையில் பிரச்னையை அணுகி தீர்ப்பு அளித்துள்ளதாகத்தான் நீதிமன்றமே தெரிவிக்கிறது. மருத்துவ முன்னேற்றமோ, பிறக்கப் போகும் குழந்தையின் இதயம் மிகவும் பழுதுபட்டிருக்கும் என்பதால் கருகலைப்பை நியாயப்படுத்துகிறது. இந்தச் சூழலில் சட்டத்தை மறுபரிசீலனைக்கு உட்படுத்துவது அவசியமாகிறது.

● ஏ. அஹமது இர்ஷாத், அதிராம்பட்டினம்

? ஊராட்சி ஒன்றியத் தலைவர்களுக்கு, அரசு சார்பில் டாடா சுமோ வழங்கும் நிகழ்ச்சியில் முதல்வரிடமிருந்து கார் சாவியைப் பெற்றதற்காக, அ.தி.மு.க. ஆண்டிப்பட்டி ஊராட்சி ஒன்றியத் தலைவியை கட்சி நீக்கம் செய்துள்ளாரே ஜெ.? இது சரியா?

! ஆட்சியையும், கட்சியையும் பிரித்துப் பார்க்க அறியாத நமது அரசியல்வாதிகளின் வழக்கமான தவறுகளுள் இன்னொன்று. ஆரோக்கிய அரசியலின் சாவியை அவர்கள்

● இரா. சக்கரபாணி, மதுரை ★

? இந்தியா - பாகிஸ்தானுக்கிடையே சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டு, கடந்த நான்காண்டு காலமாக அமைதி காத்த எல்லைப் பகுதியில், இந்த ஆண்டு திடீரெனப் பதற்றம் ஏற்படக் காரணம் என்ன?

! நீறுபூத்த நெருப்புதானே! எப்போது ஜ்வாலை கிளம்பும்னு சொல்ல முடியாது. கண்ணுக்குத் தெரியாத சின்ன காத்து போதும் அதைத் தூண்ட.

● பஞ்ச்சர்மா, வெள்ளாளப்பட்டி ❑

? வோட்டுப் போடுகின்ற மக்கள் விழிப்புணர்வு அடைந்தால், அரசியல்

❑ ரூ. 100/ பரிசு பெறுபவர் : பஞ்ச்சர்மா, வெள்ளாளப்பட்டி

வாதிகளின் நிலை?

! அகப்பட்டுக்கொண்டு திருதிருவென்று விழிக்கும் நிலைதான்!

● என். காளிதாஸ், சிதம்பரம்

? சென்னை, கோவை மருத்துவமனைகளுடன் தொடர்புடைய சிறுநீரக மோசடி, அசாம் மாநிலத்தில் அம்பலமாகியுள்ளதே?

! இதில் அதிசயம் என்ன? அசாம் மாநிலத்தில் ஏழை பாழைகள் இல்லையா என்ன! ஏமாளிகள், மோசடி நடக்கும் இடத்துக்கு வெகு தூரத்திலிருந்து வந்தவர்களாக இருந்தால் நல்லது என்றுதானே சிறுநீரக மோசடி டாக்டர்கள் நினைப்பார்கள்! திட்டமிட்டுத்தான் நடந்திருக்கும்.



* காத்திருக்கும் தலைவலி!



* முயற்சிக்கு முற்றுப்புள்ளி!



* அச்சுறுத்தும் இடைவெளி!

● என். சண்முகம், திருவண்ணாமலை

? 'நடிகை பத்மப்ரியாவை நான் செல்லமாக அழைப்பதாகச் சில பத்திரிகைகள் எழுதுகின்றன. அப்படி நான் அழைக்க அவர் என்ன என் பெண்டாட்டியா? வைப்பாட்டியா?' என சேரன் பேசியது சரியா?

! அல்ல; ஆணாதிக்க அகங்காரத்தின் உச்சம். இயக்குநர் சேரனுக்கும் மனிதர் சேரனுக்குமான அச்சுறுத்தும் இடைவெளி அதிர்ச்சியளிப்பதாக இருக்கிறது.

● மு. தமிழ்ப்பாண்டியன்,
சென்னை - 49

? அ.தி.மு.க. ஆட்சியைவிட தி.மு.க. ஆட்சியில் அரசு வருவாய் அதிகரித்துள்ளது என்று கூறும் கலைஞர், டாஸ்மாக் கடைகளை மூடிவிட்டு இப்படிப் பேசுவாரா?

! ஊஹூம்! டாஸ்மாக் கடைகளுக்குக் கூடுதல் விற்பனை இலக்கு நிர்ணயித்த பின்புதான் பேசுவார்!

● கே.ஏ. காளிமுத்து,
இராணிப்பேட்டை

? 'தமிழக அமைச்சரவையில் காங்கிரஸுக்குப் பங்குகேட்டுச் சலித்துப் போய்விட்டது. நாங்களும் சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும் என்று அமைதியாகிவிட்டோம்' என்கிறாரே இளங்கோவன்?

! இளங்கோவனின் இந்த புளித்துப்போன விளக்கம் கேட்டு நமக்குச் சலித்துப் போய்விட்டது. ●

* ரூ 50/ பரிசு பெறுபவர் : இரா. சக்கரபாணி, மதுரை

## இயக்குநர் சிம்புதேவன்

# பிரிச்சு மேய்தலின்

பள்ளியில் படிக்கும்போது வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் ஏதாவது நாடகங்களில் 'தலை' காட்டுவேன். ஏழாவது படிக்கையில் பள்ளியில் நாடகத்துக்குப் பெயர் கொடுத்துவிட்டு வீட்டில் போய் ஏக அலப்பறை! நான் பண்ணின பில்டப்பில் வீட்டிலும் இவன் ஏதோ கமலஹாசன் ரேஞ்சுக்கு பொளந்து கட்டப் போகிறான் என நினைத்து, குடும்பத்தோடு வரத் திட்டமிட்டார்கள்.

இடி விழுந்தது! எனக்கு வேலைக்காரன் ரோல்! கை கட்டி கக்கத்தில் விளக்குமாரோடு அடிமைகள் கூட்டத்தில் - அதுவும் இரண்டாவது வரிசையில் நடுவில். என்ன நடித்தாலும் எந்தப் பக்கத்தில் இருந்தும் யாருக்கும் தெரியாது. நேர் மேலே வானத்திலிருந்த தேவதூதர்களுக்கு மட்டுமே தெரிந்திருக்கும்.

பாவம், வீட்டில் என்னைச் சல்லடை போட்டுத் தேடியிருக்கிறார்கள். கடைசியில் என் மாமாதான் கையும் களவுமாகக் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டார்!

ஏதோ ஒரு விதத்தில் நாடகங்களோடு தொடர்பிருந்த இதே நேரத்தில்தான், நான் நிறைய சினிமா பார்த்ததும். இதன் வளர்ச்சியாய் கல்லூரியில் தனி நாடகங்கள் எழுத ஆரம்பித்தேன். நடிப்பதைவிட நாடகத்தை எழுதி இயக்குவது எனக்குப் பிடித்திருந்தது.

'தேசிய கீதம்' படம் முடிந்த சமயத்தில் இயக்குநர் சேரனை முதன்முதலாகப் பார்த்தேன். மிகச் சாதாரணமாக இருந்தார். நீண்ட நேரம் என் விமர்சனங்களைச் சொல்லிவிட்டு, அவரிடமே உதவி இயக்குநராகப் பணிபுரிய விரும்பும் என் உண்மையான விருப்பத்தைச் சொன்னேன். சில வினாடிகள் யோசித்தார். பின் 'இப்ப ஆள் இருக்காங்க 'டச்'ல இருங்க! பின்னால சொல்றேன்' என்றார். அதன் பின் அவருக்கு அடிக்கடி கடிதம் எழுதுவேன்.

நான் வரைந்து எழுதிய கி.மு.வில் சோமு புத்தகத்தை நேரில் போய்க் கொடுத்தேன். அதை வெகுநேரம் கூர்ந்து பார்த்தவர், ''உனக்குள்ள சினிமாவுக்கான அடிப்படை தெரியுது. வந்து சேர்ந்துக்கோ!'' என்றார். ஆயிரம் மடங்கு உற்சாகத்தோடு அவரிடம் உதவி இயக்குநராகச் சேர்ந்தேன். சேர்ந்த முதல் நாள் (கரம்சந்த் லுங்கட் கம்பெனி) அவருடன் சேர்ந்து மதியம் சாப்பிட்டேன் ''சிம்பு, நமக்குக் கிடைக்கிற இந்த சோத்துக்கு உண்மையா, நேர்மையா உழைச்சா போதும். பணங்காசை விட நல்ல படைப்பை உருவாக்கறதுதான் உண்மையான திருப்தி!'' என்றார்.

இறைவன் ஆசீர்வாதம்... எனக்கு நல்ல மூன்று கல்லூரிகள் கிடைத்தன. ஒன்று மதுரை தியாகராசர்



கல்லூரி, அடுத்து ஆனந்த விகடன் கல்லூரி, மூன்றாவது சேரன் கல்லூரி.

**நா**ன் அவரிடம் சேர்ந்தபோது ஜெகன் நாத் (புதிய கீதை, கோடம்பாக்கம் படங்களின் இயக்குநர்) சீனியர். அடுத்து ராம கிருஷ்ணன், பாண்டிராஜா, நான் என்ற ஆர்டரில் இருந்தோம். நான் சேர்ந்த சமயம் டைரக்டருக்கு நெருக்கடியான நேரம். 'தேசிய கீதம்' முடிந்ததும் தொடங்க இருந்த விண்ணோடும் முகிலோடும், டிராப் ஆனது. அடுத்த கம்பெனி அமைய

# விளக்கவுரை!

வில்லை. அவர் வீட்டில் அமர்ந்துதான் கதை பேசுவோம். எந்தக் கஷ்டத்தையும் வெளிக்காட்டாமல் சந்தோஷமாகவே இருப்பார்.

வீட்டில்தான் சாப்பாடு. திருமதி ராணி சேரன் சமைத்து, பரிமாறுவார். சேரன் என்ற இயக்குநரின், மனிதரின் வெற்றிக்கு முக்கிய காரண மானவர் அவர். அவரை அக்கா எனக் கூப்பிடுவோம். டைரக்டருக்கு வேலையில் உட்கார்ந்துவிட்டால் பசி தெரியாது. அக்காதான் வந்து சாப்பிடக் கூப்பிடுவார். ''பசியில்லை அப்புறம் சாப்பிடறோம்!'' என்பார், மதியம் மூன்று மணிக்கு! நாங்கள் கிறங்கிப் போய்க்கிடப்போம். ''ஏங்க உங்களுக்குப் பசிக்காட்டி அவங்களுக்கும் பசிக்காதா? அவரு யோசிச்சுக்கிட்டு இருக்கட்டும் நீங்க வந்து சாப்பிட்டுப் போங்கப்பா!'' என்பார். திரும்பக் கிடைக்காத அன்பான நாட்கள் அவை.



ஒருமுறை நான் வழக்கமான சினிமா பாணி சீன் ஒன்றை உருவாக்கிச் சொன்னேன். பயங்கர கடுப்பாகிவிட்டார். ''சிம்பு பணம் சம்பாதிக்கணும்னு நான் சினிமாவுக்கு வரலை. இந்த மாதிரி சீன்கள் யோசிக்கிறதுன்னா, நீங்க என்கிட்ட இருக்க வேண்டாம். கிளம்பிருங்க!'' என்றார்.

பின் அமைதியாகி, ''பத்தோட பதினொன்றா இருக்கறதுக்கு எட்டு மணி நேர வேலைக்குப் போயிரலாமே! எதுக்கு படைப்பாளியா வரணும்? நமக்குனு தனித்தன்மை வேண்டாமா?'' என்றார். சுய கொள்கையும், தனித்தன்மையும் படைப்பாளிக்கு மிக முக்கியம் எனப் புரிந்தது.

**டை**ரக்டரின் கதை உருவாகும் இடம் சுவாரஸ்யமாக இருக்கும். கதையின் அவுட்லைனைச் சொல்லுவார். பின் செலவுக்குப் பணம் கொடுத்து, பத்து நாட்களில் எல்லோரும் தனித்தனியாக கதை பண்ணி வர வேண்டும் என்பார். அப்போது எனக்கடுத்து தாயுமானவனும் சேர்ந்துவிட்டதால் மொத்தம் ஐந்து பேர். பத்து நாள் கழித்து உத்வேகமாய் ஒவ்வொருவரும் எழுபது சீன்களில் தனித்தனி கதையோடு வருவோம். ஒரே கதை ஐந்து விதமாக உருவாகி இருக்கும். அவரவர் கேரக்டர்தான்

## என்னை இயக்கிய ஹீரோக்கள்-4

கதையாக உருவாகும் என்பார் டைரக்டர். அது நிஜம்! குரூப்பாக அமர்ந்து ஒவ்வொருவரும் இரண்டு மணி நேரம் அவரவர் கதையைச் சொல்லுவோம். வித்தியாசமான அனுபவமாகவும், பயங்கர காமெடியாகவும் இருக்கும்.

'பாண்டவர் பூமி' கதையை முழு நீள காமெடியாக ஏதோ சார்லி சாப்ளின் படம் ரேஞ்சுக்கு நான் சொல்லியிருக்கிறேன். பாண்டி ராஜா அதையே கிராம ரசம் சொட்டச் சொட்டச் சொல்ல, ராமகிருஷ்ணன் முழு ஆக்ஷன் படமாகச் சொல்ல, தாயுமானவனோ தீவிரவாதம் கலந்த உணர்வுபூர்வமாகச் சொல்ல ஒவ்வொருவரின் ஃபீலிங்கும்(?) புரியும்.

டைரக்டரும் கைதட்டி ஆர்வமாக, சந்தோஷமாகக் கேட்பார். கடைசியில் டைரக்டர் தன் வடிவத்தைச் சொல்லும்போதுதான் அவர் எத்தனை சீரியஸாக யோசித்திருக்கிறார் எனப் புரியும். முக்கியமான விஷயம் நாங்கள் சொல்வதிலிருந்து ஒரு சீன் கூட இறுதியில் உருவாக்கும் கதையில் இருக்காது. பாண்டவர் பூமியில் நடிகர் சந்திரசேகர் பழைய வீட்டில் நுழைந்து முன்பு பயன்படுத்திய மணியைத் தூக்கிப் பார்ப்பார் என்ற இந்த உலகமகா ஷாட்தான், அவருடன் பணியாற்றிய ஐந்தரை வருடத்தில்

**"பத்தோட பதினொன்னா இருக்குறதுக்கு எட்டு மணி நேர வேலைக்கு போயிரலாமே! எதுக்கு படைப்பாளியா வரணும்?"**

நான் சொல்லி ஓ.கே. ஆன ஒரே சீன் (?) கதையை முழுக்க முழுக்க டைரக்டரே உருவாக்கிவிடுவார். அவர் ஒன் மேன் ஆர்மி. அவர் வெற்றிக்கு அவர் மட்டுமே காரணம். ஆனால், அந்தச் சமயத்தில் எங்களுக்குக் கிடைத்த பயிற்சி மகத்தானது.

ஷூட்டிங் என்றால் அவர் படு இறுக்கமாகிவிடுவார். ஏதோ மூன்றாவது மனிதர்கள் போல எங்களிடம்கூட பேசமாட்டார். கொன்னு கொலை எடுத்தல் அல்லது பின்னி பெடல் எடுத்தல் அல்லது பிரித்து மேய்தல் போன்ற வார்த்தைகளின் உண்மையான அர்த்தத்தை ஷூட்டிங்கில்தான் அவர் மூலம் நாங்கள் உணர்வோம். ஏகப்பட்ட வேலைகள். அதை அறிவுபூர்வமாக, நிர்வாக ரீதியாக, வேலை வாங்கும் உத்தியாக பல கோணங்களில் அணுக வேண்டியது உதவி இயக்குநர் வேலை. என்ன யோசித்துச் செய்தாலும் தவறு நடந்துகொண்டே இருக்கும். டைரக்டரிம் திட்டு வாங்காத நாள் இருக்காது. இருபத்தி நாலு மணி நேரமும் வியர்வை வழிய ஓடி, ஏதோ பாகிஸ்தான் பார்டரில் போருக்குப் போனது போலவே இருக்கும்.

நாக்கு தள்ளி ஆளுக்கு ஒரு பக்கமாக விழுந்து கிடக்கும் எங்களை மீட்டு எடுப்பது எங்கள் மகத்தான கோ-டைரக்டர்கள் வி.சி.விஜயசங்கரும், சரத் சூர்யாவும்தான். அற்புதமான மரியாதைக்குரிய மனிதர்கள். கிளாப் அடிப்பதில் தொடங்கி - துணை நடிகர்களை வேலை வாங்குவது வரை சகலத்தையும் கற்றுக் கொடுத்தவர்கள். விஜய சங்கர் எல்லாப் பிரச்னைகளையும் தானே ஏற்றுக் கொண்டு சரிப்படுத்தவும் செய்வார். யாருமே நெருங்க பயப்படும் டைரக்டரை அவர் மட்டும்தான் நெருங்கி கையாள்வார். (விஜயசங்கர் எனக்காகப் புலிகேசியிலும் உடன் இருந்தார். இன்றுவரை என்னை வழிப்படுத்துகிறார். நான் அவருக்கு நிறைய கடமைப்பட்டிருக்கிறேன்.)

டைரக்டர் தான் நினைத்ததை எடுக்கும் வரை உலகமே இடிந்து விழுந்தாலும் ஓயமாட்டார். அதுதான் அவர் வெற்றிக்கு அடிப்படை. இது சாதாரண ஒரு வழி விஷயமாக இருந்தாலும்,

இதைப் பயன்படுத்த மிகுந்த மனோ பலம் வேண்டும்.

**ஷூ**ட்டிங்கில் மட்டும்தான் அவர் புலி. மற்ற நேரத்தில் தோழமையோடு மிக இயல்பாகிவிடுவார். 'ஆட்டோ கிராஃப்' எடிட்டிங், டப்பிங் நடக்கிற சமயத்தில் டிரைவர் இல்லாததால் அவர் காரை அவரேதான் ஓட்டுவார். காலை ஆறு மணிக்கு அலுவலகத்திலிருந்து கிளம்பும்போது காரை அவர் ஓட்ட, நான் அருகில் உட்கார்ந்திருப்பேன். எனக்கு ஜன்னலோரம் அமர்ந்தால் நிமிஷத்தில் தூங்கிவிடும் பழக்கமுண்டு. வியாதி என்றும் சொல்லலாம்.

கோடம்பாக்கத்திலிருந்து ஏவி.எம். ஸ்டுடியோ போவதற்குள் நான் தூங்கிவிடுவேன். அவர் ஸ்டுடியோவில் வண்டியை நிறுத்திவிட்டு என்னை எழுப்பி ''ஸார், வேணா இங்கயே தூங்கறீங்களா? நான் உள்ள போயிட்டு வந்திரட்டா!'' என்பார். நான் துள்ளிக் குதித்து இறங்குவேன்.

**'ஆ**ட்டோகிராஃப்' சமயத்தில் ஒரு முறை ஜெமினியில் ஒரு அலுவலகத்துக்கு என்னையும் அழைத்துப் போயிருந்தார். நான் ரிசப்ஷனில் இருக்க, அவர் மட்டும் உள்ளே போனார். கொஞ்ச நேரத்தில் உள்ளே இருந்த நபர் டைரக்டரிடம் காட்டுக் கத்தலில் பேச ஆரம்பித்தார், கிட்டத்தட்ட திட்டுவதைப் போல. பிறகுதான் புரிந்தது டைரக்டர் அவரிடம் சில லட்சங்கள் கடன் வாங்கப் போயுள்ளார் என்று. அந்த காட்டுக் கத்தல் வார்த்தைகளில் என் எதிரே இருந்த டீயை எடுக்கக்கூட எனக்குத் தோன்றவில்லை. படபடப்பாக இருந்தேன். டைரக்டர் சாதாரணமாக வெளியில் வந்தார். வெளியில் வண்டியைக் கிளப்பி வரும்போது எதிரே இருந்த ஹோர்டிங்ஸைப் பார்த்து ''நல்ல கலர் காம்பினேஷன்ல!'' என்றார். எதுவுமே நடக்காததுபோல் சாதாரணமாக.

அதுதான் அவரின் மன உரம்!

'ஆட்டோகிராஃப்' சமயத்தில் 'இவர் மொகத்துக்கு எதுக்கு இந்த வேலை!' என பலர் காதுபடப் பேசியிருக்கிறார்கள். எல்லாவற்றையும் மீறி ஆட்டோகிராஃப் ஜெயித்தது. அவர் நடிகராகவும் இன்று பெரிய வெற்றி பெற்றுள்ளார். அவரிடமிருந்து முக்கியமாக நான் பெற்றுக் கொண்டது பெரும் தன்னம்பிக்கையும், மனதிடமும்தான்!




அவரிடம் ஐந்து வருடங்கள் 'வெற்றிக் கொடிகட்டு', 'பாண்டவர் பூமி', 'ஆட்டோகிராஃப்' ஆகிய படங்களில் பணி புரிந்தேன். அவரிடமிருந்து கற்றவை நிறைய. அதற்காக நன்றி சொல்ல முடியாது. நானும் தொடர்ந்து நல்ல படைப்புகளை உருவாக்குவதுதான் என் குருவுக்குச் செலுத்தும் உண்மையான நன்றியாக இருக்க முடியும். அதற்காக உழைப்பேன்.

**(பேசுவேன்)**

**மேஷம்:** திருமணக் காரியம் கூடி வரும். வீடு, மனை வாங்க உகந்த நேரம். உத்தியோகத்தில் மாற்றம் உண்டாகும். வெளிநாடு செல்லும் சூழ்நிலை உருவாகும். வியாபாரத்தில் நல்ல ஆதாயம் ஏற்படும். மன உளைச்சல் சரியாகும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** தெய்வ அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். வெளியூர் பிரயாணம் வந்து சேரும். தாயின் ஆரோக்கியம் பாதிக்கப்படும். கடன் சுமை தீரும். வழக்கு தாமதம் ஆகும். பொருளாதார தட்டுப்பாடு இருக்காது. குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** சுபநிகழ்ச்சி கை கூடும். உடல் நிலையில் கவனம் செலுத்தவும். வேலைப் பளு அதிகரிக்கும். கணவன், மனைவி இல்லற வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. பணக்கஷ்டம் இருக்காது. சகாக்களால் தொல்லை வரும். வாகனங்களில் செல்லும்போது உஷார். ராகு/கேது வழிபாடு செய்து வர நலம் தரும்.

**கடகம்:** மனக் குழப்பம் நீங்கும். முயற்சிக்கும் காரியம் பலிதமாகும். தடை விலகி திருமணம் கைகூடும். நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். கடன் சுமை குறையும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். வெளியூர் மனிதர்களால் நல்ல தகவல் வந்து சேரும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும். பணம் புழக்கத்தில் இருக்கும். திருமணம் கைகூடும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. வீடு/மனை வாங்க ஏற்ற காலம். சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

ரஜினிக்கு என் கூட ஹீரோவா நடிக்க யோகம் இருக்கா பாருங்க சார்?



**கன்னி:** இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். நண்பர்களை விட்டு விலகிச் செல்ல நேரிடும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். உடல்நிலை முன்னேற்றம் உண்டாகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். பூர்வீக சொத்து பாகப்பிரிவினை ஆகும். எதிர்ப்புகள் அழியும். பணத் தட்டுபாடு இருக்காது. ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். இல்லற வாழ்வு நன்

றாக இருக்கும். வீடு மாற்றம் ஏற்படும். நீண்ட காலக் கடன் தொல்லை தீரும். உத்தியோகத்தில் மாறுதல் உண்டாகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். எதிர்ப்புகள் விலகும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். திருமணம் கூடி வரும். பொருளாதார கஷ்டம் இருக்காது. வாக்கு வன்மை மேலோங்கும். வராத நிலுவைகள் வந்து சேரும். சனி பகவானை வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** பண வரவு ரெடி. கூட்டாளிகளைப் பிரிய நேரிடும். வாக்குவாதம் தவிர்க்கவும். இல்லற வழியில் அனுசரணை தேவை. கடன்சுமை தீரும். வாகனங்களில் செல்லும்போது உஷார். உணவுக் கட்டுப்பாடு அவசியம். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். கல்வியில் அதிக கவனம் செலுத்தவும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** உடல் நிலையில் கவனம் தேவை. பணத் தட்டுப்பாடு அதிகரிக்கும். வழக்கு, வியாபாரம் சற்று தாமதம் ஆகும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வாகனங்களில் செல்லும்போது உஷார். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை தென்படும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** ஏற்றம் மிகுந்த வாரம். பணக் கஷ்டம் இருக்காது. செலவுகள் சுபமான தாக இருக்கும். நீண்ட கால வழக்கு வெற்றி அளிக்கும். சொத்துகள் வாங்க நேரிடும். திருமணம் கைகூடும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** எதிரிகள் தொல்லை விலகும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் உயர்வு ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். கடன் சுமை தீரும். நண்பர்கள் விலகிப் போவார்கள். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும்.

தஞ்சை பரத்வாஜ்

17.8.08 முதல் 23.8.08 வரை

# நடக்குமென்பார்; நடக்கும்!

ஒரு நாள் என்னோட உறவினர் ஒருத்தர் என்கிட்ட இப்படிக் கேட்டார், 'டைரக்டர் சொல்லிக் கொடுக்கற மாதிரி விஜய் நடிப்பாரா? அல்லது அவரே சொந்தமா கிரியேட்டிவா நடிப்பாரா?'

விஜய் நடிக்கற எல்லாப் படத்துலயும் அவர் எப்படி நடிக்கணும்ங்கறதை அந்தந்தப் படத்தோட இயக்குநர்கள்தான் சொல்லிக் கொடுக்கறாங்க. விஜய், அந்தப் படத்துல அவனுக்கு என்ன கேரக்டர், என்ன வசனம் பேசணும்னு தெளிவா டைரக்டர்கிட்ட கேட்டுப்பான். அப்புறம் அவனுக்கே உரித்தான பாணியில வசனத்தைப் பேசி நடிப்பான்.

அதே மாதிரி நடிப்புல ஸ்கோர் பண்ண முடி



ஷோபா சந்திரசேகர்

# விஜய்

• விஜய் வின்னர்ஸ்
பம்பர் பரிசுப் போட்டி கூப்பன்
பக்கம் 48, 49ல்...

• 15 வார தொடர்சங்கிலிப் போட்டி கூப்பன்களையும், பம்பர் பரிசுப் போட்டி கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

யும்ங்கற காட்சிகளுக்கும், ரொம்ப கஷ்டமான காட்சிகளுக்கும் வீட்டுல ஹோம் வொர்க் பண்ணுவான். அந்த மாதிரி காட்சிகள்ல நடிக்கவேண்டி இருந்துச்சுன்னா ஸீன் பேப்பரை வீட்டுக்கு வாங்கிட்டுப் போவான். அந்தக் காட்சிகளை நடிச்சுப் பார்ப்பான். எல்லா காட்சிகளுக்கும் இப்படி இல்ல. முக்கியமான, சில நல்ல ஸீன்களுக்கு மட்டும்தான் ப்ராக்டீஸ்.

'பிரியமுடன்' படத்தோட கிளைமாக்ஸ் ஸீனை ராஜஸ்தான்ல ஷூட் பண்ணினாங்க. ரொம்ப நீளமான ஸீன். அதே சமயம் ரொம்ப முக்கியமான ஸீன். அதனால விஜய், அந்தப் படத்தோட டைரக்டர் வின்சென்ட் செல்வாகிட்ட அந்த ஸீன் பேப்பரைக் கேட்டு வாங்கிக்கிட்டான். ரூமுக்கு வந்தான். ராத்திரி பன்னிரண்டு மணி வரைக்கும் அந்த ஸீன்ல எப்படி நடிக்கணும், எப்படிப் பேசணும்னு ப்ராக்டீஸ் பண்ணிப் பாத்தான்.

அடுத்த நாள் ஷூட்டிங்ல ஒரே ஷாட்ல ஓ.கே. ஆயிடுச்சு. டைரக்டர்கள் சொல்லிக் கொடுத்தாலும் ஒவ்வொரு ஸீனையும் அனுபவிச்சு, அந்தப் பாத்திரத்தோட ஒன்றிப் போய் நடிப்பான் விஜய். ஆனாலும் அவன் டைரக்டர்களோட நடிகன்தான். அவன் சொந்தமா காட்சிகளுக்குச் சில அழகுகளைச் சேர்ப்பானே தவிர, மத்தபடி டைரக்டர்கள் சொல்றபடிதான் நடிப்பான்.

எல்லா நடிகர்களுக்கும் குழந்தைகள் ரசிகர்களா கிடைக்கறது ரொம்பக் கஷ்டம். அந்த பாக்கியம் அவ்வளவு சுலபமா கிடைச்சிடாது. அதுக்குக் கடவுளோட அனுக்கிரகம் வேணும். 'சாப்பிட மாட்டேன்னு அடம்பிடிக்கிற என் குழந்தைக்கு விஜய் பாட்டை டீ.வி.யில போட்டுத்தான் சாப்பாடு ஊட்டறோம்'னு யாராவது சொல்றப்போ, நெகிழ்ந்துபோயிடுவேன்.

விஜய்க்கு குழந்தைகளுக்காகவே ஒரு படம் பண்ணணும்னு ரொம்ப நாளா ஆசை இருக்கு. நானும் சந்தர்ப்பம் கிடைக்கறப்போல்லாம் விஜய்கிட்ட, 'குழந்தைகளுக்காக ஒரு படம் பண்ணு விஜய்'ன்னு சொல்லிக்கிட்டுத்தான் இருக்கேன். விஜய்யோட அந்த ஆசையில பாதி இப்போ அவன் நடிச்சுக்கிட்டு இருக்கற 'வில்லு' படத்துல




# கிரியேட்டிவ் ஆக்டரா?



லம்மா'ன்னுட்டுப் போயிடுவான். அந்த அளவுக்கு அசைவம் அவனுக்குப் பிடிக்கும். அப்படி இருந்த விஜய், இப்போ எப்படி மாறிட்டான்னு நினைக்கும்போதே ஆச்சரியமா இருக்கு.

ஒருத்தர் வாழ்க்கையில் உயரணும்னா எதையாவது ஒண்ணை தியாகம் பண்ணித்தான் ஆகணும் இல்லையா? விஜய் சினிமாவுல நடிக்க ஆரம்பிச்சுட்டான். நடிக்கணும்னு வந்துட்டாலே, ஒரு நடிகன் தன்னோட உடம்பை எப்பவும் ஸ்லிம்மா வைச்சுக்கணும். எந்த நேரத்துலயும் உற்



## விஜய் வின்னர்ஸ் 13

### தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. ஜி.குப்புசாமி, சென்னை - 26
2. எஸ்.ஜெஜலெக்ஷ்மி, லால்குடி
3. எஸ்.வெங்கட்ராமன், திருநெல்வேலி
4. ராம் ஆதிநாராயணன், தஞ்சாவூர்
5. சுஜாதா, சென்னை - 117
6. கஸ்தூரி சோமசுந்தரம், தருமபுரி
7. ஆர்.மதுமித்ரா, ஈரோடு
8. ஜி.திருமலை, சென்னை - 61
9. எஸ்.உதயகணேஷ், மதுரை
10. சிம்மவாஹினி, வடசென்னை - 39

**✱ முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.**

**✱ குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.**

நிறைவேறிடும்னுதான் நினைக்கறேன்.

அந்தப் படத்தை பிரபுதேவா டைரக்ட் பண்றாரு. குழந்தைகள் விஜய்யை ஸ்கிரீன்ல பாத்துட்டு, துள்ளிக் குதிக்கற மாதிரி நிறைய காட்சிகள் இருக்கு. விஜய் ரொம்ப ஸ்ட்ரிக்டான 'நான் வெஜிடேரியன்'னு சொன்னா, ஷூட்டிங் ஸ்பாட்ல அவனைப் பாத்த யாருமே நம்ப மாட்டாங்க. அங்கே அவன் சாப்பிடறதெல்லாம் சைவ உணவு தான்.

உண்மையில் அவன் ஒரு அசைவப் பிரியன். எனக்கு இன்னும் நல்லா ஞாபகம் இருக்கு. காலேஜ் முடிஞ்சு நல்ல பசியோட வீட்டுக்கு வருவான். பையைக் கீழே போட்டுட்டு, டைனிங் டேபிள்கிட்ட போவான். டேபிள்ல இருக்கற உணவுப் பதார்த்தங்களை ஒவ்வொண்ணா திறந்து பார்ப்பான்.

அதுல ஏதாவது ஒண்ணுலயாவது 'நான் வெஜ்' ஐட்டம் இருக்கணும். அப்பத்தான் சாப்பிடுவான். இல்லன்னா, 'பசி இல்

சாகம் ததும்பற முகத்தோட 'பளிச்'சுன்னு இருக்கணும். உடம்பு ஏறவும் கூடாது; இறங்கவும் கூடாது. ஒரே மாதிரியா இருக்கணும். இதெல்லாம் சினிமாவுல எழுதப்படாத விதிகள்.

அதுல சில நியாயங்களும் இருக்கு. உடம்பு எப்பவும் லேசா இருந்தாத்தான் நல்லா டான்ஸ் ஆட முடியும். ஃபைட் பண்ண முடியும். விஜய் நாள் தவறாம காலையில எக்ஸர்சைஸ் பண்ணுவான். முக்கியமா சாப்பாட்டுல ரொம்ப கவனமா இருப்பான். சாப்பாட்டைத் தியாகம் பண்றான்னுகூடச் சொல்லலாம்.

ஷூட்டிங்ல ஃபைட் ஸீன்லயோ, டான்ஸ் ஸீன்லயோ நடிக்க வேண்டி இருந்துச்சுன்னா, அன்னிக்கு மத்தியானம் ரொம்ப ஹெவியா சாப்பிட மாட்டான். சரவண பவன்லருந்து ஒரு மினி மீல்ஸை வாங்கிட்டு வரச்சொல்லி, சாப்பிடுவான்.

நம்ம பிள்ளையால வாயார, வயிறார சாப்பிடறதுக்கு முடியலையேன்னு சமயத்துல எனக்கே கவலையாக்கூட இருக்கும். எல்லாம் அவனோட கேரியருக்காகத் தானேன்னு என்னை நானே சமாதானப் படுத்திக்குவேன்.

நம்ம எல்லாருக்குமே ஏதாவது ஒரு இடம் ரொம்பப் பிடிச்சதா இருக்கும். 'உங்களுக்கு எந்த இடம் ரொம்பப் பிடிக்கும்?'னு உங்களையே நீங்க கேட்டுப் பாருங்க. பதில் கிடைச்சிடும். விஜய்யைப் பொறுத்தவரைக்கும் வெளிநாட்டுல அவனுக்கு ரொம்பப் பிடிச்ச இடம் லண்டன் தான். ஏன்னா, அதுதான் அவன் பொண்ணு எடுத்த ஊரு (!). இந்தியாவுல அவனுக்குப் பிடிச்ச இடம் அவனோட வீடுதான்.

ஷூட்டிங் இல்லாத சமயத்துல விஜய் செய்யற முக்கியமான வேலைகள்ல ஒண்ணு, அடுத்த படத்துக்கான கதைகளைக் கேக்கறது. அவனோட படத்துக்



கான கதையை அவன்தான் கேப்பான். அவன்தான் செலக்ட் பண்ணுவான். கதையை செலக்ட் பண்ணிட்டு, அவங்க அப்பாகிட்ட சொல்லுவான். அவரோட அபிப்ராயத்தைக் கேப்பான். அவ்வளவு தான்.

வித்தியாசமான ஒரு கேரக்டர் பண்ணணும்னுதான் அவன் 'அழகிய தமிழ் மகன்' படத்துல ஒரு எதிர்மறை யான ரோல்ல நடிச்சான். புதுசா எதை யாவது செஞ்சு பாக்கணும்ங்கற ஆசை அவன்கிட்டயும் இருக்கு. எதிர்காலத் துல யாரோட இயக்கத்துல அவன் நடிக்க விரும்பறான்னு எனக்குத் தெரி யல. ஆனா, எனக்கு ஒரு ஆசை இருக்கு. அவன் மணிரத்னம் சார், ஷங்கர் சார் டைரக்‌ஷன்ல நடிக்கணும்ங்கறது என் னோட ஆசை.

விஜய், எதிர்காலத்தைப் பத்திக் கவ லைப்படறதே கிடை யாது. 'அஞ்சு வரு ஷத்துல நாம இப் படி ஆகணும், அப்படி ஆக ணும்'னு அவ னுக்கு எந்தப் பேராசையும் இல்ல. அதைப்பத்தி நான் கேட்டாக்கூட, 'எனக்குன்னு ஓர் இடத்தை ரசிகர்கள் கொடுத்துட்டாங்கம்மா! அதைத் தக்க வைச்சுக்கறதுக்கு நான் உழைக்கணும், கஷ்டப்படணும். அதைச் செஞ்சா போதும்மா'ம்பான்.

இப்படி அமைதியா எந்த எதிர்பார்ப் பும் இல்லாம, எதிர்காலத்தைப் பத்தி சிந்திக்காம உழைக்கறவங்களை, கடவுள் உயர்ந்த நிலைக்குக் கொண்டு போவார்ங் கற நம்பிக்கை எனக்கு இருக்கு. 'தன்னைத் தானே தாழ்த்திக் கொள்பவன் பிறரால் உயர்த் தப்படுவான்'னுதானே பைபிள் சொல்லுது. எனக்கு நம்பிக்கை இருக்கு. விஜய் இன் னும் உசரத்துக்குப் போவான்.

**எழுத்து வடிவம் :**
**பாலு சத்யா**

## ரீடர்ஸ் கார்னர்



**நே**தாஜி ஜப்பான் சென்றிருந்தபோது 'கடவுளான புத்தரை தனக்கு மிகவும் பிடிக்கும்' எனச் சொன்ன ஜப்பானியச் சிறுமியிடம், 'அதே புத்தர் உங்கள் நாட்டின்மீது படையெடுத்து வந்தால் என்ன செய்வாய்?' என வினவினார். உடனே அச்சிறுமி கோபக்குரலில் 'வீட்டுக்கு ஒருவர் கத்தி எடுத்துச் சென்று ஓடஓட விரட்டு வோம்' என்றாள். 'வணங்கும் தெய்வத்தை விடவும் வாழும் தேசம் பெரியது' என்று அந்தப் பிஞ்சு நெஞ்சில் பதிந்துள்ளது. மதம், மொழி, இனம் ஆகியவை உன்னதமானவை. ஆனால் தேச நலன் அதைவிட முக்கியம். எல்லாவற்றை யும் தேசத்துக்காக விட்டுக்கொடுக்கலாம். எதற் காகவும் தேசத்தை விட்டுக்கொடுக்க முடியாது.

**- கல்யாணி பானு**

புடைவைக்கு என்றும் அவுட் ஆஃப் ஃபேஷன் கிடையாது. எந்த வயதினருக்கும், எந்த நிறத்துக்கும், எந்த உடல்வாகுக்கும் பொருந்திவிடும். புடைவைகளிலும்தான் எத்தனை வகை! காஞ்சிப் பட்டு, ஆரணி, தர்மாவரம், பனாரஸ், போச்சம்பள்ளி, படோலா, பாந்தினி, சில்க், க்ரேப், ஜார்ஜெட், குந்தன், ஜர்தோஸி வொர்க் புடைவைகள். தமிழ்நாட்டுப் பெண்களின் கவனத்துக்கு, ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளத்தில் பிரபலமாக இருக்கும் புடைவைகள் சில இதோ...

# அவுட் ஆகாத ஃபாஷன்



❋ ஜாம்தானி புடைவைகள் : ஃபேஷன் கான்ஷியஸ் ஆன பெண்ணா? வேலைக்குப் போகிறீர்களா? வித்தியாசமாகத் தெரியவேண்டும் என விரும்பும் பெண்ணா? அப்படியானால் ஜாம்தானி புடைவைகள் உங்களுக்கேற்றவை! வங்காளம்தான் இதன் பிறப்பிடம். வங்காளப் பெண்களின் வார்ட்ரோபில் டஜன் கணக்கில் ஜாம்தானிகள் இருக்கும்.

இப்புடைவைகள் ப்யூர் காட்டன், சில்க், டஸ்ஸர் என வெவ்வேறு ரகங்களில் வருகின்றன. பாரம்பரியம் மிக்க இந்த ஜாம்தானிகளுக்கு, பெண் ரசிகைகள் கம் பக்தைகள் ஏராளம்!

டாக்காய் ஜாம்தானி : இதில் வேலைப்பாடு பிரமாதம்! மல்டி கலரில், ரிச் பல்லுவுடன் வரும் இப்புடைவை பெண்களின் முதல் சாய்ஸ்! இந்தப் புடைவைகளை நெய்வது சாதாரணமல்ல, சில

**திருமதி இந்திரா காந்தியைப் பார்த்து எண்பதுகளில் தில்லி தொலைக்காட்சி செய்தி வாசிப்பாளர்களும் சம்பல்பூரி புடைவைகளைக் கட்ட ஆரம்பித்தார்கள்.**

புடைவைகள் செய்ய வருடக்கணக்குகூட ஆகுமாம்.

டாக்காய் ஜாம்தானி பார்ட்டி புடைவை - ரிச்சாக இருக்கும். கொஞ்சம் சிம்பிளாக, ஆனால் ஸ்பெஷலாக இருக்க வேண்டுமானால் டாங்காயில், ஷாந்திபூரி, தொனேகாளி... என ஜாம்தானிகளும் உண்டு.

✱ பாலுச்சரி புடைவைகள் : வங்காளத்தில் புழங்கும் மற்றொரு பிரபலமான புடைவை பாலுச்சரி புடைவைகள். அங்கே திருமணம், ரிஸப்ஷன் என்றால் மணப்பெண் பாலுச்சரி புடைவையைத்தான் விரும்பி அணிகிறாள். கண்ணைக் கவரும் கலர்கள், டிஸைன்கள், வேலைப்பாடு மிக்க தலைப்பு என இப் புடைவைகள் கவர்கின்றன. சுமார் பத்தாயிரம் நெசவாளர்கள் பாலுச்சரி நெய்வதற்கே இருக்கிறார்களாம். சில்க், காட்டன் இரண்டிலும் தயாராகும் பாலுச்சரியின் ஹேண்ட்லூம் புடைவைகள் படு கிராண்ட்.

✱ சம்பல்பூரி புடைவைகள் : ஒரிஸ்ஸாவில் தயாராகும் சம்பல்பூரி புடைவைகள் ஃபேஷன் + பாரம்பரியக் கலவையானவை. நல்ல ரசனையுள்ள பெண், சம்பல்பூரி புடைவை கண்டிப்பாக வாங்குவாள் என்கிறது தகவல்! மறைந்த முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி சம்பல்பூரி புடைவைகளை விரும்பி அணிவாராம். அவற்றுக்கான பிராண்ட் அம்பாஸடர் என்றே அவரைச் சொல்லலாம்.

திருமதி இந்திராகாந்தியைப் பார்த்து, எண்பதுகளில் தில்லி தொலைக்காட்சி செய்தி வாசிப்பாளர்களும் சம்பல்பூரி புடைவைகளைக் கட்ட ஆரம்பித்தார்கள். கலர், டிஸைன் பிரமாதமாய் இருக்கும். மீன், சங்கு, பூக்கள்... என புடைவை களில் டிஸைன் போடுகிறார்கள். டை அண்ட் டை (tie and dye) மெத்தடில் தயாராகும் இப்புடைவையில் சாயமே போகாது. சில்க், காட்டன் வகைகளில் கிடைக்கும் சம்பல்பூரி புடைவைகளின் 'இக்கத்' டிசைன்களுக்கு, பெண் விசிறிகள் ஏராளம்.



காஞ்சிபுரம் பட்டுப் புடைவைகளுடன் ஒரிஸ்ஸா, பெங்கால் புடைவைகளையும் வாங்கி, வித்தியாசமாக அணியுங்கள். இப்புடைவைகள் தலைமுறை தலைமுறையாக விரும்பி அணியப்பட்டு, பாட்டி பேத்திக்கு அன்பளிப்பாகக் கொடுப்பதும் உண்டாம்.

புடைவை என்பது பாரம்பரியச் சின்னம். ஒரு பெண் மிக அழகாகத் தெரிவதும் புடைவையில்தான்.

- லதா சேகர்

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



24.08.2008
இதழுடன் இணைப்பு

THE EYE FOUNDATION

# கண் பேசும் வார்த்தைகள்!

கோயம்புத்தூர் 'த ஐ ஃபவுண்டேஷன்'
வழங்கும் மெடிக்கல் கையேடு

✱ டாக்டர்
டி. ராமமூர்த்தி

# கண் பேசும் வார்த்தைகள்!

**கோ**வையின் பரபரப்பான ஆர்.எஸ்.புரம் பகுதியின் திவான் பகதூர் சாலை.

பாரதிய வித்யா பவனை அடுத்து, பிரம்மாண்டமாக அமைந்திருக்கிறது கண் மருத்துவமனை - 'த ஐ ஃபவுண்டேஷன்'; ஆறு மாடிக் கட்டடம்.

கீழ்த்தளத்தில், மெடிக்கல் டைரக்டர் டாக்டர் டி. ராமமூர்த்தியின் அறையில் காத்திருக்கிறோம்.

வந்துசெல்பவர்களை நோயாளிகள் என்று சொல்ல முடியாது! **'கண்ணுக்குள் நூறு நிலவா... இது ஒரு கனவா?'** என்று பாடும் உற்சாகத்தில் இருக்கிறார்கள். முதலில் அம்புஜம்மாளின் அனுபவத்தைக் கேட்கிறோம்...

ஒரு நாள், காலை தினசரியைப் படித்துக்கொண்டிருந்தபோது, திடீரென்று எனக்கு ஓர் எழுத்துக்கூட தெரியவில்லை!

''என்னங்க, எழுத்தே தெரியலே... பேப்பர் படிக்க முடியலீங்க!'' என்றேன், கணவரிடம்.

''கண்ணாடியை மாற்றிப் போட்டுப் படி... தெரியும்!'' என்றார். அவர் ஒரு டாக்டர்.

எனக்குச் சர்க்கரை வியாதி இருப்பதால், ஹெமரேஜா, ரெடினோபதியா அல்லது கண் நரம்பு ஏதாவது பாதித்துவிட்டதா என்று பயம் பிடித்துக்கொண்டது.

ஏதோ சீரியஸ் என்று புரிந்துகொண்ட கணவர், தம் நீண்ட நாள் நண்பரும், கோவை 'த ஐ ஃபவுண்டேஷன்' தலைமை மருத்துவருமான டாக்டர் ராமமூர்த்தியை தொடர்புகொண்டார்.

மாலை 4 மணிக்கு, மருத்துவமனைக்குள் விரைந்தோம். பரபரவென்று இயங்கிக்கொண்டிருந்தது ரிசப்ஷன் பகுதி. பெயர், முகவரி கேட்டு, கார்டு தயார் செய்து, ''உட்காருங்கள்... கூப்பிடுகிறோம்!'' என்றார்கள்.

மாலை ஐந்து மணி. என் பெயர் சொல்லி அழைப்பது கேட்டது. கணவருடன் ரிஃப்ராக்ஷன் அறைக்குச் சென்றோம்.

பரிசோதனையில், எனக்குச் சுத்தமாக ஓர் எழுத்து கூடத் தெரியவில்லை!

6/60 என்று எழுதிக்கொடுத்து முதல்

# கண்டுகொண்டேன்...



மாடிக்குப் போகச் சொன்னார்கள். போகு முன் கண்களுக்குச் சொட்டு மருந்து போட்டு, 'பாப்பா விரிவடைவதைப் பார்த்தபின் மீண்டும் பரிசோதிக்க வேண்டும்' என்றார்கள்.

முதல் மாடியில் ஒரு டாக்டர் ஸ்லிட் லேம்ப் மைக்ரோஸ்கோப் பரிசோதனை செய்தார். ஃபண்டஸ், ரெடினா, சேம்பர் எல்லாம் நன்றாக இருப்பதாகவும், இரண்டு கண்களின் லென்சின் பின்புற உறையில், புரை விழுந்து பார்வை மங்கியிருப்பதாகவும், சிறிய அறுவைச் சிகிச்சை மூலம் சரிசெய்துவிடலாம்' என்றும் கூறினார்.

மூன்றாவது மாடிக்குப் போனோம். அங்கே அல்ட்ரா சவுண்ட் பரிசோதனை. பிறகு இ.ஸி.ஜி.யும் இரத்தப் பரிசோதனையும் செய்தார்கள். இரத்தத்தில் சர்க்கரை அதிகமாக இருப்பதை முடிவு காட்டியது.

எல்லாப் பரிசோதனைகளும் முடிந்த பிறகு, கீழே டாக்டர் ராமமூர்த்தியின் அறைக்கு அழைத்துக்கொண்டு போனார்கள்.

திரும்பவும் சில பரிசோதனைகள் செய்தார். ''இரண்டு கண்களிலும் புரை விழுந்திருக்கிறது. **ஃபேக்கோ எமல் சிஃபிகேஷன்** முறையில் சரி செய்துவிடலாம். இந்தச் சிக்னேச்சர் ஃபேகோ எமல் சிஃபிகேஷன் கருவியை இங்கேதான் முதன் முதலில் அறிமுகப்படுத்தினார்கள். இது மைக்ரோ பிரர்சசர் கன்ட்ரோல் சிஸ்டத்தில் இயங்குகிறது. கண்ணில் ஏற்படும் மாறுதல்களை உடனடியாகக் கருவிக்கு எடுத்துச் சென்று, எல்லா அறிகுறிகளும் மிகச் சரியாக இருக்கின்ற அளவுக்கு, அதுவாகவே

# கண்டுகொண்டேன்...



துல்லியமாகக் கண்காணிக்கிறது. அதற்கு முன்னால், 'உங்கள் சர்க்கரை அளவைக் குறைத்துக்கொள்ளுங்கள். ஆபரேஷனுக்கு காலை 9 மணிக்கு வந்தால், மாலை 5 மணிக்கு வீட்டுக்குப் போய்விடலாம். மறுநாள் ஒரே ஒரு செக் அப். அவ்வளவுதான்' என்றார் டாக்டர் ராமமூர்த்தி.

ஒரு வாரம் எங்கள் டாக்டரின் ஆலோசனைப்படி சிகிச்சை எடுத்து, சர்க்கரை அளவைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட்டு, ஆபரேஷனுக்குத் தயாரானோம்.

''கண்ணில் புரை முற்றிச் சுத்தமாகப் பார்வை மங்கியபின்தானே முன்பெல்லாம் ஆபரேஷன் செய்வார்கள்? எனக்கோ

## அம்புஜம்மாளின் அனுபவம்

எழுத்து மட்டும்தானே தெரியவில்லை?'' ஏன் எனக்கு ஆபரேஷன்? என்றேன் கணவரிடம்..

''ஒண்ணும் பயப்படாதே. அங்கே போனால் எல்லாம் சரியாயிடும்!'' என்றார்.

**கா**லை 9.30 மணி. மருத்துவமனையில் நான்காவது மாடியில் ஓர் அறை ஒதுக்கி, அதில் காத்திருக்கச் சொன்னார்கள்.

பரிசோதனைக்கு வரச்சொல்லி அழைத்ததும் போனோம். எனக்கு வைக்கப்பட வேண்டிய இன்ட்ரா ஆக்யுலர் லென்ஸ் பவரை, மிகத் துல்லியமாகப் பரிசோதித்தார்கள். இந்த லென்ஸ், அக்ரிலிக் எனப்படும் செயற்கை ப்ளாஸ்ட்டிக்கால் செய்யப்படுவது.

* வெண்திரையில் விரியும் ஆபரேஷன்...



தியேட்டர் வெளியே காத்திருப்பவர்கள், அறுவைச் சிகிச்சையை டீவி திரையில் பார்க்கலாம்.

டாபிகல் அனஸ்தீசியா எனப்படும் வகையில் மரமரப்பு வரச்செய்து, துளி கூட வலி இல்லாமல் அறுவைச் சிகிச்சை செய்தது இன்ப அதிர்ச்சி.

2.8 மி. மீ அளவுக்குத் துவாரம் செய்து, அல்ட்ரா சவுண்ட் மூலம் புரை விழுந்த லென்ஸைக் கரைத்து, ஃபேகோப்ரோப் மூலம் எடுத்துவிட்டு, ரிங்கர் லாக்டேட் திரவத்தை ஊற்றி, சுத்தம் செய்கிறார்கள். 13 மி.மீ. அளவுள்ள செயற்கை லென்ஸை, ஒரு கார்ட் ரிட்ஜில் வைத்து 2.8 மி.மீ. துவாரத்தில் செலுத்தி, லென்ஸை நிலைநிறுத்தி, பிறகு சொட்டுமருந்து விட்டு, பிளாஸ்டர் போட்டுக் கட்டிவிட்டு, அறைக்கு அனுப்பி விட்டார்கள்... அவ்வளவுதான்!

இத்தனை பணிகளும் பத்தே நிமிடத்துக்குள் முடிந்துவிடுகிறது. உள்ளூர்வாசிகள் அப்போதே வீட்டுக்குப் போய்விடலாம்; வெளியூரிலிருந்து வருபவர்கள் அறையில் தங்கிக்கொள்ளலாம்.

**அ**டுத்த நாள் காலை, கண்கட்டைப்

## "ஆபரேஷன் தியேட்டருக்கு வெளியே இருப்பவர்கள் அறுவைச் சிகிச்சையை டீ.வி.யில் பார்க்கலாம்!"

இதில் ஒரு வகை 'ரிஜிட்'; இன்னொரு வகை மடிக்கக்கூடியது - ஃபோல்டபிள். இதில் மோனோ ஃபோகல், மல்ட்டி அதாவது, ஃபோகல் என்று இரண்டு வகைகள். மோனோ ஃபோகல் தூரப் பார்வைக்கும், மல்ட்டிஃபோகல் தூரப் பார்வை மற்றும் கிட்டப் பார்வை என இரண்டுக்கும் பயன்படும்.

எல்லாம் கண் மருத்துவச் சிகிச்சையின் நவீன முன்னேற்றங்கள், கண்ணாடியே பிறகு போடத் தேவை இல்லாத அளவுக்கு, பார்வையின் தரம் கூடிவிடும். ஆபரேஷன்

பிரித்தபோது எனக்குத் தாங்கமுடியாத மகிழ்ச்சி. ஆமாம்; இருபது வயசுக்காரருக்கு இருப்பது மாதிரி துல்லியமான பார்வை!

இன்னும் 15 நாட்களுக்குச் சொட்டு மருந்து விட்டுக்கொண்டு வந்தால், கண் சரியாகிவிடும். கண்ணாடி போட்டுக் கொண்டு நான் டீ.வி பார்க்கலாம்.

''என்ன, ஆஸ்பத்திரிக்குப் போய்ட்டு வந்த மாதிரியா இருக்கு?'' என்று கேட்டார் கணவர்.

''இல்லல்லே... ஏதோ பிக்னிக் போய்ட்டு வந்த மாதிரிதான் இருக்கு!'' ○



# கண்ணுக்குள் கண்ணாடித் துகள்?

கண்ணாடி போட்டுக்கொள்வதற்கு ஒரு குட்பை சொல்ல வேண்டுமென்று, ஐ ஃபவுண்டேஷனுக்கு வந்த மாலதிக்குப் பார்வை மைனஸ் 16.

பரிசோதனைகளின் முடிவில், அவருக்கு ரெட்டினா நகர்ந்துபோயிருப்பது தெரிந்தது. இதை ரெடினல் டிடாச்மென்ட் என்பார்கள்.

லாசிக் சிகிச்சை செய்துகொண்டு, கண்ணாடியைக் கழற்றிவிடலாம் என்று வந்தவர், ரெடினா நகர்ந்துவிட்ட பிரச்னைக்கு முதலில் அறுவைச் சிகிச்சை செய்யவேண்டி வந்தது!

அவரது நல்ல காலம். ரெடினா கோளாறைச் சீராக்கிக்கொள்ள முடிந்தது. இல்லையென்றால், பார்வையே முழுவதும் போயிருந்திருக்கும்!

ராமகிருஷ்ணன், தனியார் நிறுவனம் ஒன்றில் அக்கவுன்டன்ட் ஆக வேலை பார்க்கிறவர். கண்ணில் எப்படியோ அடிபட்டு, கண்ணாடித் துகள்கள் உள்ளே போய்விட்டன.

தமக்குத் தெரிந்த கண் மருத்துவரிடம் ஓடினார். அவர் பரிசோதித்துப் பார்த்துவிட்டு, 'ஒண்ணும் பண்ணமுடியாது. ஐ ஆம் சாரி!' என்று கையை விரித்துவிட்டார்.

இரவு மணி 9 இருக்கும்.

வேறு ஒருவரின் உதவியோடு 'ஐ ஃபவுண்டேஷ'னுக்கு வந்தார். அவர் வந்தபோது, கிட்டத்தட்ட பார்வையே இருக்கவில்லை.



* ஹரி நாராயண் பிரசாத்

அவருக்குச் சிகிச்சை அளித்த டாக்டர் ஹரி நாராயண் பிரசாத் சொல்கிறார் :

''மும்பையிலிருந்த டாக்டர் ராமமூர்த்தி, அங்கிருந்தபடியே ஐ ஃபவுண்டேஷனின் ஆபரேஷன் தியேட்டரை பயன்படுத்த எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். சிகிச்சை முடிக்கும்போது மணி இரவு பதினொன்றரை. ராமகிருஷ்ணனுக்குப் பழையபடி பார்வை கிடைத்துவிட்டது என்று உறுதியானதும்தான் நிம்மதியுடன் படுக்கப்போனேன்!'' என்றவர், மேலும் விளக்கினார் :



* சிகிச்சையில் ராமகிருஷ்ணன்

**ரெடினல் அடாச்மென்ட் :**

விழித்திரை விலகிப்போகும் இந்தக் குறைபாட்டுக்கு, அறுவை சிகிச்சை ஒன்றுதான் தீர்வு.

இன்னொரு வகையும் இதில் உண்டு. இது வயது காரணமாக வருவது. அதாவது Age Related Macula Disease (ARMD). இது மேக்குலாவில் உள்ள செல்கள் வளர்ச்சி அடையாமல் உயிரிழந்து போகிறபோது உண்டாகிறது. சிலருக்கு அபூர்வமாக இளமையிலேயே இந்நோய் வந்தாலும், 50 வயதுக்கு மேல்தான் தாக்கும். குறிப்பாக 60 - 70 வயதுகளில் மேக்குலா செல்கள் முழு வளர்ச்சி அடையும் முன்பே உயிரிழப்பதும், புது இரத்தக் குழாய்கள் வழியே இரத்தமோ திரவமோ கசிவதும் சற்று சீரியஸான பிரச்னைகள்தான். இது பார்வையையேகூடப் போக்கிவிடும். ஃப்ளூரசின் ஆஞ்சியோகிராஃபி லேசர், ஃபோட்டோ கோயாகுலேஷன் எல்லாம் செய்த பிறகும் கூட, இந்த நோயின் வளர்ச்சி குறையாமல் போய்விடக்கூடும். ஃபோட்டோ கோயாகுலேஷன் மூலம், விழித்திரையில் உருவாகும் புதிய இரத்தக் குழாய்களை அழிக்க அல்லது செயல் இழக்கச் செய்யலாம்.

**மேக்குலா ஹோல் :**

ரெடினாவில், மேக்குலாதான், நம் பார்வைக்கு உதவுகிறது. அதில் துவாரம் ஏற்பட்டுவிட்டால் பெரிய பிரச்னை. இந்தத் துவாரத்தை அடைப்பதுதான் சர்ஜரி மூலம் செய்யப்படுகிறது. ரெடினாவில், ரெடினல் பிக்மென்ட் எபிதீலியம் சேர்ந்திருக்கிறது. அதிலிருந்து ரெடினா கழன்று நகர்ந்துவிடும்போது, பார்வை போகிறது. குறைந்தபட்ச பார்வை இருப்பவர்களுக்கு 'மேக்குலா ஹோல்' வர வாய்ப்பு இருக்கிறது. அதனால்தான் லேசிக் சிகிச்சைக்கு வருகிறவர்களை இந்தப் பரிசோதனையும்



செய்துபார்த்து விடுகிறோம்.

- வயதானால் சிலர் கறுப்புப் புள்ளி சுற்றுகிற மாதிரி தெரிகிறது என்பார்கள். இதை 'போஸ்ட்டீரியர் விட்ரியஸ் டிடாச்மென்ட்' என்பார்கள். லேசர் முறை அல்லது அறுவைச் சிகிச்சைதான் வழி. ஆனால், ரெடினா நகர்ந்துவிட்டால், லேசர் உதவாது. அறுவைச் சிகிச்சை ஒன்றுதான் வழி.
- எதுவுமே பார்க்கமுடியாத நிலை என்கிறபோது, ஆம்புலேட்டரி விஷன்

என்ற அளவுக்கு, அதாவது தன் மட்டில் ஓரளவுக்கு யாரையும் எதிர்பாராத வகையில், பார்வை கொடுக்கிறோம்.



### டயபடிக் ரெடினோபதி

விழித்திரையில் உள்ள சிறு இரத்தக் குழாய்கள் பாதிப்புக்கு உள்ளாவது தான் டயபடிக் ரெடினோபதி. இரத்தக் குழாய்களின் உட்புறச் சுவர்கள் பல மிழந்து, சிறுசிறு பைகளாகத் தெரியும். இந்த இரத்தக் குழாய்கள் பலம் இழப்பதால், அதன் சுவர்கள் வழியே திரவம் வெளியேறிச் சுற்றுப்புறத்தை வீக்கம் அடையச் செய்கிறது. இதனால் பார்வை மங்கலாகிறது. காரணம், விழித் திரையின் மையப் பகுதியான மேக்குலாவில் இந்த மாற்றங்கள் உண்டாகின்றன. இரத்தக் குழாய்கள் வெடித்து, கண்ணுக்குள் இரத்தக் கசிவு ஏற்பட்டு, பார்வை முற்றிலும் இழக்க நேரிடும். சில வேளைகளில் திரும்பத் திரும்ப இரத்த ஒழுக்கு ஏற்பட்டு, விழித்திரை சுருக்கி இழுக்கப்பட்டு, அது தனித்து வரவும் வாய்ப்பிருக்கிறது.



எல்லா நீரிழிவு நோயாளிகளுக்கும் விழித்திரை நோய் இருக்க வேண்டும் என்பதில்லை. இரத்தக்கசிவு ஏற்பட்டு, பார்வை பாதிக்கப்படும் வரை, நோயாளிக்கு, இந்தப் பிரச்னை தனக்கு இருப்பதே தெரியாது. அதனால்தான் அவ்வப்போது பரிசோதனை செய்து கொள்வது அவசியம். ஏனென்றால், டயபடிக் ரெடி னோபதி பாதிப்பு ஏற்பட்டால், இழந்த பார்வை இழந்ததுதான். ஆகவே, சர்க்கரை நோய் உள்ளவர்கள் ஆறு மாதங்களுக்கு ஒருமுறை கண் பரிசோதனை செய்துகொள்ள வேண்டும்.

# யார் கண்தானம் செய்யக் கூடாது?



* டாக்டர் ஷிரீஷ் குமார்

"மூணு - நாலு வருஷத்துக்கு முன் பாகிஸ்தானிலிருந்து முகமது அஜீஸ் என்ற பையன் வந்தான். சுத்தமாகப் பார்வையே இருக்கவில்லை. கார்னியல் டிரான்ஸ்ப்ளான்ட் பண்ணி, பார்வை கொடுத்து ஊருக்கு அனுப்பினோம். பாகிஸ்தானில் கார்னியல் டிரான்ஸ்பிளான்ட் பண்றதில்லே. ஏன்னா அங்கே கார்னியா டொனேஷன் கிடைக்கறதில்லே!'' என்கிறார் டாக்டர் ஷிரீஷ் குமார்.

''இங்கே பரவாயில்லை. நாலஞ்சு ஜோடி கார்னியா கிடைக்கிறது. ஆனாலும் கண்தானம் பத்தி இன்னும் நிறைய விழிப்புணர்வு மக்கள்கிட்ட வரணும்'' என்ற டாக்டர், மேலும் நம் சந்தேகங்களுக்குப் பதிலளித்தார்.

***கண்தானம் பண்ணறேன்னு பாரம் பூர்த்திசெய்துகொடுத்துட்டா போதுமா? வேளை வர்றபோது, கண்களை எடுக்க உறவுக்காரங்க சம்மதிக்கணும் இல்லையா... அதுக்கு என்ன செய்வீர்கள்?***

''அம்மா - அப்பாவோ, தம்பி - தங்கையோ யாராவது அப்ஜெக்ட் பண்ணினா விழிகளை எடுக்க முடியாது. கண்தானம் பண்றேன்னு எழுதிக் கொடுத்திருக்காரேன்னு, அவங்களை நிர்ப்பந்தப்படுத்த முடியாது. எமோஷனல் அட்டாச்மெண்ட்டுக்கு நாங்க மதிப்புக் கொடுக்கணும்.

ஒரு லட்சம் கார்னியா இப்போது நமக்குத் தேவைப்படுகிறது. ஆனால், இதில் கால் பகுதிகூட நமக்குக் கிடைக்கவில்லை என்பது வருத்தம் தரும் உண்மை.

சர்க்கரை நோயாளி (டயபடிக்), ஹைப்பர் டென்ஷன் நோயாளி, கண்ணில் அறுவைச் சிகிச்சை செய்து கொண்டவர்கள்... என யாரும் கண் தானம் செய்யலாம்.

***யார் கண் தானம் செய்யக்கூடாது?***

''இன்ஃபெக்டிவ் ஹெபடைடிஸ் எனப்படும் ஜான்டிஸ் நோய் வந்தவர்கள்; எய்ட்ஸ் பாதிப்புக்கு உள்ளானவர்கள்; கான்சர் நோய் தாக்கிக் கடைசி கட்டத்தில் இருப்பவர்கள்; காரணம் தெரியாமல் மரணம் அடைந்தவர்கள். இவர்களின் கண்களை டிரான்ஸ்ப்ளான்ட்டுக்கு ஏற்கக் கூடாது.

சமீபத்தில் ஒரு சம்பவம்.

என்பது வயதுப் பெரியவரை அவர் பெண் அழைத்து வந்தார். அவருக்கு ஒரு கண்ணில் அடிபட்டுப் பார்வை போய்விட்டது. இன்னொரு கண்ணில் கொஞ்சம் பார்வை இருந்தது. கடைசிவரை கிழவரின் மனைவிதான் அவரைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளும் இறந்துபோன பிறகு கிழவர் தவித்துப் போய்விட்டார்.

கிழவர் என்னிடம் சொன்ன வார்த்தை என் மனதில் அப்படியே இருக்கிறது. 'அவள் என் கண்களாக இருந்தாள்!' என்றார். மனைவி இறந்தது அவருக்குப் பெரிய இடியாக இருந்திருக்கிறது. எனவே வேறு வழியில்லாமல் அவருக்கு கார்னியல் டிரான்ஸ்பிளாண்ட் செய்தோம். இப்போது ரொம்ப மகிழ்ச்சியாக இருக்கிறார். தன் சொந்தக் காலில், யாருடைய தயவும் இல்லாமல் இருப்பது அவருக்கு சந்தோஷமாக இருக்கிறதாம்!''

***சிறுநீரகம், இதயம் மாற்று அறுவைச் சிகிச்சை மாதிரிதானே இதுவும்?***

''உண்மைதான். ஆனால், கார்னியா டிரான்ஸ் ப்ளான்ட்டில் சக்சஸ் ரேட் அதிகம். முழு திக்ன ஸோட கருவிழியை மாற்றிப் பொருத்தினால், ஏற்க முடியாமல் இருக்கும். விழிக்கு வெளியே இருக்கிற லேயரை **'லாமெல்லர் கெரடோபிளாஸ்ட்டி'** செய்து பயன்படுத்தினால் பார்வை இன்னும் நன்றாக இருக்கும்.''







✱ முகமது அஜீனுடன்...

**டா**க்டர் ஷிரீஷ் குமார் குறிப்பிட்ட இன்னொரு வகைக் குறைபாடு வறண்ட கண்கள் - (ட்ரை ஐ). இது வயதாவதன் காரணமாக வருவதோடு, பெண்கள் விஷயத்தில் அவர்களுடைய ஹார்மோன்களின் மாற்றம் காரணமாகவும் ஏற்படுவதுண்டு. சிலருக்குக் கண்களில் நீர் உற்பத்தியே குறைவாக இருப்பதுண்டு.

சிலருக்கோ நீர்ப்பை மூலமாக நீர், மூக்கு வழியாகத் தொண்டைக்குப் போய் வீணாகிவிடுகிறது. அதனால் இருக்கிற நீரை வெளியே வராதபடி 'ப்ளக்' போட்டுச் சிகிச்சை அளிக்கிறோம். இதனால், இருக்கிற தண்ணீர் கண்களுக்குக் கிடைக்கும்.

இன்னும் சிலர், கண்ணுக்கு வெளியே, கருவிழியைத் தடுக்கிற மாதிரி சதை வளர்ந்து அவதிப்படுவார்கள். இதை 'டெரிஜியம்' என்று மருத்துவர்கள் கூறுவார்கள்.

'இதை கஞ்சக்டிவல் கிராஃப்டிங் டிரான்ஸ்ப்ளன்டேஷன், முறையில் ஆபரேஷன் செய்து எடுத்துவிடுவோம்.'

**மறுபடி அது வளராதா?**

''சதை திரும்ப வளரும் வாய்ப்பு மிகக் குறைவு!''

அறிகுறிகள் : கண் உறுத்தல், அரிப்பு (இர்ரிடேஷன்) இருக்கும். தண்ணீர் கசிந்து கொண்டிருக்கும்; கண் சிவப்பாகிவிடும். வெளிச்சத்தைக் கண்டால் கண் கூசும்.

# கண் பேசும் வார்த்தைகள்

**சுந்தரராஜன், கும்பகோணம்:**

நேத்து காடராக்ட் ஆபரேஷன் ஆச்சு. இன்னிக்கு பிளாஸ்திரி எடுத்துட்டார் டாக்டர். ஒரு பிரச்னையும் இல்லே. வெரி குட் சர்வீஸ். எனக்கு ரொம்ப மகிழ்ச்சி! டாக்டர் ராமமூர்த்தியைக் கைகுலுக்கிப் பாராட்டும்போது, சற்று நெகிழ்ந்துப்போய், "சலிப்பில்லாமல் செய்கிறீர்களே! ரியல் சர்விஸ் டு த ஹ்யுமானிட்டி!" என்று மனமார வாழ்த்தினேன்.



**எம். நித்யா (எம்.எஸ்ஸி., பயோடெக் மாணவி):**

எனக்கு மைனஸ் 4.5 கிட்டப் பார்வைக் கோளாறு இருந்துச்சு.

கண்ணாடி இல்லாம என்னால எதுவுமே பண்ண முடியாது.

டாக்டர் ராமமூர்த்தி, நேத்து சர்ஜரி பண்ணார். இன்னைக்கு நான் பிரச்னையே இல்லாம பிரமாதமா பார்க்கறேன்!

**சரவணகுமார், சென்னை, டி.சி.எஸ். நிறுவனத்தில் பணி:**

ஒரு கண் மைனஸ் 4.5.; இன்னொரு கண் -4. பதினொரு வருடங்களாகக் கண்ணாடி போட்டுக்கிட்டு வர்றேன்.

நான் ஸ்விம்மிங் போகிறவன். கிளாசைக் கழட்டினா எனக்குப் பிரச்னை. ஆனா, கண்ணாடி யோட எப்படி நீச்சல் பண்றது? கூடவே ஃபோட்டோ கிராஃபியிலயும் இன்ட்ரஸ்ட் உண்டு. சில சமயம் ஃபோகஸ் சரியாவே பண்ணி இருக்க மாட்டேன். படம் வேஸ்ட் ஆயிடும்! இங்க வந்து சிகிச்சை எடுத்துக்கிட்டேன். இப்போ பிரமாதமா இருக்கு. ஒரு கண்ல சிகிச்சை முடிஞ்ச உடனேயே வித்தியாசம் நல்லாத் தெரிஞ்சுது!



இப்ப கண்ணாடியே போட்டுக்கொள்ள வேண்டாம் என்பது எனக்குப் பெரிய நிம்மதி.



**டாக்டர் சங்கர், மருத்துவர், திருப்பூர்:**

இன்ட்ராலேஸ் முறைலதான் எனக்குச் சிகிச்சை தந்தார் டாக்டர். ஐ ஆம் பெர்ஃபெக்ட்லி ஆல் ரைட்! இது நிரந்தரமான தீர்வு! இப்போ நான் ரொம்ப ஹேப்பி!

அருண் - பெங்களூர் :

எனக்கு மைனஸ் 1.5 கிட்டப்பார்வை இருந்தது. பதினொரு வருஷமா கண்ணாடி போட்டுட்டிருக்கேன். ஒவ்வொரு வருஷமும் ரெண்டாயிரம் மூணாயிரம் ரூபா கண்ணாடி மாத்தறதுக்கே செலவாயிடும். இந்தக் கண்ணாடியிலருந்து விடுபடறதுக்கு வழியே இல்லையான்னு தவிச்சுக் கிட்டிருந்தேன். தாங்க்ஸ் டு டாக்டர் ராமமூர்த்தி ஆஃப் ஐ ஃபவுண்டேஷன், என் பிரச்னைக்கு ஒரு விடிவு கிடைச்சுடுச்சு!



ஸ்ரீகாந்த், சாஃப்ட்வேர் என்ஜினியர், லண்டன் :

மைனஸ் 5.5 கிட்டப்பார்வைக் குறைபாடு காரணமா பதினான்கு வருடங்களாகக் காண்டாக்ட் லென்ஸ் அணிந்து வர்றேன்.

காண்டாக்ட் லென்சைக் கழட்டிப் போட்டுவிடணும்னும் ரொம்ப சீரியசா இருந்தேன். கோயமுத்தூர் வந்ததும், 'ஐ ஃபவுண்டேஷ'னில் நேற்று, புத்தம்புதிய 'இன்ட்ராலேஸ்' முறையில் லேசர் சிகிச்சை எடுத்துக்கிட்டேன். இருபதே நிமிஷம்தான். இரண்டு கண்களையும் ஒரே நாளில் அடுத்தடுத்து ஆபரேட் பண்ணிங்க. கண்கள்ல இர்ரிடேஷன் இல்லே; நீர் வரலே. இட் ஈஸ் ரியலி அன் எந்த்ராலிங் எக்ஸ்பீரியன்ஸ்! டாக்டர் ராமமூர்த்திக்கும் அவரோட டீமுக்கும் மெனி தாங்க்ஸ்!

நான் யு.கே. போனதும் 'த ஐ பவுண்டேஷ'னைப் பற்றி ஒரு பிரசாரமே பண்ணிடலாம்னு இருக்கேன்!



# சலிப்பில்லாத சர்வீஸ்!

ப்யூலா (வேலூர் சி.எம்.சி. மருத்துவக் கல்லூரி மாணவி), கூடைப்பந்து அணி தலைவி :

கிட்டப்பார்வையினால் நான் கண்ணாடி அணிஞ்சுக்கிட்டிருந்தேன். ஆனால், இந்தக் கண்ணாடியை எப்படியாவது தூக்கிப் போட்டுடணும்னு ரொம்ப நாள் ஆசை. பவர் ஒரே மாதிரியா கூடாம, குறையாம ஒரு வருஷமா இருந்தது வசதியாப் போச்சு. 'இன்ட் ராலேஸ்' புது சிகிச்சை இங்க பண்ணிக்கிட்டேன். ஐ ஆம் ஸோ ஹேப்பி!

அதென்ன இன்ட்ராலேஸ்? அடுத்த பக்கம் பார்க்க...

**டாக்டர் டி.ராமமூர்த்தி சொல்கிறார்**

# இன்ட்ராலேஸ் என்னும்...

டியர் கல்கி ரீடர்ஸ்...

மிகச் சுருக்கமாகச் சொல்ல வேண்டு மானால், முழுப் பாதுகாப்பு; மிகச் சிறப்பான கண் பார்வை; இவற்றோடு அதி விரைவான பலன், இவற்றுடன்கூடிய மிக நுண்ணிய சிகிச்சை முறைதான் இன்ட்ராலேஸ்.

மயோபியா (கிட்டப்பார்வை), ஹைபரோபியா (தூரப் பார்வை), அஸ்டிக்மாட்டிஸம் (கோள வடிவக் கருவிழி) ஆகிய பார்வைக் குறைபாடுகளைப் போக்கிக் கொள்ள **லாசிக் சையாப் டிக்ஸ்** முறை சிகிச்சைகள் தற்போது உள்ளன.

எங்கள் ஐ ஃபவுண்டேஷனில் லாசிக் கண் சிகிச்சை முறை 1997ஆம் ஆண்டிலிருந்து செய்யப்பட்டு வருகிறது. பதினோரு ஆண்டுகளில், இருபது ஆயிரத்துக்கும் மேற்பட்ட லாசிக் - சையாப் டிக்ஸ் சிகிச்சைகள் இங்கே நடந்துள்ளன. முதலில் ஹான்சடோமுடன் இணைக்கப்பட்ட கைரோன் லாசிக் கருவியை, இந்தியாவில் முதன்முதலாக அறிமுகப் படுத்தினோம். பிறகு, பார்வையின் தரத்தை மேலும் மேம்படுத்த, 2002ல் லாசிக் மெஷினுடன் இணைக்கப்பட்ட, முற்றிலும் நவீனமான சையாப்டிக்ஸ் கருவியைக் கொண்டு வந்தோம். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, ஆராய்ச்சிகளின் பயனாக, அற்புதமான நவீன வகைக் கருவி Z-100 கண் மருத்துவத் துறையில் அறிமுகப்படுத்தப்பட்ட உடனே, இங்கே கொண்டு வந்து விட்டோம். இவை எல்லாமே பார்வையின் தரத்தை உயர்த்தத்தான்!

லாசிக் முறையில் மைனஸ் 2 முதல் மைனஸ் 20 வரையும், கிட்டப் பார்வையில் +1 முதல் +8 வரையும், அஸ்டிக்மாட்டிசம் கோளாறில் மைனஸ் 8 முதல் +8 வரை சிலிண்டரிகல் பவரையும் முழுமையாகச் சரிசெய்து விடலாம்.

மிக நவீன கருவியான சையாப்டிக்ஸ் மூலம், கண்களில் உள்ள நுணுக்கமான குறைபாடுகளைக்கூடத் துல்லியமாக அறிந்து நீக்கவிடலாம்.

நம் சாதாரணக் கண்பார்வைத் திறனை



* இன்ட்ராலேஸ் சிகிச்சை

6/6 என்பார்கள். கண்களில் உள்ள குறைபாடுகளை 'ஆபரேஷன்' என்பார்கள். இந்தக் குறைபாடுகளை 'ஆர்ப்ஸ்கேன் டோபோ கிராஃபி' மூலம் நீக்கிவிடலாம். பிறகு சையாப்டிக்ஸ் செய்தபின் மிகக் கூரிய பார்வை பெறமுடியும். அதோடு, 'சூப்பர் விஷன்' என்று சொல்லும் அளவுக்குக் 'கழுகுப் பார்வை' கிடைத்துவிடும்.



✱ டாக்டர் டி. ராமமூர்த்தி

# ...வரப்பிரசாதம்!

**லா**சிக்கில் முதலில் ஒரு சொட்டு மருந்து மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. கருவிழியின் அமைப்பை லேசரால் நுணுக்கமாக, மிகச் சரியான அளவுக்கு மாற்றுகிறார்கள்.

லாசிக் சிகிச்சை பாதுகாப்பானது மட்டுமல்ல; நிரந்தரமானது. சிகிச்சைக்குப் பத்து நிமிடங்கள் போதும். இரண்டு கண்களுக்கும் அடுத்தடுத்து சிகிச்சை பெறலாம். ஊசிகள், மாத்திரைகள் அவசியமில்லை என்பதோடு, நோயாளி மருத்துவமனையில் தங்கவேண்டாம்.

**இ**ந்தச் சிகிச்சை பெற, குறைந்தது 18 வயது ஆகியிருக்க வேண்டும். சிகிச்சைக்கு முன் கண்ணாடி பவர், ஒரு வருடத்துக்கு மாறாமல் இருந்திக்க வேண்டும். காண்டாக்ட் லென்ஸ் அணிபவராக இருந்தால், இரண்டு வாரங்களுக்கு முன், அணிவதைத் தவிர்க்க வேண்டும்.

**இன்ட்ராலேஸ், பிளேடு பயன்படுத்தாத நூறு சதவிகித லேசர் சிகிச்சை என்பதால், லாசிக் முறையை மேலும் பாதுகாப்பானதாக ஆக்குகிறது!**

**லா**சிக் சிகிச்சைக்குப் பின் கண்களை ஒருமுறை பரிசோதிக்க வேண்டும். அடுத்து, கண்களை ஒரு சிறு கப் வைத்து மூடி விடுகிறார்கள். மறுநாளே இதைக் கழற்றிவிடலாம். இதற்குப் பிறகு சிறிது வலி, எரிச்சல், நீர்வடிதல் சிலருக்கு இருக்கலாம். இவை எல்லாம் மறு நாளே சரியாகிவிடும். மறு தினமே அன்றாட வேலைகளைக் கவனிக்கத் தொடங்கலாம். ஒரு வாரத்துக்குப் பிறகே கண்களில் நேரடியாகத் தண்ணீர் படலாம்.

லாசிக் சிகிச்சைக்குத் தேவைப்படும் மொத்த நேரம் பத்து நிமிடங்களே. ஆனால், அதற்கு முன்பு, கண் பரிசோதனைக்கு இரண்டு மணி நேரமாகும்!

**இ**ன்ட்ராலேஸ் வகை சிகிச்சையில்,

இன்னொரு படி முன்னேற்றம் அடைந்த, நவீனமுறை கையாளப்படுகிறது. பிளேடு பயன்படுத்தாத நூறு சதவிகிதம் லேசர் சிகிச்சை இது என்பதால், லாசிக் முறையை மேலும் பாதுகாப்பானதாக்குகிறது.

இந்தப் புத்தம்புதிய தொழில்நுட்பத்தால், உலகெங்கும் லாசிக் சிகிச்சையின் தரம், மேலும் உயர்ந்து வருவதற்கு ஓர் உதாரணமாக இருக்கிறது. உலோக பிளேடைவிட, லேசர் கதிர்வீச்சு அதிக பாதுகாப்பானது!'' என்கிறார்.

## கத்தியின்றி ரத்தமின்றி :

லாசிக் கருவி மூலம் சிகிச்சை அளிப்பதை, 2004ல் அமெரிக்க உணவு மற்றும் மருத்துவ நிர்வாக அமைப்பு அங்கீகரித்தது. இதுவரை இருபது லட்சம் பேருக்கு இன்ட்ராலேஸ் முறையில் சிகிச்சை அளிக்கப்பட்டிருக்கிறது. இதில் அமெரிக்காவில் மட்டும் 50 சதவிகிதம் பேர், 'இன்ட்ராலேஸ்' முறையைத்தான் பயன்படுத்திக் கொண்டார்கள் என்று ஒரு கருத்துக் கணிப்பு கூறுகிறது.



## சிகிச்சை முறை :

இன்ட்ராலேஸ் ஃபெம்டோசெகண்ட் லேசர், லாசிக் சிகிச்சையின் முக்கியப் பணியான, கருவிழியில் மூடி போன்ற அமைப்பை உருவாக்கப் பயன்படுகிறது. இது ஆபரேஷனின் முதல் பகுதி. எக்சைமர் லேசர் உபயோகித்து, கருவிழியின் அமைப்பைச் சீராக்குவது இரண்டாம் பகுதி.

இதில் முதல் பகுதி பணியை லாசிக் முறையில் செய்கிறபோது, மைக்ரோகேரடோம் என்ற பிளேடைப் பயன்படுத்த வேண்டும். லாசிக் முறையில் சிகிச்சை பெற்ற ஒன்றரைக் கோடிக்கு மேற்பட்ட நோயாளிகளில், கிட்டத்தட்ட 96 சதவிகிதம் பேர்களுக்கு வெற்றிகரமான சிகிச்சை கிடைத்திருந்தாலும், 4 சதவிகிதம் பேருக்குச் சின்னச்சின்ன பிரச்னைகள், எழுந்தன. அந்தச் சிறு சிறு பிரச்னைகளும் மைக்ரோகேரடோம் சம்பந்தப்பட்டவை.

இன்ட்ராலேஸ் முறையில், பிளேடைக் கையால் பிடித்துப் பயன்படுத்துவதற்குப் பதிலாக, கம்ப்யூட்டர் துணையுடன் சிகிச்சை செய்யப்படுகிறது. இம்முறையில் லேசர் கதிரை, விரும்புகிற இடத்தில், தேவையான ஆழத்துக்குக் கருவிழியில் விழச் செய்ய முடியும். ஒவ்வொரு முறை லேசர் ஒளி பாயும்போதும், அவ்விடத்தில் மிக நுண்ணிய குமிழ் போல உருவாகிறது. இன்ட்ராலேஸ் லேசர் ஒளியைக் கண் முழுதும் செலுத்தும்போது, குமிழ்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து, கருவிழியில் ஒரு மூடி



# மைனஸ் 15க்கு மேல் போனால்..?

பார்வைக் குறைபாடு அதிகமாக, மைனஸ் 15 அல்லது அதற்கு மேல் இருந்தால், அல்லது கார்னியா போதுமான அளவுக்குத் தடிக்காமல் இருந்தால், லாசிக் சிகிச்சை அளிக்கமுடியாது. அப்போது ஃபேக்கிக் ஐ.ஓ.எல்.தான் மிகச் சரியான முடிவு.

**ஃபேக்கிக் ஐ.ஓ.எல்.** - ஐ ஐ.சி.எல். என்றும் கூறுவார்கள். மைனஸ் அல்லது ப்ளஸ் என்று எல்லாவித பவர்களிலும் இது கிடைக்கிறது. இந்த ஐ.ஓ.எல். லென்சை, கண்ணுக்குள் இருக்கும் இயற்கையான லென்சுக்கு முன், வெகு எளிதான அறுவை சிகிச்சை மூலம் பொருத்தி விடுவார்கள். பார்வை உடனே நார்மலாகி விடும். இது உலகம் முழுதும் பரவலாக உபயோகப்படுத்தப்படும் சிகிச்சை முறை.

பின்னாளில் காடராக்ட் அறுவைச் சிகிச்சை தேவைப்படும்போது, வெகு எளிதாக இந்த லென்சை அகற்றி, வழக்க மான காடராக்ட் அறுவை சிகிச்சையை யும் மேற்கொள்ளலாம்.



* லாசிக் சிகிச்சை

போன்ற அமைப்பு உருவாகிறது. பார்வை சரிசெய்யப்படுவதற்கு முன், மூடி திறக் கப்பட்டுச் சிகிச்சை தரப்பட வேண்டிய சமமான கருவிழிப் பகுதி தெரிகிறது.

கருவிழியில் உருவாகும் மூடியின் குறுக்களவு, ஆழம், இணைப்புப் பகுதி அகலம் முதலியவை, சிகிச்சை பெறுகிற வரின் தேவைக்கு ஏற்ப உருவாக்கப்படு கின்றன. 'ஹிஞ்ச்' வைத்ததுபோல சன்ன லைத் திறந்து மூடுவது மாதிரி, இன்ட் ராலேஸ் லேசர் உருவாக்கும் மூடி பொருந் தும் வகையில், அதன் வட்டவடிவ ஓரத்தில் வசதி இருப்பதால், சிகிச்சைக்குப் பிறகு அதைத் திரும்பப் பொருத்துவது இயல்பாக அமைகிறது.

இன்ட்ராலேஸ் சிகிச்சை முறை சிறப்பான பார்வை தருவதை மருத்துவ ஆய்வுகள் நிரூபித்திருக்கின்றன. இன்ட் ராலேஸ் முறையில் சிகிச்சையின் முதல் பகுதி இருபது நொடிகளில் செய்யப்படுகிறது. லாசிக் சிகிச்சை முழுமைக்கும் ஆகும் நேரம் இருபது நிமிடங்கள். சிகிச்சை பெற்றவர் உடனடி யாகப் பார்க்க முடியும் என்பதுடன், சில மணி நேரங்களிலேயே மேலும் முன் னேற்றம் காணலாம்.

இப்படி இன்ட்ராலேஸ் லேசர் சிகிச்சை பல்வேறு சிறப்புகள் பெற்றிருப்பதால், லாசிக் சிகிச்சை பற்றி பயந்தவர்களும் இனி தயக்கம் இன்றி இவ்வகைச் சிகிச்சை மேற்கொள்ளலாம்.

**- இப்படிக்கு,**
**டாக்டர் டி.ராமமூர்த்தி**

"'ரிஃப்ராக்டிவ் எர்ரர்ஸ்' எனப்படும் பார்வைக் குறைபாடு முக்கியமானது. அதாவது, ப்ளஸ் பவர் அல்லது மைனஸ் பவர் பார்வைக் குறைபாடு. பள்ளிக்கூடத்தில் சேருவதற்கு முன்பே இதற்கான பரிசோதனையை மேற்கொள்வது நல்லது. அதிகபட்சக் குறைபாடு இருந்து, கவனிக்காமல் விட்டுவிட்டால்,

* ஸ்கீவிண்ட் ஐ



(* ஸ்டைஸ்)







# கண்ணைத் தாக்கும்

மாறுகண் எனப்படும் 'ஸ்க்விண்ட் ஐ' அல்லது சோம்பேறி கண் எனப்படும் 'லேஸி ஐ'யாக மாற வாய்ப்பு இருக்கிறது'' என்கிறார் டாக்டர் சித்ரா ராமமூர்த்தி.

● விழியின் வளர்ச்சி 18 வயது வரைதான். இதுபோன்ற குறைபாடுகள் 18 வயதுக்குள் நிலைத்துப் போய்விடுகின்றன. அப்புறம் என்ன! கண்ணாடியோ, கான்டாக்ட் லென்ஸோ போட்டுக்கொள்ள வேண்டியதுதான்!

● பவர் ஏறியிருக்கிறதா என்பதை அறிய வருடாந்தர பரிசோதனைகள் உதவும். 40 ஆவது வயதில் கிட்டப்பார்வை, அல்லது படிப்பதற்குக் கண்ணாடி தேவைப்படும்.

● அதிகமாக எல்லோரையும், ஒரே சமயத்தில் தாக்குவது வைரல் கஞ்சக்டிவைடிஸ். கண் சிவந்து, நீர் வடியும். மெட்ராஸ் ஐ என்றும் சொல்வார்கள். சிலருக்கு அலர்ஜியால் கண் சொறிச்சலும், அதனால் கண்களைக் கசக்குவதும் ஒரு தொல்லையாக ஏற்படும்.

● இப்போது எல்லா வயதினரிடையிலும் கண்களில் காணப்படும் குறைபாடு கண் வறட்சி. குறிப்பாக கம்ப்யூட்டரில் வேலை பார்ப்பவர்களுக்கு. சும்மா இமையை மூடி மூடித் திறந்துகொண்டிருக்க வேண்டும். ஏ.சி. அறைகளில் பணி செய்பவர்களுக்கும் இந்தக் கண் வறட்சி ஏற்படுவதுண்டு. காரணம், லோ ஹ்யூமிடிடி.

• கண்களில் ஏதாவது விழுந்து, கண்களைப் பிசைந்துகொண்டு தவிப்பார்கள். பரிசோதித்து, அதை நீக்கிவிடவேண்டும். கவனிக்காமல் விட்டுவிட்டால் இன்ஃபெக்ஷன் வந்துவிடும்.

• சிலருக்குக் கண்களில் 'ஸ்டைஸ்' எனப்படும் கட்டிகள் வரும். அவற்றுக்கு ஆன்ட்டிபயாடிக் டிராப்ஸ் மருந்துகள் டாக்டர் ஆலோசனைப்படி விட வேண்டும். சிகிச்சை செய்யாமல் விட்டுவிட்டால், கட்டி கண்ணிலேயே நிரந்தரமாகிவிடும்.

• லேபரட்டரியிலும் ரசாயனத் தொழிற்சாலையிலும் வேலை செய்பவர்கள் ஆஸிட் அல்லது அல்கலின் கண்களில் பட்டு அவதிப்படுவார்கள். முதலில் கண்களை நீரால் கழுவிவிட வேண்டும். பிறகு உடனடியாகச் சிகிச்சை பெற விரைய வேண்டும். ஒரு மணி நேரத்துக்குள் சிகிச்சை அளிக்காமல் விட்டுவிட்டால், பார்வையே போய்விடும்.

• ஆன்ட்டீரியர் பிளிஃப்ரைட்டிஸ் என்றொரு பாதிப்பு உண்டு. இமைகளின் அடியில் பொடுகு மாதிரி சேர்ந்துவிடும். அடிக்கடி கண்களைக் கழுவிக் கொண்டிருக்க வேண்டும். இல்லையென்றால், சில வேளைகளில் அங்கே கட்டி வரக்கூடும்! ○

* டாக்டர் சித்ரா ராமமூர்த்தி

# நோய்கள்!

கம்ப்யூட்டர் சம்பந்தமான வேலையில் ஈடுபடுபவர்களுக்கு, 'ட்ரை ஐ' குறைபாடு வர வாய்ப்பு அதிகம்!





# 'கண்'ணாடி விபத்துகள்

டாக்டர் சீனிவாச ராவ்

**'த ஐ ஃபவுண்டேஷ'னில் 'ஆஃப் தால்மோ பிளாஸ்ட்டி' சிகிச்சை அளிக்கும் மருத்துவர். விபத்தில் பாதிக்கப்பட்ட கண்களுக்குக் கொடுக்கப்படும் சிகிச்சைக் குறித்துப் பேசினார்...**

● விபத்துகளில் அடிபட்டு கண்கள் மிகவும் சேதமாகி இருக்கும்போதும் இமைகள் கிழிபட்டிருக்கும் போதும், மறுசீரமைப்பு அறுவைச் சிகிச்சை என்கிற ரீகன்ஸ்ட்ரக்டிவ் சர்ஜரி கைகொடுக்கிறது. கிழிந்துபோன இமையின் பகுதியைச் சரிசெய்ய, இதற்குக் காதிலிருந்து கார்ட்டிலெஜ் எடுத்து வைத்து, தைத்து விடுவோம். காதிலிருந்து எடுக்கமுடியாது போனால், அதேபோன்ற தகுதியுள்ள சதையை உடலின் வேறு பாகத்திலிருந்து எடுத்துத் தைத்து விடுவோம்.

● ஆஸிட் பட்டுப் பாதிப்புக்கு உள்ளான பகுதிக்கு, வாயிலுள்ள மியூகஸ் மெம்ப்ரேன் சதையைப் பயன்படுத்தி சரி செய்து விடுவோம்!

● விழி வெளியே துருத்திக்கொண்டிருக்கும். இதை 'ப்ராப்டோஸிஸ்' என்பார்கள். விழியின் பின்புறத்திலோ, பக்கவாட்டிலோ கட்டி இருந்தால், இப்படி இருக்கலாம். தைராய்டு சுரப்பி பிரச்னை காரணமாகவும் இருக்கலாம்.

● சிலருக்கு இமை மூடியிருக்கும். இன்னும் சிலருக்கோ இமை உள்ளே வளைந்திருக்கும். இதை 'என்ட்ரோபியன்' என்பார்கள். சிலருக்கு வெளியே, கீழே இறங்கி இருக்கும். இதை 'எக்ட்ரோபியன்' என்பார்கள்.



● கண்ணில் உள்ள நீர்ப்பையில் அடைப்பு இருந்தால், தண்ணீர் வந்துகொண்டேயிருக்கும். டயோட் லேசர் மூலமாக இதற்குச் சிகிச்சை அளித்துக் குணப்படுத்திவிடலாம்.

● சிலருக்குக் கண்களைச் சுற்றி (காக்கையின் பாதம் போல்) சுருக்கம் வந்து, இமை தாழ்வாக இறங்கி இருக்கும். இதை காஸ்மெட்டிக் சர்ஜரி முறையில் சரிப்படுத்த முடியும். இதற்கு blephero plasty என்று பெயர்.



* டாக்டர் சீனிவாச ராவ்

● இன்னும் சிலருக்கு ஒரு கண் சிறியதாகவும், இன்னொரு கண் பெரியதாகவும் இருக்கும். சிறிய கண்ணைச் சுத்தம் செய்து, ஒரு சாதனத்தை இம்ப்ளான்ட் செய்து, இரண்டு கண்களும் பார்வைக்கு ஒரே மாதிரி இருப்பதுபோல் செய்து விடுவோம்.

● சில குழந்தைகள் பிறக்கிறபோது,



துரதிர்ஷ்டவசமாக, கண் முழுவதும் மூடியிருக்கும். இதை கேப்பிலரி ஹெமாஞ்சியோமா என்று குறிப்பிடுவார்கள். இதற்கு இன்ட்ராலீஷனல் ஸ்டீராய்டு மருந்தை இஞ்செக்ட் செய்து, இமையைத் திறக்கச் செய்வோம்.

● குழந்தையின் முதல் வருடத்தில், இரண்டாம் மாதம் முதல் எட்டாம் மாதம் வரைதான் கண்களில் வளர்ச்சி இருக்கும். எனவே, அந்தக் காலகட்டத்தில்தான் இந்தச் சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும்.

● சில சமயங்களில் கண்களில் ஃப்ராக்ச்சர் ஏற்படுவதுண்டு. விழிகள் கீழே விழுந்துவிடாமல் தடுத்துவிட, ஒரு ப்ளேட்டைப் பொருத்திவிடுவோம். நல்ல சீரமைப்புக் கிடைத்துவிடும். எல்லாமே இரண்டு அல்லது இரண்டரை மணி நேரத்தில் முடிந்துவிடும். ○

## என்னைக் காணவில்லை!

**மேற்கூறிய சிகிச்சைகளை எடுத்துக்கொண்டவர்கள் எல்லாருமே கவுன்சலிங் தேவைப்படும் நோயாளிகள்.**

**தங்கள் முகம் கண்ணாடியில் முன்பு பார்த்தது போலவே சிகிச்சைக்குப் பிறகும் இருக்கும் என்று இவர்கள் எதிர்பார்ப்பார்கள். 'என்னைக் காணவில்லையே?' என்று தேடுவார்கள்! விபத்துகளில் சிக்கி, கண்களின் உள்புறமும், வெளிப்புறமும் சேதமடைந்த பின், பழையபடியே அவை இருக்க முடியாது என்பதை அவர்களுக்கு கவுன்சலிங் மூலம் எடுத்துச்சொல்வது அவசியம். தழும்புகளோ, காய வடுக்களோ தெரிந்தால், ஆரம்பத்தில் வருத்தமாக இருக்கலாம். ஆனால், பிறகு கண்களின் உபயோகம்தான் மிகப் பெரிது என்ற உணர்வு மேலிட, மனம் சமாதானமாகிவிடும்!**

# மூக்குக் கண்ணாடியல்ல... மூக்கு

ராஜீவ், மூத்த, அனுபவமிக்க ஆப்டோமெட்ரிஸ்ட். அவரோடு இணைந்து முப்பது இளம் ஆப்டோமெட்ரிஸ்ட்டுகள் பணிபுரிகிறார்கள். த ஐ ஃபவுண்டேஷன் மருத்துவமனை வளாகத்திலேயே கடை இருக்கிறது.

● 'கண்ணாடிதான் போட்டுக் கொள்வேன் அல்லது காண்டாக்ட் லென்ஸ்தான் அணிந்துகொள்வேன்' என்று முடிவாக இருப்பவர்கள், கவலையே பட வேண்டாம்.

● எங்கள் நவீன ஆப்டிகல் ஷாப்பில் நிறைய வெரைட்டிகள் கொட்டிக் கிடக்கின்றன. சாதாரண கிளாஸ்ஸின் இடத்தை, பாலிமர் ஃபைபர் 70-75 சதவிகிதம் பிடித்துக்கொண்டு விட்டது.

இந்தப் பிளாஸ்டிக் வகை கண்ணாடி, உடையாது. தண்ணீர் இதன் மேல் விழுந்தால்கூட, வழுக்கிக்கொண்டு ஓடிவிடும். இது இப்போது இந்தியாவிலும் கிடைக்கிறது. வரவேற்பும் நிறைய இருக்கிறது.

● கண்ணாடி அணிபவர்களில் இருபத்தைந்து வயது முதல் முப்பத்தைந்து வயதுள்ளவர்கள் இந்தியாவில் அதிகரித்து வருகிறார்கள். எனவே, இன்னும் ஐந்து வருடங்களில், இந்த நவீன பாலிமர், கண்ணாடியின் இடத்தைக் கிட்டத்தட்ட முழுதும் பிடித்துவிடும்.

● காண்டாக்ட் லென்ஸ் அணிவது





# பாலிமர்!

சிலர் விருப்பமாக இருக்கிறது. வருடத்தில் இதற்காக 3000 ரூபாய் வரை செலவழிக்கவும் இவர்கள் தயங்குவது இல்லை. பராமரிப்பும், அவ்வப்போது லென்ஸை மாற்றுவதும் செலவுதானே?

- கம்ப்யூட்டரில் அதிக நேரம் செலவிடுபவர்கள், ஆன்ட்டி ரிஃப்ளக்டிவ் கோட்டிங் செய்த கண்ணாடியை அணிகிறார்கள்.

- வெயிலை சமாளிக்க, சூரிய ஒளி கண்ணை நேரடியாகத் தாக்காமல் இருக்க, சிலர் ஃபோட்டோ க்ரோமேட்டிக் லென்ஸ் அணிகிறார்கள். ட்ரான்ஸிடியா என்ற பிராண்ட் இதில் சக்கைப்போடு போடுகிறது!

- கண்ணாடிகளின் விலை குறைந்தபட்சம் ரூ. 100 - 180 என்றால், அதிகபட்சம் எவ்வளவு தெரியுமா? ரூ.18,000. பிளாஸ்ட்டிக் (கார்ட்டியர்) ரூ.35,000!

**பாலிமர், இன்னும் குறுகிய காலத்தில் மூக்குக் கண்ணாடியின் இடத்தைப் பிடித்துவிடும்.**

OCT ஸ்கேன் என்றால், ஆப்டிகல் கோஹரன்ஸ் டோமோகிராஃபி. ரெட்டினாவின் ஒவ்வொரு பாகத்தையும் படம்பிடித்துக் காட்டும் கெட்டிக்காரக் கருவி, இந்த ஸ்கேனைச் செய்கிறது!

''டயபடிக் ரெடினோபதியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு, ரெட்டினா எந்த அளவுக்குப் பாதிக்கப்பட்டிருக் கிறது, என்ன மாறுபாடுகள் ஏற்பட்டிருக்கின்றன, ரெட்டினா திக்னஸ் (தடிமன்) எவ்வளவு, மேக்குலர் ஒடிமா எந்த அளவுக்கு இருக்கிறது, என்று அறிந்துகொள்ள இந்தக் கருவி உதவுகிறது!'' என்கிறார் டாக்டர் கவிதா, எம்.எஸ்.

பரிசோதனைக்கு உட்பட்டிருந்த கம்ப்யூட்டர் காட்டிற்று.

''க்ளகோமாவுக்கும் இந்த ஸ்கேனிங் கருவி பயன்படுகிறது'' என்கிறார்.

''ஒரு பெண்மணி, வயது சுமார் 48. காடராக்ட் (புரை நீக்கச் சிகிச்சை) செய்துகொள்ள வந்தார். பரிசோதனையில் பார்த்தால், ரெட்டினா பழுதாகி இருந்தது! 'எனக்குச் சர்க்கரை வியாதியே கிடையாது டாக்டர்!' என்றார். எடுத்துப் பார்த்தால், 322 என்று காண்பித்தது! பத்து வருடங்களாகவே அவருக்கு சர்க்கரைநோய் இருந்திருக்கிறது. ஆனால், அவருக்குத் தெரியவே இல்லை! ஹைபர் டென்ஷன் (உயர் இரத்த அழுத்தம்) இருந்தால் டயபடீஸை இன்னும் அதிகமாக்குவதோடு, ரெட்டினாவையும்

# விழியில் பாயும்

பாதிக்கும்!'' என்கிறார் டாக்டர் கவிதா.

பெண்மணியிடம், பச்சைப் புள்ளியையே பார்க்கச் சொல்கிறார்.

இரண்டு கண்களிலுமே பார்வை பழுதுபட்டிருக்கிறது. ஆனால், இடது கண்ணை விட வலது கண் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டிருந்ததை

முதலில் சர்க்கரையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து, பிறகு சிகிச்சை மேற்கொள்ளுமாறு, அந்தப் பெண்மணிக்கு ஆலோசனை வழங்கினார் டாக்டர் கவிதா.

ஃப்ளோரோசின் ஆஞ்சியோகிராஃபி செய்வோம் என்றீர்களே... எதற்கு?



**ஹைபர் டென்ஷன் இருந்தால், டயபடீஸை இன்னும் அதிகமாக்கும்; ரெட்டினாவையும் பாதிக்கும்**

* OCT ஸ்கேனிங்...

# உளி'!

என்று கேட்டால்,

''சாதாரண கண்களுக்கு ரெடினாவில் உள்ள இரத்தக் குழாய்கள் தெரியாது. இந்தப் பரிசோதனையில் அவை தெரியும். எந்த இடத்திலிருந்து திரவம் வெளியேறுகிறது என்று கண்டுபிடிக்கத்தான் ஆஞ்சியோகிராஃபி'' என்கிறார்.

**ப**த்து வருடங்களாக சர்க்கரை வியாதி உள்ள ஒரு பெண்மணி, ஒரு சிட்டிங் முடித்துவிட்டு, அடுத்த சிட்டிங் சிகிச்சைக்கு வந்திருந்தார்.

''லேசர் சிகிச்சையில் இரண்டு வகைகள் உள்ளன. ஒன்று நேரடியாக லேசர் கருவியிலிருந்தே கொடுப்பது. மற்றது, கையில் வட்ட வடிவக் கண்ணாடியை விழிகளுக்கு நேராகப் பிடித்துக்கொண்டு, அதன் வழியே லேசர் கதிர்களைப் பாதிக்கப்பட்ட பகுதிக்குச் செலுத்துவது. அப்படிச் செய்யும்போது, திரவம் கசியும் பகுதிகள் மூடப்படுவதோடு, புதிதாக வேறு இடத்தில் கசியாமலும் தடுக்க முடிகிறது.

லேசர் ஒளி கண்ணாடி வழியே பாயும்போது, டிக் டிக் டிக் என்று உளியோசை போலக் கேட்கிறது!

ஒவ்வொரு கண்ணுக்கும் சிகிச்சை செய்ய 10-15 நிமிடங்கள் ஆகின்றன. சிகிச்சையின் முழுப் பயனும் தெரிய 2 - 3 மாதங்கள் ஆகின்றன என்கிறார் டாக்டர் கவிதா எம்.எஸ்.

கண் பேசும் வார்த்தைகள்

# க்ளோகோமா - சைலன்ட்


டாக்டர் சித்ரா ராமமூர்த்தி

"க்ளகோமா என்பது உயிர்க்கொல்லி நோய் அல்ல. ஆனால், பார்வையைப் பாதிக்கக்கூடிய அமைதியான கொலையாளி! ஆரம்பத்தில் எந்த அறிகுறியும் தெரியாது. கடைசி நிலையில்தான் பார்வைக் குறைவு தெரியும்.

இதற்கு என்ன காரணம் என்றால், கண்ணில் அழுத்தம் (பிரஷர்) கூடிக் கொண்டே போய், படிப்படியாக ஆப்டிக் நெர்வ்ஸ் எனப்படும் விழி நரம்புகளை அழுத்தத் தொடங்குகிறது. அதனால் அவை பாதிக்கப்பட்டு, பார்வை குறைந்து போய் விடுகிறது'' என்கிறார் டாக்டர் சித்ரா ராமமூர்த்தி.

## தடுப்பு முறை :

கண் மருத்துவமனையில் முறையாக, கண்களைப் பரிசோதித்துக் கொள்வது ஒன்றுதான் வழி. கண்ணாடிக் கடைகளில் பரிசோதனை செய்து கொள்கிறபோது, இதன் அறிகுறிகளைத் தவற விடக்கூடும். இன்ட்ரா ஆக்யுலர் அழுத்தத்தை அவ்வப்போது பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படிச் செய்தால், பின்னால் வர இருக்கும் பெரும் அபாயத்தைத் தடுக்கலாம்.

## யார் யாரைத் தாக்குகிறது?

க்ளகோமா நோய் நடுத்தர வயதுக்காரர்களை, மைனஸ் பவர் உள்ள

## 'க்ளகோமா'வால் பாதிக்கப்பட்டவர்கள் நான்கிலிருந்து ஐந்து மாதங்களுக்கு ஒருமுறை, கட்டாயம் பரிசோதனைகள் செய்துகொள்ள வேண்டும்.

வர்களை, சர்க்கரை வியாதி உள்ளவர்களையும், அதிக இரத்த அழுத்தம் காரணமாக கார்டியோ வாஸ்குலர் பாதிப்புக்கு உள்ளானவர்களையும் தாக்குகிறது. ட்ரௌமா என்னும் அதிர்ச்சி நிலைக்கு ஆளானவர்கள், நீண்ட நாட்களாக ஸ்டீராய்ட் மருந்து உட்கொள்பவர்கள், பரம்பரையாகவே குடும்பத்தில் யாருக்காவது க்ளகோமா இருப்பவர்கள், இந்த நோயால் பாதிக்கப்படுகிறார்கள். பரம்பரையில் இந்நோய் இருப்பின் அக்குடும்பத்தவர் வருடந்தோறும் பரிசோதனை செய்துகொள்வது முக்கியம்.

# கில்லர்

### க்ளகோமா வகைகள் :

நேரோ ஆங்கிள் க்ளகோமா; ஓபன் ஆங்கிள் க்ளகோமா என்று இரண்டு வகைகள் உள்ளன. நேரோ ஆங்கிள் க்ளகோமாவில், கண்ணில் உள்ள திரவம் வெளியேறுவதற்கான சல்லடை போன்ற வழி அடைத்துக் கொள்வதால், கண்ணில் அழுத்தம் அதிகமாகிறது. இதனால் கண்களில் அதிகச் சிவப்பு, வலி, தலைவலி, தலை சுற்றல், பார்வை மங்குதல், வெளிச்சத்தைச் சுற்றி வானவில் போல நிறங்கள்... ஆகியவை வரலாம். அப்போது உடனடியாகக் கண் மருத்துவரை அணுக வேண்டும். ஏனென்றால், இத்தகைய அதிகக் கண் அழுத்தத்தால், நிரந்தரமாகப் பார்வைக் குறைவு ஏற்பட



லாம். கண் மருத்துவர் சிகிச்சை தொடங்கி, இன்ட்ரா ஆக்யுலர் அழுத்தத்தைக் குறைக்க முயலுவார். யாக் லேசர் மூலம் மாற்று வழிப்பாதை அமைத்து திரவம் வடியச் செய்து, கண்ணில் அழுத்தத்தைக் குறைப்பார்.

## பயன்படும் கருவிகள் :

க்ளகோமா பரிசோதனையில் ஸ்லிட் லேம்ப், கோனியோஸ்கோபி,



சியாட்ஸ் டோனா மீட்டர், அப்ளனேஷன் டோனோ மீட்டர்... முதலிய கருவிகள் பயன்படுகின்றன. நேரோ ஆங்கிள், ஓபன் ஆங்கிள் என்பவற்றில் வரும் ஆங்கிள் என்பது, கண்ணில் கருவிழியும் ஐரிஸ்ஸும் சந்திக்கும் இடம். இந்த ஆங்கிள் சிறிதாக இருந்தால் க்ளகோமா வரும் சாத்தியக்கூறு அதிகம்.

மிக முக்கியமானது இன்ட்ரா ஆக்யுலர் மதிப்பீடு. இன்னொரு பரிசோதனை ஆப்டிக் டிஸ்க் மதிப்பீடு. இது அழுத்தத்தின் பாதிப்பினால் உண்டாகும் மாறுதல்களை வெளிப்படுத்தி, எந்த அளவுக்குப் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது என்பதைக் காண்பிக்கும். இதற்கான எல்லா வசதிகளும் எங்களிடம் உள்ளன.

## கடைபிடிக்க வேண்டிய முறைகள் :

க்ளகோமா இருப்பது தெரிந்துவிட்டால், பிறகு OCT, GDX மற்றும் HRT பரிசோதனைகள் மூலம், ரெடினா எந்த அளவுக்குச் சேதமாகி இருக்கிறது என்பதை ஆரம்பத்தில் அறியவும், நோயின் வளர்ச்சி எந்த அளவுக்கு இருக்கிறது என்பதைக் கணிக்கவும் இயலும். க்ளகோமா வந்தவர் 4-5 மாதங்களுக்கு ஒருமுறை கட்டாயம் பரிசோதனைகள் செய்து கொள்ள வேண்டும். ஆப்டிக் நெர்வ் எனப்படும் விழி நரம்புகள் மோசமாகச் சேதமடைந்திருந்தால், அழுத்தத்தைக் கணிசமாகக் குறைக்க, ஆபரேஷன் செய்து, மாற்றுப் பாதை மூலம் திரவம் போக வழி வகுக்கலாம். ஆபரேஷனுக்குப் பிறகும் நோயாளியைத் தொடர்ந்து கண்காணித்து வரவேண்டும். ஏனென்றால் க்ளகோமா, சிகிச்சைக்குள்ளான கண்ணில் மிக மெதுவாகவும், சிகிச்சை செய்யப்படாத கண்ணில் மளமளவென்றும் வளரும். மூன்று வகைகளில் குணப்படுத்தலாம்.

1. 15 வகை நவீன சொட்டு மருந்து மூலமாக...

2. லேசர் சிகிச்சை மூலமாக....

3. இந்த இரு வகைகளாலும் பயன்தராத நிலையில் அறுவை சிகிச்சை மூலமாக.

# கம்ப்யூட்டர் தொல்லைகள்!

**தொடர்ந்து கம்ப்யூட்டரில் வேலை பார்க்கிறவர்களில் எண்பத்தெட்டு சதவிகிதப் பேருக்குக் கண் தொல்லைகள் உண்டாகின்றன.**

**பாதிப்புகளில் சில:**

★ தலைவலி ★ ஃபோகஸ் குறைபாடு ★ கண் எரிச்சலும் சோர்வும் ★ இரட்டை அல்லது கலங்கலான காட்சி ★ கழுத்து, தோள்பட்டை வலி...

ஆரோக்கியமான கண்கள், புத்தக எழுத்துகளைப் படிப்பதால் பாதிப்படைவதில்லை. கம்ப்யூட்டர் திரையில் நடுப் பகுதியில் மிகுந்த வெளிச்சமும், ஓரப் பகுதியில் வெளிச்சம் குறைந்தும்போவதால், கண்களை ஒரே சீரான அளவுக்கு ஃபோகஸ் செய்ய இயலாமல் போகிறது. அதனால் நம் கண்கள் தாமாக 'ஓய்வெடுக்கும் முனை'யை (Resting Point of Accommodation) நாடுகின்றன. மறுபடியும் திரைக்குப் பார்வையைத் திருப்பச் சிரமப்படுகின்றன. இப்படித் தொடர்ந்து செய்வதால், விழித் தசைகள் சோர்வடைந்து எரிச்சல் உண்டாகிறது.

கம்ப்யூட்டர் பார்வைக் கோளாறுகளைச் சரிசெய்யும் கண் மருத்துவரிடம் போனால், சரியான கண்ணாடி அணிந்துகொள்ள ப்ரிஸ்கிரிப்ஷன் பெற்றுக்கொண்டு, வசதியாக கம்ப்யூட்டர் பணிகளை எந்தத் தொல்லையும் இன்றி கவனிக்கலாம்.

கம்ப்யூட்டர் திரையும் தெளிவாகத் தெரியும். கண்கள் மறுபடி மறுபடி ஃபோகஸ் செய்ய வேண்டியதில்லை.

கம்ப்யூட்டரில் வேலை பார்ப்பவர்களுக்கு என்றே மல்ட்டி ஃபோகல் அல்லது பிராக்ரஸிவ் லென்சுகள், தொண்ணூறு சதவிகிதம் மிகச் சிறந்த தேர்வாக இருக்கின்றன.

அதிக வெளிச்சத்தில் வேலை செய்பவர்கள், மெலிதான வர்ணம் சேர்ந்த, அதாவது 'டின்ட்' செய்யப்பட்ட, லென்சுகளைப் பயன்படுத்தலாம். அவை அதிக வெளிச்சத்தைக் கொஞ்சம் குறைக்கும். ஆனால், அது நிரந்தர நிவாரணம் அல்ல.

**பாதுகாப்பு முறை:**

கிட்டத்தட்ட 70 சதவிகித கம்ப்யூட்டர் உபயோகிப்போருக்குப் பாதுகாப்புக் கண்ணாடி தேவைப்படுகிறது. பெர்க்லியில் உள்ள கலிஃபோர்னியா பல்கலைக் கழக ஆய்வுப்படி, குழந்தைகளில் 25% - 30% பேர், கம்ப்யூட்டர் பாதுகாப்புக் கண்ணாடியால் பயனடைகிறார்களாம்.

அச்சில் படிப்பது போல் அல்ல, கம்ப்யூட்டர் திரை காரெக்டர்களைப் படிப்பது. அந்த காரக்டரின் கூறுகளை (pixels) கண்கள் ஃபோகஸ் செய்யும்போது, கட்டாயம் பார்வையைப் பாதிக்கிறது. இவர்கள் கம்ப்யூட்டர் விஷன் ஸ்பெஷலிஸ்ட்டை அவசியம் சந்தித்து, ஆலோசனை பெறுவது நல்லது!



# திருப்பூரின்

டாக்டர் ராமமூர்த்தி, திருப்பூரிலும் த ஐ ஃபவுண்டேஷனின் கிளையை நடத்தி வருகிறார். ''ஏன் இன்னொரு மருத்துவமனை?'' என்று டாக்டரிடம் விசாரித்தோம்...

''டாக்டர் கே.எஸ். திருமூர்த்தி 1930களில், திருப்பூரில் மிகப் பிரபல மான மருத்துவர். மிகவும் மதிக்கப்பட்ட டாக்டரும் கூட. மாட்டுவண்டியில் போய் மருத்துவம் பார்த்து விட்டு வந்தவர்.

பொதுமக்களின் நலன் கருதி, அவிநாசியிலும் ஒரு க்ளினிக் வைத்திருந்தார்.

அந்தக் காலத்தில் சென்னை டாக்டர்களான சஞ்சீவி, நஞ்கண்டராவ், போன்றவர்களுக்கு இணையாகப் பேசப்பட்டவர்.




டாக்டர் திருமூர்த்தி வேறு யாருமல்ல என் தாத்தாதான். அவர் பெயரில் தான் திருப்பூர் கண் மருத்துவமனையை நடத்தி வருகிறேன்!'' என்று கூறினார் டாக்டர் ராமமூர்த்தி.

- கோயமுத்தூரில் உள்ள 'தி ஐ ஃபவுண்டேஷன்' மருத்துவமனையின் கிளை போல இயங்கிவருகிறது திருப்பூரின் திருமூர்த்தி நேத்ராலயா 'ஐ ஃபவுண்டேஷன்'. ரயில் நிலையத்தின் அருகேயே உள்ள, வசதிகள் நிறைந்த மருத்துவமனை.
- கோவை ஐ ஃபவுண்டேஷன் வளாகத்தில், என்னனென்ன வசதிகள் இருக்கின்றனவோ, அத்தனை வசதிகளும் இங்கேயும் இருக்கின்றன.
- லாசிக், சையாப்டிக்ஸ் போன்ற எல்லா நவீன கண் அறுவைச் சிகிச்சைகளும் இங்கேயும் நடக்கின்றன.
- கருவிழி மாற்று அறுவைச் சிகிச்சை, க்ளகோமா, ரெடினா பிரச்னைகள் எல்லா வகை கண் நோய்களுக்கும் இங்கே சிகிச்சை அளிக்கப்படுகிறது!'' என்கிறார் திருப்பூர் மருத்துவமனைக்குப் பொறுப்பு

ஏற்றுக்கொண்டிருக்கும் கண் மருத்துவர் டாக்டர் ஜே. ரவி.

● திருமூர்த்தி நேத்ராலயாவின் ஜெனரல்வார்டுகள் இங்கே இருக்கின்றன. இலவச அறுவைச் சிகிச்சைகளும், சலுகை அடிப்படையில் செய்யப்படும் அறுவைச் சிகிச்சைகளும் இங்கே செய்யப்படுகின்றன.

● வெள்ளிக்கிழமை தோறும் டாக்டர் ராமமூர்த்தி கோவையிலிருந்து இங்கு வந்துவிடுவார். அன்று முழுதும், அவரே எல்லா சர்ஜரிகளையும் இரவு எத்தனை நேரமானாலும் இருந்து முடித்து விட்டுத்தான் போவார்!'' என்கிறார் டாக்டர் ரவி.

இங்கேயும் திறமை வாய்ந்த கண் மருத்துவர்கள் பணி புரிகிறார்கள்.

# 'கண்'!

டாக்டர் நரேந்திரன், டாக்டர் ரவியோடு இணைந்து அறுவைச் சிகிச்சைகள் செய்வது தவிர, க்ளகோமா நோயாளிகளுக்கும் சிகிச்சையும் அளிக்கிறார். கருவிழி (கார்னியா) தொடர்பான பிரச்னைகளை டாக்டர் தாதாபீர் கவனிக்கிறார். டாக்டர் ஷைலஜா, ரெடினா சார்ந்த பாதிப்புகளுக்குச் சிகிச்சை செய்கிறார்.

● வசதியான ஆபரேஷன் தியேட்டர்கள், நோயாளிகள் ரெக்கார்ட் அறை, வி.ஐ.பி.-களுக்குத் தனி கன்சல்டேஷன் அறை, முகாம்களிலும், தனியாகவும் அறுவைச் சிகிச்சைகளை இலவசமாகச் செய்துகொள்ளும் நோயாளிகள் தங்க முப்பதுக்கும் மேற்பட்ட படுக்கைகள்!

● ''ஞாயிறு இலவச முகாம் நடத்தினால், திங்கள் அன்று இலவச வார்டு கிட்டத்தட்ட நிரம்பிப் போய்விடும்!'' என்கிறார் டாக்டர் ரவி.

● மருத்துவர்கள் குடும்பத்துடன் தங்க வசதியான விடுதி, மருத்துவமனையின் மேலேயே இருக்கிறது. அதனால் எந்த உடனடி சிகிச்சை, எமர்ஜென்சி சிகிச்சையும் செய்ய முடிகிறது.

● ''எந்த நோயாளியும், சிகிச்சை பெற முடியாமல் இருந்துவிடக் கூடாது என்பது தான் என் நோக்கம். அதனால் தான் கட்டணமே செலுத்த இயலாதவர்களுக்கு இலவசமாக அறுவைச் சிகிச்சை அளிக்கிறோம். ஒரு கட்டணம் செலுத்துபவர்களுக்குச் சலுகையும் அளித்து வருகிறோம்!'' என்கிறார் டாக்டர் ராமமூர்த்தி.

● இதே இடத்தில் கண்ணாடிக் கடையும் மருந்துக் கடையும் இருக்கின்றன. சௌகரியம்தானே?!

''கட்டணமே செலுத்த இயலாதவர்களுக்கு இங்கு இலவச கண் அறுவை சிகிச்சை செய்கிறோம்.''



## பயோ-டேட்டா

* பள்ளிப் படிப்பை தில்லியிலும், மருத்துவப் படிப்பை ஜிப்மரிலும் முடித்த இவர், மருத்துவ மேற்படிப்பை மறுபடியும் (எய்ம்ஸ்) தில்லியில் முடித்தவர். சங்கரநேத்ராலயாவில் பயிற்சி பெற்று, சொந்த ஊரான திருப்பூரில் மருத்துவ சேவையை ஆரம்பித்தவர்.
* 85-ல் கோவையில் ஒரு பிளாஸ்ட்டிக் சர்ஜனுடன் 200 சதுர அடி அறையில் பிராக்டீஸ் தொடங்கினார். பிறகு 600 சதுர அடி அறைக்கு உயர்வு!
* 91-ல் திருப்பூரில் சின்னதாக ஒரு மருத்துவமனை. 95ல் கோவை ஆர்.எஸ். புரம் சுப்பிரமணியம் சாலையில் 10,000 சதுர அடியில் கண் மருத்துவமனை. (இப்போது அது ராஜலட்சுமி நேத்ராலயா என்ற இலவச மருத்துவமனை)
* 2003-ல் ஆர்.எஸ்.புரம் திவான் பகதூர் ரோடில் முழுமையான நவீன கண் மருத்துவ மனை. திருப்பூரில் ரயில் நிலையம் அருகே நவீன கண் மருத்துவமனை. 16 மருத்துவ நிபுணர்கள்; 30 ஆப்டோமெட்ரிக்குகள் உட்பட சுமார் 250 ஊழியர்களுடன்!
* சமீபத்திய பெருமைமிகு பொறுப்பு: இந்திய கண் மருத்துவ நிபுணர்கள் அமைப்பின் சயன்டிஃபிக் கமிட்டி சேர்மன். மூன்று ஆண்டுகளுக்கு, சர்வதேச கண் மருத்துவத்துறை அமைப்புகளுடன் தொடர்பு, 12,000 இந்திய கண் மருத்துவர்களோடு தொடர்ந்து செயல்பாடு; அமைப்பின் அன்றாட செயல்பாடு களை நிர்வகித்தல்; கண் மருத்துவ அறிவியல் தொடர்பான விவரங்களை சேகரித்தல்; நிபுணர்களின் கருத்தரங்குகளை ஏற்பாடு செய்தல்... போன்ற பொறுப்புகள் சேர்மனுக்குரியவை.
* தொடர்ந்த அறுவைச் சிகிச்சைகளுடன், உள்நாட்டு - வெளிநாட்டுப் பயணங் கள்; சொற்பொழிவுகள்; பிற மருத்துவர்களுக்குப் பயிற்சிகள்; மருத்துவ இதழ்களில் கட்டுரைகள்.
* ட்ரெக்கிங் என்னும் மலை ஏறும் ஆர்வலர். மவுண்ட் எவரெஸ்ட், ஆல்ப்ஸ், பிளாக் பாரஸ்ட், என்று உலகச் சிகரங்களிலும் உழைத்து ஏறியவர்!

பேட்டி, கட்டுரைகள் : சாருகேசி



# உலகச் சிகரங்களில்

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.